

# ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சகம்

## விளக்கவுரை - முதற்பாகம்



ஸ்ரீ சாது ஓம்
அருளியது

# ஸ்ரீ
# அருணாசல ஸ்துதி பஞ்சகம் விளக்கவுரை

முதல் பாகம்

ஸ்ரீ சாது ஓம் அருளியது

ஸ்ரீ அருணாசல ரமண புக் டிரஸ்ட்
11-B மணக்குள விநாயகர் தெரு,
ஸ்ரீ ரமண நகர்,
திருவண்ணாமலை – 606 603.

1998

முதற் பதிப்பு 1998

இந்நூலாசிரியரின் இதர நூல்கள் :

1. ஸ்ரீ ரமண வழி
2. ஸ்ரீ ரமணோபதேச நூன்மாலை
- விளக்கவுரை
3. உபதேச உந்தியார்
- விளக்கவுரை
4. ஸ்ரீ ரமண சகஸ்ரம் என்னும் ஞானப் பிரார்த்தனை
- உரையுடன்
5. ஸ்ரீ ரமண வருகை - உரையுடன்
6. ஸ்ரீ அருணாசல வெண்பா - உரையுடன்
7. சாதனை சாரம் (அச்சில்)

அச்சிட்டோர் :- ஸ்ரீராம் பிரிண்டர்ஸ்,
திருவண்ணாமலை.

# பதிப்புரை

தன்னகத்தே அருணாசல மகாத்மியடத்துடன் கூடிய அருணாசல அக்ஷரமணமாலை, அருணாசல நவமணிமாலை, அருணாசல பதிகம், அருணாசல அஷ்டகம், அருணாசல பஞ்சகம் ஆகிய ஐந்து அங்கங்களைக் கொண்ட அருணாசல ஸ்துதி பஞ்சகம் என்ற இவ்வற்புத துதி நூல் ஸ்ரீ ரமணபகவான் மௌன பாவத்திலிருந்து மாறி பேசத் தொடங்கிய ஆதி நாட்களில் பரபக்தியின் வெளிப்பாடாய் அவர் அருளியதாகும். இவற்றுள் மணிமகுடமாக விளங்குவது அகர வரிசையில் ஒவ்வொரு அக்ஷரத்தையும் ஆரம்பமாகக் கொண்டு பாடப்பட்ட நூற்றியெட்டு பாடல்களால் தொகுக்கப்பட்ட அக்ஷரமணமாலையாகும். எனவே அக்ஷரமணமாலைக்கு மட்டிலும் விரிவான விளக்கவுரையும், மற்றைய பாடல்களாகிய அருணாசல மகாத்மியம், அருணாசல நவமணிமாலை, அருணாசல பதிகம், அருணாசல அஷ்டகம், அருணாசல பஞ்சரத்னம் ஆகியவற்றுக்கு பொழிப்புரை மட்டிலும் தருவதாக உத்தேசிக்கப்பட்டது.

மலைமீது ஸ்ரீ பகவான் ஒரு சில தொண்டர்களுடன் தங்கியிருந்த பொழுது வெளியே சென்று பிக்ஷையெடுக்கும் போது பாடுவதற்கு ஏற்ற ஒரு ஸ்தோத்திரப்பாடலைப் புனைந்து தருமாறு அவ் வன்பர்கள் கேட்டுக் கொண்டபோது வாளாவிருந்த பகவான் பின்னர் ஒரு முறை பக்தர்களுடன் கிரிபிரதிக்ஷிணம் செய்கையில் பரபக்தியின் ஆவேச வசப்படவே அவரது உள்ளத்தின் அடித்தளத்தினின்று பாடல்கள் ஸ்தோத்திர ரத்தினங்களாக மணிமணியாகப் பொங்கி வரத் தொடங்கின. அதனை உடன் சென்ற அன்பர்கள் எழுதிக் கொண்டனர். இவ்வாறு உருப்பெற்றதே இவ் வக்ஷரமணமாலையாகும்.

இது நூல்வடிவில் அச்சிட்டு வெளிவந்த பிறகு ஸ்ரீ முருகனார் இதிலுள்ள சில பாக்களுக்கு விளக்கம் கேட்ட போது "இதனைப் பாடியவன் அப்போதே போய் விட்டான்; இப்போது நான் ஏன் அதற்குப் பொருள் காண மண்டையைப் பிய்த்துக் கொள்ள வேண்டும்" என்று ஸ்ரீ பகவான் சொல்லிவிட்டார். கர்த்ருத்துவம் முற்றும் அழிந்து பகவானால் உயரிய பரபக்திநிலையில் வெளிப்பட்ட இப் பாடல்களுக்குத் தான் கர்த்தா என்று எவ்வாறு பாவிக்க இயலும். இப் பாடல்களுக்கு விளக்கம் கேட்டபோது "ஸ்ரீ பகவான் பக்திப் பெருக்குடன் இப் பாடல்களைப் பாராயணம் செய்வதுதான் இதற்கான பொருளாகும்" என்று சொன்னார். திருவாசகத்திற்குப்

பொருள் கேட்ட அன்பர்களை மாணிக்கவாசகப் பெருமான் சிதம்பரம் நடராஜர் சந்நிதிக்கு அழைத்துச் சென்று, "அதற்கு - இது தான் பொருள்" என்று நடராஜப் பெருமானை சுட்டிக் காட்டி மறைந்தனர். இதே போன்று அருணாசலன் மீது கொண்ட இறைக் காதலின் வேகத்தில் பகவானின் உள்ளத்தில் பிறிட்டு எழுந்த காதற் கனி மொழிகளாகிய இவ் வற்புதப் பாடல்களுக்குப் பொருள் அவ் வருணாசலப் பரமனே யாகுமன்றோ? எனவே இதனை விரித்து விளக்கிக் கொண்டிருப்பது தேவையற்றது என்று ஸ்ரீ பகவான் வாளாயிருந்து விட்டார்.

மேலும் இப்பாடல்களின் சொல்லமைப்புக்கள் கற்றறிந்த புலவர்களையும் வியக்க வைப்பன வாகும். ஸ்ரீ முருகனாரும் பகவானிடம் வரும் முன்னரே இப்பாடல்களின் அமைப்பைக் கண்டு அதிசயித்தார்.

பக்தி மணம் வீசி அருட் தேன் பிலிற்றும் இவ்வற்புத பாமாலையில் சொல் மலர்கள் தொடுக்கப் பட்டிருக்கும் பாங்கு கருத்தைக் கொள்ளை கொள்ளும் வகையில் அற்புதமாக அமைந்துள்ளது எனலாம். நடுவில் ஒரு தீபச் சுடரை வைத்து அதன் இருபுறமும் இரு முகம்பார்க்கும் கண்ணாடிகளை வைத்தால் அவ்விரு கண்ணாடிகளிலும் தீப வரிசைகள் முடிவின்றி பற்பல தெரியும். அதே போன்று இப்பாடல்களை மனனம் செய்யச் செய்ய ஒவ்வொரு முறையும் பற்பல பொருள்கள் மனத்தில் முடிவின்றி தோன்றிக் கொண்டேயிருக்கும். சொற்களுடைய அமைப்பின் நேர்த்தி அவ்வாறுள்ளதைக் கற்றறிந்தோர் கண்டு வியக்கின்றனர். இதனால்தான் இப்பாடல்களுக்கான விளக்கத்தை அளித்து அதனை ஒரு வரையறைக்குட்படுத்த பகவான் விரும்பவில்லை போலும். இல்லாவிடில் உள்ளது நாற்பது, உபதேச வுந்தியார் போன்ற சாஸ்திர நூல்களுக்கு சிலருக்கு விளக்கமளித்த பகவான் அக்ஷரமண மாலையாகிய துதி நூலுக்கு மட்டிலுமே விளக்க மளிக்காததற்குக் காரணத்தை நாம் மேற்கண்டவாறு யூகித்துக் கொள்ளலாம்.

இவ்வாறெல்லாம் பற்பல உரைக்கினும் இப்பாடல்களை பாராயணம் செய்வோர் பொருளுணர்ந்து பாடவே விரும்புவர் என்பதால் ஸ்ரீ முருகனார் இப்பாடலுக்கு விருத்தியுரை எழுதியுள்ளார். அவரைப் பின் தொடர்ந்து ஸ்ரீ நடனானந்தரும் இப்பாடலுக்குப் பொழிப்புரை எழுதியுள்ளார். இவ்விருவரது உரைகளும் ஸ்ரீ ரமணாச்ரமத்தாரால் பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன.

ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகள் மறைவுக்குப் பிறகு அவர் விட்டுச் சென்றுள்ள பலவகைப்பிரதிகளைப் பார்வையிடும் போது அக்ஷரமண மாலையின் முதல் 13 பாடல்களுக்கு அவர் கைப்பட விரிவுரையும் மற்ற பாடல்களுக்குப் பின்னல் விரிவு படுத்துவதற்குத் தக்கவாறு குறிப்புகளும் எழுதிவைத்திருந்ததைக் கண்டோம். இக்குறிப்புகளைப் படிக்கப் படிக்க ஸ்ரீ மைக்கேல் ஜேம்ஸ் என்ற அன்பருக்கு விளக்கிச் சொல்லியிருந்த பல கருத்துக்கள் அவர் மனதில் தொடர்ந்து நினைவிற்கு வரவே அவற்றை அவர் ஆங்கிலத்தில் எழுதத் தொடங்கினர். இவற்றிலிருந்து சுவாமிகளின் விளக்க உரையாக இந்நூலை உருவாக்கினேம். இதனிடையில் பல இடையூறுகளும் தவிர்க்கமுடியாத தாமதமும் ஏற்பட்டதால் நூல் வடிவில் வெளியிடுவதற்குத் தக்க விதத்தில் தயாராகியுள்ள வரையிலாவது அதாவது 44 பாக்கள் வரை இனியும் தாமதிக்காமல் முதல் பாகமாக வெளியிட முடிவு செய்தோம். இவ்வாறு இவ்விளக்க உரை முதல் பாகமாக வெளிவருகின்றது.

ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளிடம் எல்லையற்ற பக்தியும் ஈடுபாடும் கொண்ட Prof. K. சுப்ரமணியம் அவர்கள் சுவாமிகளின் எல்லா பாடல்களையும், விளக்க உரைகளையும் நூல் வடிவில் கொண்டுவர மிகுந்த ஆவல் கொண்டு எங்களுக்கு ஊக்கம் அளித்துள்ளார். இந்த நூல் வெளிவரும் போது எங்களின் ஒருவரான அன்னர் இதனைக் காண இயலாது எங்களை விட்டு பிரிந்து அருணசலரமண பரமனின் திருவடி சேர்ந்து விட்டார். அவரது உதவிகளை நன்றிப் பெருக்குடன் இச்சமயத்தில் நினைவு கூருகிறேம்

மேலும் கையெழுத்துப் பிரதிகளை அச்சுக்கு ஏற்றவாறு தயாரித்தும் அச்சுப் பிரதிகளைச் சரிபார்த்தும் இன்னும் பலவிதத்தில் உதவிய நண்பர்கள் திருவாளர்கள் M.V. ரமணசலம், M.V. சபாபதி, M. சங்கரன், P. லட்சுமணன் ஆகிய அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

ஏனைய 66 பாக்கள் கொண்ட அக்ஷரமணமாலை, அருணசல நவமணிமாலை, அருணசல பதிகம், அருணசல அஷ்டகம், அருணசல பஞ்சரத்னம், ஆகியவற்றின் உரைகள் இந்நூலின் இரண்டாம் பாகமாக எத்தடையுமின்றி விரைவில் வெளிவர ஸ்ரீரமண திருவருள் நடத்திவைப்பதாக.

மா. கோவிந்தராசன்.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய



ஸ்ரீ ரமண பகவான்

அருளிய

# ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சகம்



# ஸ்ரீ ரமண சற்குரு தியானம்*

(அறுசீர் விருத்தம்)

அருவுரு வமைந்து ஞான
        வருளிரு நயன மேந்திப்
பொருளெது வெனப்போந் தார்க்குப்
        புக்கக மாகி யன்பர்
மருளுறு மயக்க நீக்கும்
        மகாகுரு ரமண மூர்த்தித்
திருவடி கண்ணி லொற்றிச்
        சிந்தையிற் றியானஞ் செய்வாம்.

அன்வயம் (பதம் பிரித்துக் கொண்டுகூட்டல்): அரு உரு அமைந்து, ஞான அருள் இரு நயனம் ஏந்தி, 'பொருள் எது?' எனப் போந்தார்க்குப் புக்ககம் ஆகி, அன்பர் மருள் உறும் மயக்கம் நீக்கும் மகாகுரு ரமண மூர்த்தித் திருவடி கண்ணில் ஒற்றி சிந்தையில் தியானம் செய்வாம்.

பொழிப்புரை: உருவற்ற பரம்பொருள் ஞானத்தையும் அருளையும் இருகண்களாயுடையதாய் உலக மகாகுருவான

---

*இப் பாடலும் அடுத்து வரும் பாடலும் இவ் வுரையாசிரியர் ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளால் இயற்றப்பட்டவையாம்.

ஸ்ரீ ரமண பகவான் என்னும் மனிதத் திருக்கோலம் பூண்டு வந்து, 'மெய்ப்பொருள் எது?' என்று அறிய விரும்பி தன்னை வந்து அடைந்த பக்தர்களுக்குப் புகலிடமாக இருந்து கொண்டு, அப் பக்தர்கள் அஞ்ஞானத்தால் மயங்கும் மயக்கத்தை அழித்தருளுகின்றது. அந்த ரமண சற்குரு மூர்த்தியின் இரு திருவடித் தாமரைகளையும் நம் கண்களில் ஒற்றிக்கொண்டு மனத்தில் தியானிப்போமாக.

# ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சக மாண்பு

(எண்சீர் விருத்தம்)

ஒருநான்கெனு மறைநூன்முடி வுணராய்குறை விலையாம்
உலகோர்புகழ் சதுர்யோகமு முணராய்குறை விலையாம்
திருமால்சிவ பெருமான்பணிந் திலையோகுறை விலையாம்
சிவையைங்கரன் குமரன்றுதித் திலையோகுறை விலையாம்
கருணாகர முனிநாயக னருணாசல ரமணன்
கனிவோடருட் டிருவாய்மலர் கதிநாயக வமுதாம்
அருணாசல ஸ்துதிபஞ்சக மனனஞ்செய வறியின்
அதுபோதுமின் றதுபோதுநீ யதுவாமறி வுறவே.

அன்வயம்: ஒரு நான்கு எனும் மறைநூல் முடிவு உணராய்? குறைவு இலையாம். உலகோர் புகழ் சதுர் யோகமும் உணராய்? குறைவு இலையாம். திருமால் சிவபெருமான் பணிந்து இலையோ? குறைவு இலையாம். சிவை ஐங்கரன் குமரன் துதித்து இலையோ? குறைவு இலையாம். கருணாகர முனிநாயகன் அருணாசலரமணன் கனிவோடு அருள் திருவாய்மலர் கதி நாயக அமுது ஆம் 'அருணாசல ஸ்துதி பஞ்சகம்' மனனம் செய அறியின், அது போதும்; 'நீ அது' ஆம் அறிவு உறவே இன்று அது போதும்.

பொழிப்புரை: ஒப்பற்ற நான்காகக் கூறப்படும் வேதங்களின் முடிவாகிய வேதாந்தத்தை (அத்வைத சாஸ்திரங்களை) நீ வாசித்தறிந்த தில்லையா? ஆயினும் அதனால் ஒரு குறைவும் இல்லை. உலக மக்கள் புகழ்ந்து போற்றும் கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்னும் நான்கு யோகங்களில் எதுவொன்றையும் நீ கற்றதில்லையா? ஆயினும் அதனால் ஒரு குறைவும் இல்லை. விஷ்ணுவையோ சிவ பிரானையோ நீ உபாசித்ததில்லையா? ஆயினும் அதனால் ஒரு குறைவும் இல்லை. தேவியையோ, விநாயகரையோ, முருகனையோ நீ போற்றித் தொழுததில்லையா? அதனாலும் ஒன்றும் குறைவு நேர்ந்துவிடாது. கருணை வள்ளலும்

மஹர்ஷிகளுக் கெல்லாம் தலைவரானவருமான ஸ்ரீ அருணசலரமண பகவான் உள்ளம் உருகும்படி பக்தியுடன் திருவாய்மலர்ந்தருளியதும், உபாசனு மார்க்கங்கள் யாவற்றிற்கும் நாயகமான அருளமிர்தமுமான 'ஸ்ரீ அருணசல ஸ்துதி பஞ்சகத்'தை தினமும் மனனம் செய்ய அறிவாயாகில், அது ஒன்றே போதும்; 'பிரம்மமே நீ' என்கிற அனுபவ ஞானத்தை நீ அடைவதற்கு இன்று அது ஒன்றே போதும்.



# ஸ்ரீ அருணாசல சிவம்

(குறள்)

**கருணார் ணவமாய்க் கருதக் கதிநல்**
**கருணா சலசிவமீ தாம்.**

**அன்வயம்:** கருணா ஆர்ணவமாய், கருத கதி நல்கு அருணாசல சிவம் ஈது ஆம்.

**பொழிப்புரை:** தான் கருணைக்கடலா யிருந்து கொண்டு, தன்னை நினைப்பவர்களுக்கு முக்தியைத் தருவ தாகிய ஸ்ரீ அருணாசலசிவ சொரூபமாவது இதுவே யாகும்.

**குறிப்பு:** ஸ்ரீ பகவான் இயற்றிய இக் குறள் வெண்பா அருணாசல சிவமாகிய அவரது சற்குருவின்மீது அருளப் பட்ட தியானப் பாடலாகக் கருதத் தக்கதுமாகும். இதன் மறுபொருள் 'தன்னைக் கருணைக்கடலாகக் கருதுவோர்க்கு முக்தியைத் தருவதாகிய ஸ்ரீ அருணாசலசிவ சொரூபம் இதுவே யாகும்' என்பதாம்.

# ஸ்ரீ அருணாசல தத்துவம்*

(கலி விருத்தம்)

**புத்தியகங் காரம் புலம்பெய்த வோங்கு**
**மத்தியித யந்தான் மறையவனு மாலு**
**நத்தவறி யாது நலங்குலைய வன்னூர்**
**மத்தியொளி ரண்ணு மலையினது மெய்யே.**

**அன்வயம்:** புத்தி அகங்காரம் புலம்பு எய்த ஓங்கும் மத்தி இதயம் தான், மறையவனும் மாலும் நத்த அறியாது நலம் குலைய அன்னூர் மத்தி ஒளிர் அண்ணுமலையினது மெய்யே.

**பொழிப்புரை:** பிரம்மாவும் விஷ்ணுவும் (முறையே அதனுடைய முடி அடிகளை) அடைய முடியாமல் மேன்மை குன்ற, அவ் விருவரின் இடையிலே ஜோதி சொரூபமாய் எழுந்து விளங்கிய அண்ணுமலையின் உண்மையாவது (தத்துவமாவது) என்னவெனில், புத்தியும் அகங்காரமும் (தன்னைத் தேடிக் காண முடியாமல்) புலப்பம் அடையவே (வருந்தி ஓய்ந்த விடத்தில்) பிரகாசிக்கின்ற நடுப்பொருளாகிய இதயமே (ஆன்மாவே) தான்.

---

*பிரஜோத்பத்தி ௵ (1931) தீபதர்சனத்தன்று, அருணாசல தத்துவத்தை எழுதின மு. க. முருகனார் வேண்டுகோட் கிணங்க, தீபதர்சனதத்துவம் பகவானால் அருளப்பெற்றது.

# தீப தர்சன தத்துவம்

இத்தனுவே நானு மெனுமதியை நீத்தப்
புத்தியித யத்தே பொருந்தியக நோக்கா
லத்துவித மாமெய் யகச்சுடர்காண் கைபூ
மத்தியெனு மண்ணு மலைச்சுடர்காண் மெய்யே.

**அன்வயம்:** 'இத் தனுவே நான் ஆம்' எனும் மதியை நீத்து, அப் புத்தி அக நோக்கால் இதயத்தே பொருந்தி அத்துவிதம் ஆம் மெய் அகச்சுடர் காண்கை, பூ மத்தி எனும் அண்ணுமலைச் சுடர் காண் மெய்யே.

**பொழிப்புரை:** பூமியின் இதயஸ்தானம் என்று சொல்லப்படுகின்ற அண்ணுமலையின் தீபதரிசன உண்மை யாதெனில், 'இந்தச் சரீரமே நாளுகும்' என்று அபிமானிக்கும் தேகாத்மபுத்தியை விட்டு, அந்தப் புத்தியானது தன்னை நாடும் உள் நாட்டத்தால் இதயத்திலே பதிக்கப்பெற்று இரண்டற்றதாகிய சத்திய ஆத்ம ஜோதியை (சொரூப வொளியை)த் தரிசிப்பதே யாகும்.

**விளக்கவுரை:** இப் பாடலில் தீபதரிசன தத்துவத்தை விளக்கும்போது ஸ்ரீ பகவான் தமது ஞானோபதேசத்தின் மையக் கருத்தை ரத்தினச் சுருக்கமாக அழகுற வெளிப் படுத்தியுள்ளார். அதாவது, 'நான் இவ் வுடலே' என்று அபிமானிக்கும் அகந்தையுணர்வே மனித வர்க்கத்தைப் பிடித்துள்ள நோயென்றும், அதற்கான மருந்து 'நான்' என்று மட்டும் விளங்கும் தன் இருப்புணர்வை நோக்கும் ஆன்ம விசாரத்தால் புத்தியை இதயத்திலே பதித்தல் என்றும், அதன்பயனுய் அடையப் பெறும் லட்சியமாவது அகந்தை அழியப்பெற்று 'நான் நானே' என்று இதயத்தில் பிரகாசிக்கும் உபாதிக்கலப்பற்ற அறிவொளியாகிய இரண்டற்ற மெய்ப்பொருளைத் தரிசிப்பதே யாகும் என்றும் விளக்குகிருர்.

# ஸ்ரீ அருணாசல மாகாத்மியம்*

## நந்தி வாக்கு:

(கலிவிருத்தம்)

1. **அதுவேதல மருணாசலந் தலம்யாவிலு மதிக**
**மதுபூமியி னிதயம்மறி யதுவேசிவ னிதயப்**
**பதியாமொரு மருமத்தலம் பதியாமவ னதிலே**
**வதிவானொளி மலையாநித மருணாசல மெனவே.**

**அன்வயம்:** அருணாசலம் அதுவே தலம்; தலம் யாவிலும் அதிகம்; அது பூமியின் இதயம்; அதுவே சிவன்; இதயப் பதி ஆம் ஒரு மருமத் தலம்; பதி ஆம் அவன் அதிலே 'அருணாசலம்' எனவே ஒளி மலையா நிதம் வதிவான்; அறி.

**பொழிப்புரை:** 'ஸ்தலம்' என்று கூறப்படுவதென்றால், அது அருணாசல க்ஷேத்திரமே யாகும். அது ஸ்தலங்கள் எல்லாவற்றிலும் சிறந்த தாகும். அது இப் பூவுலகின் இதயம் என்றறிக. இம் மலையே சிவ பிரானாகும். அன்றியும் இது சிவ பிரானது நடுநாயக ஸ்தானமான †ஒப்பற்ற ஓர் இரகசிய ஸ்தலமு மாகும் என்றறிக. மேலும் இறைவனாகிய சிவ பிரான் இத் தலத்தின்கண் 'அருணாசலம்' என்ற பெயரோடு ஜோதிமலையாக எப்பொழுதும் விளங்குகின்றான். இவ்வாறு அறிவாயாக.

---

*இவ் வேழு பாடல்களும் 'ஸ்கந்த மஹாபுராணம்', 'சிவ மஹாபுராணம்' என்னும் வடமொழி நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட சுலோகங்களைத் தழுவி ஸ்ரீ ரமண பகவானால் தமிழில் எழுதப்பட்டவை யாகும். 'ஸ்ரீ அருணாசல மாஹாத்மியம்' என்ற ஸ்ரீ ரமணாசிரம வெளியீடு இரண்டாம் பதிப்பில் பிற்பால் -I (பக்கம் 270-276)ஐக் காண்க.

†'ஒரு' என்ற சொல்லுக்கு 'ஒப்பற்ற', 'ஒரு' என்று இரு பொருள்கள் உண்டு.

(வெண்பா)

2. ஆதியரு ணாசலப்பே ரற்புதலிங் கத்துருக்கொ
ளாதிநாண் மார்கழியி லாதிரையச் — சோதியெழு
மீசனைமான் முன்னமர ரேத்திவழி பட்டநாண்
மாசிசிவ ராத்திரியா மற்று.

அ-ம்: ஆதி அருணாசல பேர் அற்புத லிங்கத்து உருக் கொள் ஆதி நாள் மார்கழியில் ஆதிரை. அச் சோதி எழும் ஈசனை மால் முன் அமரர் ஏத்தி வழிபட்ட நாள் மாசி சிவராத்திரி ஆம்; மற்று.

பொ-ரை: முதல் இலிங்கமாகிய 'அருணாசலம்' என்ற பெரிய அற்புதமான சிவ லிங்கத்தின் உருவத்தை ஈசன் மேற்கொண்ட புராதன நாள் எதுவென்றால், மார்கழி மாதத்தின் திருவாதிரை நாளாகும். அந்த அருணாசல ஜோதியாக எழுந்த சிவபிரானை, திருமாலை முதலாகக் கொண்ட பிரமன் முதலிய தேவர்கள் அனைவரும் போற்றி வணங்கிய நாள் எது வென்றால், மாசி மாதத்து மஹா சிவராத்திரி தினமாகும்.

## சிவ வசனம்:

(கலிவிருத்தம்)

3. அங்கியுரு வாயுமொளி மங்குகிரி யாகத்
தங்கலரு ளாலுலகந் தாங்குவதற் கன்றி
யிங்குறைவன் சித்தனென வென்றுமென துள்ளே
பொங்கியொளி ருங்குகைபல் போகமொடென் றுள்ளே.

அ-ம்: அங்கி உரு ஆயும் ஒளி மங்கு கிரியாக தங்கல் அருளால் உலகம் தாங்குவதற்கு; அன்றி சித்தன் என இங்கு என்றும் உறைவன்; எனது உள்ளே பல் போகமொடு குகை பொங்கி ஒளிரும் என்று உள்ளே.

பொ-ரை: நான் உண்மையில் அக்கினி வடிவமே யானாலும் ஒளி யடங்கிச் சாந்தமான கல் மலையாக

உருக்கொண் டிருப்பது ஏனென்றால், எனது பரம கருணையினால் உலகை ரக்ஷிப்பதற்காகவே. அன்றியும் 'அருணகிரி சித்தன்' என்ற வடிவில், இக் கிரியின் வடபால் உச்சியில் நான் எக்காலத்தும் வசிக்கின்றேன். இந்த எனது மலை வடிவத்தின்கண் பலவித இகபர போக ஐசுவரியங்களுடன் குகைகள் பல சிறந்து விளங்குகின்றன என்று இப்படியாகக் கருதுவாயாக.

குறிப்பு: 'உலகம் தாங்குவதற்கு' என்ற சொற்றொடருக்கு வடமொழி மூலத்தில் 'லோக ரக்ஷணாத்' என்ற சொற்றொடர் கையாளப்பட்டுள்ளது; இவ் வடமொழி சொற்றொடருக்கு 'உலகை ரக்ஷிப்பதற்காகவே' என்று மட்டுமே பொருள்படும். ஆனால் ஸ்ரீ பகவான் கையாண்டுள்ள 'உலகம் தாங்குவதற்கு' என்ற சொற்றொடருக்கு 'உலகம் என்னைத் தாங்கவேண்டு மென்பதற்காகவே' என்ற சிறப்புப் பொருளும் காணக் கிடைக்கிறது. இதன் விளக்கமாவது 'என் அக்கினி வடிவை (ஞானாக்கினி சொரூபத்தை) உலகம் தாங்காது; ஆகையால் அது என்னைத் தாங்கவேண்டுமாயின், நான் குளிர்ந்து மலைவடிவே யாகவேண்டும்' என்பதாகும்.

(வேறு)

**எல்லா வுலகுந் தகையவ் வியலாற்**
**பொல்லா வினைகள் *நுணமாம் புகலீ**
**தில்லா ததுவா மெதுகண் ணுறலா**
**லெல்லா ரருணா சலமா மிதுவே.**

அ-ம்: பொல்லா வினைகள் எல்லா உலகும் தகை அவ் இயலால், நுணமாம்; எது கண் உறலால் ஈது இல்லாதது ஆம், (அது) புகல் இதுவே (ஆகிய) எல் ஆர் அருணாசலம் ஆம்.

---

*நுணத்தலால், நுணம்: நுணத்தல் — தகைதல், பந்தித்தல்.

**பொ-ரை:** கொடிய வினைகள் எல்லா வுலகங்களை யும் கட்டுப்படுத்தும் தன்மையன வாதலால், ஜீவர்களுக்கு அவை பந்த (காரண) மாகும். ஆனால் எதை தரிசிப்பதால் அந்த வினைகளெல்லாம் இல்லாமற் போகுமோ, *அது ஜீவர்களுக்குப் புகலிடமாகிய இந்த ஒளி பொருந்திய அருணாசலமே யாகும்.

**குறிப்பு:** 'அருணாசலம்' என்பதன் பொருள் என்ன வென்றால், 'ருணத்தை (பந்தத்தை) இல்லாததாக்கும் மலை' (அ-ருண-அசலம்) என்பதே யாம்.

(வேறு)

5. **உருத்தெரி யெல்லை யுற்றுகண் ணுற்றாற்**
**கருத்தினாற் றூரக் கருதினா லும்மே**
**வருத்தமு றாது வராதவே தாந்த**
**வருத்தவிஞ் ஞான மார்க்குமுண் டாமே.**

**அ-ம்:** உரு தெரி எல்லை உற்று கண் உற்றால், கருத்தினால் தூர கருதினாலும்மே, வருத்தம் உறாது வராத வேதாந்த அருத்த விஞ்ஞானம் ஆர்க்கும் உண்டாமே.

**பொ-ரை:** அருணாசலத்தின் உருவம் தெரியக் கூடிய எல்லையில் வந்தடைந்திருந்து தரிசித்தாலும், அல்லது அருணாசலத்தைக் காண முடியாத தூரத்திலிருப்போர் மனத்தினால் அருணாசலத்தை நினைத்தாலுங்கூட, †மிக வருந்திப் பாடுபட்டா லன்றி அடைய முடியாத வேதாந்தத்தின் உண்மைப் பொருளாகிய ஆன்மஞானம் எத்தகையவர்க்கும் எளிதில் உண்டாகும்.

---

*'...அது இந்த ஒளி பொருந்திய அருணாசலமே யாகும் என்று சொல்வாயாக' என்றும் பொருள் கொள்வதுண்டு.

†'...அடைவதற்கரிய வேதாந்தத்தின் உண்மைப் பொருளாகிய ஆன்மஞானம் மிக வருந்திப் பாடுபடாமல் எத்தகையவர்க்கும் எளிதில் உண்டாகும்' என்றும் பொருள் கொள்வதுண்டு.

6. யோசனை மூன்று மித்தல வாசர்க்
காசறு தீக்கை யாதியின் றியுமென்
பாசமில் சாயுச் சியம்பயக் கும்மே
யீசனு மென்ற னுணையி னுனே.

அ-ம்: யோசனை மூன்று ஆம் இத் தல வாசர்க்கு, ஆசு அறு தீக்கை ஆதி இன்றியும், பாசம் இல் என் சாயுச்சியம் ஈசன் ஆம் என்றன் ஆணையினுனே பயக்கும்மே.

பொ-ரை: மூன்று யோசனை அளவுள்ளதாகிய இத் தலத்தில் வசிப்பவர்களுக்கு, குற்றம் அகற்றும் குருவினுடைய தீக்ஷை முதலியன எதுவும் இல்லாமலேயே, பற்றற்றதான, என்னோடு இரண்டறக் கலக்கும் சாயுச்சிய முக்தியை சர்வேசுவரனுகிய நான் என்னுடைய ஆக்ஞை யினுலேயே கொடுக்கின்றேன்.

## தேவியுரை:

(அறுசீர் விருத்தம்)

7. என்றுமே யறவோ ரன்பர்க்
கிருப்பிட மித்த லந்தான்
பொன்றுவார் பிறர்க்கின் னுவுன்
புன்மையர் பன்னோய் துன்னி
யொன்றுரு தொழியுந் தீயோ
ருரனொரு கணத்திங் கங்கிக்
குன்றுரு வருணை யீசன்
கோபவெங் தழல்வி ழாதே.

அ-ம்: அறவோர் அன்பர்க்கு என்றுமே இத் தலம் தான் இருப்பிடம். இங்கு பிறர்க்கு இன்னு உன் புன்மையர் பல் நோய் துன்னி பொன்றுவார்; தீயோர் உரன் ஒன்று உருது ஒரு கணத்து ஒழியும். அங்கி குன்று உரு அருணை ஈசன் வெம் கோபத் தழல் விழாதே.

**பொ-ரை:** நல்லோர்களுக்கும் அடியார்களுக்கும் எக்காலத்திலும் இவ் வருணாசல க்ஷேத்திரம்தான் வாசஸ்தான மாகும். இத் தலத்தின்கண் பிறருக்குத் துன்பத்தை நினைக்கும் அதமர்கள் பலவிதப் பிணிவாய்ப் பட்டு அழிவர்; தீயவர்களின் வலிமைகள் ஒன்றுகூட மிஞ்சாது முழுவதும் இங்கு ஒரே விநாடியில் அழிந்துபோம். (ஆகையால், ஹே மஹிஷாசுர) அக்கினிமலை வடிவான அருணாசலேசுவரருடைய வெம்மை மிகும் கோபாக்கினியில் வந்து விழுந்துவிடாதே.

**குறிப்பு:** தேவி மஹிஷாசுரனுக்கு அறிவு வரும்படி கபி முனி மூலம் தூதுமொழியாக அனுப்பிய எச்சரிக்கை இச் செய்யுள்.

ஸ்ரீ அருணாசல மாகாத்மியம் ஸம்பூர்ணம்

## முதல் ஸ்துதி

# ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை

## முன்னுரை

இறைவனையே குறிக்கோளாய் (லக்ஷியமாய்)க் கொண்ட பக்தனுக்குச் சகலமும் அவ் விறைவனே யாகிறான். தனிமையில் துணைவனாகிறான். தயவில் தாயாகிறான். சார்ந்து வாழத் தந்தை யாகிறான். இரந்து கேட்க எஜமானனாகிறான். அயர்ந்தபோது ஆவலா யழைத்து ஆறுதல் பெற அன்பனாகிறான். சந்தேகம் நீக்கிச் சாயுஜ்ய மளிக்க சற்குரு வாகிறான். பக்தன் பரமனைத் தன் ஒவ்வொரு செயலிலும் பற்றி நிற்கிறான். தான் பேச விரும்புவதை அக் கடவுளிடமே பேசிக் களிக்கிறான். தான் இவ் வுலகில் காண்பது, கேட்பது, சுவைப்பது, முகர்வது, உணர்வது யாவற்றையும் தன் அந்தரங்கப் பிரியனாகிய ஆண்டவனின் சாக்ஷியத்துடனேயே — சாந்நித்தியத்திலேயே — செய்து வாழ்கிறான். அவ் வுண்மை பக்தனின் வாழ்வில் அவனையும் ஆண்டவனையும் தவிர வேறு யாருமிலராகும். தனக்கு நேரும் சுக துக்கங்கள் யாவும் இறைவனாலேயே, தன் நன்மையையும் முன்னேற்றத்தையும் கருதியே அருளப்படு வதாக உணர்கிறான். அவனைத் துன்புறுத்தவோ இன்புறுத் தவோ யாராலும் எதனாலும் முடியாது. எந்தப் பொருளும், எந்த மனிதரும், எந்த ஜீவனும், எந்தக் கர்மப் பலன்களும் அவனை மகிழ்விக்கவும்,வருத்தவும் இயலாததாம். ஏனெனில், அவனது திருஷ்டியில் வாழ்வு என்பது தானும் தன் தலைவனும் (இறைவனும்)தான். சுக துக்க ஹேதுக்களாக (சாதாரண மனிதருக்கு)த் தோன்றும் பொருள்கள், மனிதர்கள், வினைப்பயன்கள் இவை யாவற்றின் மூலமும் தன் தலைவனே தன்னுடன் அருளாடல் புரிகின்றனன் என்ற திண்ணம் கொண்ட அப் பக்தனை யார் என்ன செய்ய முடியும்? யாரால் எதெது தன்பால் வந்துறுகிறதோ அதனை எல்லாம் அவன் தன் தலைவனின் செய்கையாகவே கருதுகிறான். இறைவனுடன் இவ் விணக்கம் பெற்ற பக்தன் ஒருபோதும் தனியாயிருப்பதில்லை! அவன் துயிலிலுங்கூட

இறைவனுடனேயே வாழ்கிறான். அவன் ஒருபோதும் யாருடனும் உறவு கலந்திருப்பதில்லை. அவன் அளவளாவி உள்ள நல்ல மனிதர்கள் மூலமும் ஆண்டவனிடமே அவன் பேசி இன்புறுகிறான்.

தான் துன்புற்ற காலை அவன் ஆண்டவனிடமே ஆதரவோடு கூறி ஆறுதல் கொள்கிறான். தான் இன்புற்ற காலை இறைவனின் அவ் வருட்கொடைக்கு மகிழ்ந்து அவனைத் துதிக்கிறான். இன்ப துன்பம் யாவும் அவனுக்கு அவன் தலைவனிடமே தவிர வேறு யாரிடமுமில்லை. தனக்கும் இறைவனுக்குமுள்ள அன்புறவின் இனிமையைக் கூட அவ் விறைவனிடமே எடுத்துக் கூறி இரமிக்கிறான் உண்மை பக்தன். எச் செயலிலும் இறைவனின் இச்சையையே காண்கிறான். தூக்கம், விழிப்பு, கனவுநிலை மூன்றிலும் ஒவ்வொரு வினாடியிலும் இறைவன் தனக்கு உள்ளும் புறமும் உதவிக்கொண்டே இருப்பதை அவனது பக்திக் கண்கள் நன்றாய்க் காண்கின்றன. இவ்வாறு இறைவன் தனக்கு அருளி வரும் அருட்கொடையை நினைந்து நினைந்து அளவற்ற மகிழ்ச்சியால் அக் கொடை வள்ளலைப் பலவாறு போற்றுகிறான். அந்த பக்தனின் இவ்வுள்ள நெகிழ்ச்சி, உணர்ச்சிகளின் புறச் சின்னங்களே ஸ்தோத்திரங்களாகும். அல்லும் பகலும் அறுபது நாழிகையும் அவன் ஆண்டவனோடு மனத்தாலும் சில சமயம் வாய்விட்டும் பேசிவரும் அன்புப் பிதற்றல்களில் பிறர் காதில் படுவனவாய், பிறரையும் அவ் வுயர்ந்த உணர்விற்கு இட்டுச் செல்வனவாய் வாய்விட்டுச் சிதறும் இறைகாதற் சொற்காந்தங்களே ஸ்தோத்திரங்களாகும். இத் தோத்திரப் பாடல்கள் பக்தனும் பரமனும் பரஸ்பரம் ஒருவர்பாலொருவர் கொண்டுள்ள உயர்ந்த இணக்கத்தினை விளக்கிடுவனவாம். இவை பக்தனின் பக்தி வெள்ளப் பண்பையும், பரமனின் அருட்கொடைத் திறனையும் பரிமளிக்கும் இனிய மலர் மாலைகளாகும். இத்தகைய உத்தம மணமலர் மாலைகளில் ஒப்பும் உயர்வு மற்று விளங்கும் அருள் மலர் மணமாலையாக **'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை'** அமைந்துள்ளது.

இவ் வானந்த அருள்மாலை பகவான் ஸ்ரீ ரமண பிராணனையே பக்தனாகவும், ஸ்ரீ அருணாசலேச்வரரையே

பரமனாகவும் கொண்டதாய் இரண்டிலா, இணையிலா ஒருவராகிய இவ் விருவரிடையே எழுந்த இன்ப நிறைவாம் அன்புணர்வின் அத்வைத நிறைவை அழகாகக் காட்டுகின்றது. மிக உயர்ந்து ஒன்றிய அருள் நிலையில் ஸ்ரீ ரமண பிரான் தன் தலைவனான ஸ்ரீ அருணாசலேசனிடம் பேசுகிறார். மஹா மந்திர சக்தி வாய்ந்ததாய், பொருளுணர்ந்து ஓதும் அன்பர்களை ஸ்ரீ ரமண பகவான் எத்தகைய உள்ள நிலையினின்று பாடினாரோ, அவ் வுயர் நிலைக்குக் காந்தம் போல் இழுத்துச் செல்லும் சக்திவாய்ந்ததாய் உள்ளது 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை'.

முருகிக் கனிந்த அன்புப் பித்தில், அன்பின் அளவிலாப் பெருக்கினிடையில் ஓரடியில் ஸ்ரீ பகவான் தன் தலைவனைச் சற்று கோபிப்பதைப்போல அப் பெருமானின் கொடைத் திறனைப் பறைசாற்றுகிறார். 'தலைவா, அருணா சலனே, நீ எத்தகையவன் தெரியுமா? நீ உன்னை நேசிப் பவர்களை ஏமாற்றிக் கொடியினால் கட்டி மடக்கித் தனிமையில் கொன்றுவிடுகிற இயல்புடையவன். இப்படிப் பட்ட உன்னை வலுவில் வந்து கட்டிக்கொண்ட நான் உயிரோடு எப்படி வாழ முடியும்? அந்தோ, இயலாது. நானும் உன்னால் கொல்லப்பட்டே போனேன்!'

"கொடியிட் டடியரைக் கொல்லுனைக் கட்டிக்
கொண்(டு)எங்ஙன் வாழ்வேன்? அருணாசலா"

என்று கூறுகிறார்.

ஸ்ரீ அருணாசலனை நோக்கிக் கூறப்படும் இச் சொற்களின் பொருள் மிக ஆழ்ந்ததாகும். ஸ்ரீ பகவான் தன் தலைவனை — அருள் நிறைந்த தலைவனை — உயிர்க்குயிரான அன்பனை — நோக்கி இப்படி ஏன் கூற வேண்டும்? எல்லா உயிர்க்கும் இரங்கி எல்லாம் அளித்தருளி வரும் இறைவனை 'அடியவரைக் கொல்லும் நீ' என்று கூறுவதா? ஆம்; அருணாசலன் அவ்வாறு அழிப்பவனே! அவனது அழித்தல் அளித்தலே யாகும்; அவனது அளித்தல் அழித்தலே யாகும்! ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் மூன்றும் ஒரு தொழிலாகவே அவனருளால் நடைபெறுகிறது. மூன்றும் முத்தொழிலல்ல. ஒரே தொழில்தான். ஒன்றில் மூன்றும் உண்டு. எவ்வாறு?

ஸ்ரீ அருணாசலன் எல்லா மனிதரையும் இப்படி எங்கே அழித்துவிடுவானோ என்று அஞ்ச வேண்டியதில்லை. கருணை கூர்ந்து அவன் அழிப்பது சிலரையே. அவன் யாரைக் குறிவைத்தானோ, அந்த ஜீவனை (பக்தனை) முதலில் கொடியிட்டுக் கட்டித் தன் பிடிப்பிலிருந்து தப்பி ஓடிவிடாமல் செய்கிறான்; அதாவது, தன்னிடம் எழுந்து, பெருகி, உருகிக் கரையும் உத்தம பக்தியினின்றும் (பிரியத்திலிருந்து) எக் காலத்திலும் எக் காரணத்தாலும் மாறுபட்டு உலக விஷயாதிகளில் சென்று விடாதபடி தன் அன்புக் கொடியால் முதலில் அந்த பக்தனின் மனதைக் கட்டித் (தன்னிடமே) வைத்துக்கொள்கிறான்.

பிறகு அடியரைக் கொல்கிறான்! அஃதெப்படி? அனாதி காலமாக (பல ஜன்மங்களாக) பக்தன் தன்னைத் தனிப்பட்ட ஜீவாத்மாவாகக் கருதி, அதுவும் அவ்வப்போது எடுத்துக்கொள்ளும் உடல்களையே 'நான்' என அகங்கரித்து, அதனால் (அப் பிரமையால்) எண்ணற்ற பிரவிருத்தி யுள்ளவனாய், அதனால் எண்ணற்ற துக்கங்களுக்கு இரையாகிவிட்ட அந்த பக்தனை இறைவன் கொல்கிறான்! ஏன்? அவன் ஒருவன் தனியிருப்புடன் இத்தனை காலமாக இருந்ததாலன்றோ அத்தனை துயரங்களும் அனுபவிக்க நேர்ந்தது? அவனே அழிந்தால் துயரம் எங்கே? யார் துயரப்படுவது? அதனால் அவனை அழிக்கிறான்! அதாவது, அந்த பக்தனின் 'நான்' என்னும் தன்மையை (அகந்தையை) அழிக்கிறான்.

'நான் எதற்கும் கர்த்தா (செய்பவன்) அல்ல; நான் எஜமானனல்ல; நான் பொருட்படுத்தத் தக்கவனல்ல; நான் ஒரு பொருளே யல்ல; நானல்ல; நீயே; எல்லாம் நீயே; எனக்கென்று ஒரு இருப்பும், ஒரு விருப்பும், ஒரு எண்ணமும், ஒரு செயலும், ஒரு உயர்வும், ஒரு பயனும், ஒரு நலமும், ஒரு சுகமும், இன்னும் ஏதொன்றுமில்லை. ஏனெனில், நானே இல்லை; நான் அழிந்தேன்; உள்ளவன் நீயே; நீயே ஸத்து. நான் இனி யாரும், என்று மில்லை!' என உணர்வற உணர்ந்தடங்கி உருவழிகிறான் பக்தன். இவ் வாத்ம ஸமர்ப்பணமானது தான் முற்றிலும் அழித்தொழிக்கப்பட்ட — ஜீவபோதமற்ற — தற்போதமற்ற — நிலையல்லவா? இதைத்தான் இயற்றுவிக்கிறான் ஸ்ரீ அருணாசலன்.

தான் பிடித்த ஜீவனை ஓட விடாமற் கட்டி, உடல் பொருள் ஆவி யாவற்றையும் தனக்கே யாக்கிக்கொண்டு அவன் (பக்தன்) ஒருவன் தனியே இராமல் கொன்றழிக்கிறான் கருணைக் கடலான அருணாசலேசன்! பிறகு என்னவாகிறது?

அவ்விதம் தன்முனைப்பற்று அழிந்தொழிந்த அன்பன் தனக்கொரு இருப்புமின்றி அவ் விறைவனாகவே என்று மிருக்கிறான்! இறந்து இறந்து போவதற்கே இத்தனைக் காலமாகப் பிறந்த அவன் இனி என்றும் இறவா திருக்கும் பிறவியை அப்போது பெறுகிறான். இது உண்மையான பெரும் பிறப்பு. இதுவே சாகாப் பிறப்பு. மடிந்து போகும் மனிதர்களின் உற்பத்தியைக் கடவுளின் சிருஷ்டி என்று கூறுவதைவிட, இதையே ஸ்ரீ அருணாசலேசனின் உண்மையான **சிருஷ்டித் தொழில்** — அழியாச் சிருஷ்டி — என்று கூறத் தகும்.

மேலும் இத்தனை காலமாக உடலையே 'நான்' என எண்ணி மயங்கி இருந்தவனாய், அந்த உடல் எத்தனைக் காலம் நிலைத்திருக்கிறதோ அவ்வளவு காலம் மட்டுமே தான் வாழ்வுற்றிருப்பதாக எண்ணி வந்த ஜீவன் இவ் வநித்திய வாழ்நாளிலிருந்து விடுபட்டு இப்போது ஊழிதோறூழியும் குலையாத — நிலைபெற்ற — ஸ்திதியில் வாழ்கிறான். இதையே ஸ்ரீ அருணாசலேசனின் உண்மையான **ஸ்திதித் தொழில்** என்று கூறலாம்.

இத்தனை காலமாக அவ் வன்பன் எத்தனையோ முறை இறந்தான்; ஆனால் அந்தோ, மீண்டும் மீண்டும் பிறந்தான். இதன் காரணம் தன்னை அவ் வுடல்களாகவே எண்ணி யிருந்த தப்பெண்ணமே — 'அஹம் தேஹம்' என்னும் மாயையே — யாகும். ஆனால் இப்போது இந்த மாயை — 'நான்' என்பது — அருணையப்பனால் அழிக்கப்பட்டது. இந்தப் பேரழிவால்தான் இனி பிறவாது என்றும் இறந்தொழிந்தான் அன்பன். ஆம். அந்தோ! அவன் அறவே ஒழிந்தான்! ஏன்? இனி அவன் இல்லவே யில்லை! எக்காலமுமில்லை! பின் என்ன ஆவது? அவனில்லை: அருணாசலனே இருக்கிறான்! வேறு யாருமில்லை! அவ் வன்பன் அருணாசலனே யன்றி வேறு யாருமில்லை!!! ஆ!

இவ் அழிவை அன்றோ அருணாசலனின் உண்மையான ஸம்ஹாரத் தொழில் என்று கூறலாம்? கொடியிட்டு அடியரைக் கொன்றான் அருணாசலன். அக் கொலைத் தொழிலே — அதி கருணையால் நிகழ்ந்த அருட் பொழிவே — அன்பனை ஸ்ருஷ்டித்து, ஸ்திதிசெய்து, ஸம்ஹாரம் செய்துவிட்டது. என்ன விந்தை ஈசனின் செயல் திறம்!

தான் இவ்வாறே ஆனதை உணர்த்துகிறார் ஸ்ரீ ரமண பகவான். 'ஹே, அருணாசலா, என்னைக் கொன்றாயே' என்று அன்பு கனியப் புகழ்கிறார் ஸ்ரீ பகவான். அப்படிக்கூட நேரிடையாகக் கூறவில்லை. 'அருணாசலா, உன் அடியவர்களைக் கொடியிட்டுப் பிடித்துக் கொல்பவனன்றோ நீ? உன்னைக் கட்டிக்கொண்ட நான் இனி எவ்விதம் வாழ்வேன்?' என்கிறார். 'நான் வாழ்வற்றேன்; உன்னால் கொல்லப்பட்டேன்; இதில் ஐயமுண்டோ?' என்கிறார்.

இச் சிறிய அற்புத அன்புப் பாவினால் தன் தலைவனைத் தன்னைக் கொன்றவனாய்க் குறை கூறிவிட்டு, ஸ்ரீ பகவான் அடுத்த அடியில் இவ் வருட் கொலையாளியைக் கொஞ்சிக் கேட்கிறார் ஓர் வினா:

"கோபமில் குணத்தோய் குறியாய் எனைக்கொளக்
குறைஎன் செய்தேன்? அருணாசலா."

'ஹே, அருணாசலா, நீ கோபமே இல்லாத சாந்த குணமுள்ளவனாயிற்றே; அப்படி யிருந்தும், நீ மேற்கூறியவாறு கொல்லுந் தொழிற்கொண்டு அதற்கு என்னைக் குறிவைத்தாயே! அந்தோ, அதற்கு நான் என்ன குற்றம் செய்தேன் ஐயனே?' என்று கெஞ்சுகிறார். அல்ல, அல்ல; அவ் விறைவனின் அன்பில் அமிழ்ந்து கொஞ்சுகிறார். இன்றேல் இத்தகைய சுவை தரும் சொற்றொடர் தோன்றுமா?

உலகில் ஒருவர்மீதொருவர் கோபமுற்றால்தான் கொலை செய்வர்; அதுவும் அசாதரணமான கோபமூண்டால்தான் கொல்ல முற்படுவர். ஆனால் அருணாசலனோ கோபமே இல்லாத சாந்த மூர்த்தி. அப்படிப்

பட்டவன் கோபம் மூண்டு, தன் அன்பனைக் கொல்லக் குறிவைத்தானே; அவ்விதமே கொன்றும் தீர்த்தானே! 'அதற்கு என்ன குறை செய்தானோ அவ் வன்பன்?' என்றவாறு தோன்றுகின்றதல்லவா? இவ் வடிகளில் இறைவன் கொண்டதாகக் காணும் கோபமானது **அதி கருணையே.** குறியாக ஸ்ரீ ரமண பகவானைக் கொண்டது என்பது, அவ் வுத்தமர் ஒருவரைத் தவிர உலகில் எவரும் ஸ்ரீ அருணாசலனின் அருட்பிரியராவதற்கு அருகதை யற்றவர் என்பதையே காட்டுகிறது. அதனால்தான் அவ் வொருவரையே குறிவைத்தார் இறைவன். இதற்குக் குறை என் செய்தார் என்றால், இங்கு குறை என்பது அவர் பல பிறவிகளில் இயற்றிய குறைவற்ற நிஷ்காமிய சற்கருமங்களாகிய **பக்குவமே** யாகும். இந்தக் குறையையே இறைவனுக்குச் செய்திருந்தார் ஸ்ரீ ரமண பகவான்! அதனால்தான் அப் பெருமான் அவரைக் கொன்றார். கொலைத் தண்டனைக் கேற்ற குற்றம் வேண்டு மல்லவா? ஞானத்திற் கேற்ற பரிபக்குவ முற்றிருந்ததே இங்கு அந்த குற்றம்! என்னே ஸ்ரீ பகவானின் அன்புச் சொல்! எல்லாம் எதிரிடை உவமையாக இருக்கிறது! கருணையைக் கோபமாகக் குறிக்கிறார்; அருள்பவனை அழிப்பவனாய் (கொலையாளியாய்)க் கூறுகிறார்; தன் தகுதியைக் குற்றமாகக் குறிக்கிறார்! தன் உயிர்த் தலைவனுடன் இப்படிப் பேசி மகிழ்வதைக் கொஞ்சல் என்றே கூற வேண்டுமல்லவா? இறைவனைத் தவிர வேறொன்றும் வேண்டாத உத்தம பக்தனுக்குக் கெஞ்சல், கொஞ்சல், அஞ்சல் (அபயம்), மிஞ்சல், துஞ்சல் எல்லாம் அப் பெருமானிடமேதான் போலும்! ஆம், ஐயமென்ன?

ஸ்ரீ பகவானருளிய 'ஸ்ரீஅருணாசல அக்ஷரமணமாலை' யின் இரண்டடிகளே நமக்கு இத்தனை இனிய அன்புறவை ஆண்டவனோடு உண்டாக்கி வைக்கின்றது. 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை' 108 அடிகளாகும். அவை முழுவதையும் பொருளுணர்ந்து ஓதினால், யாரும் புளகாங்கிதராகித் தற்போதமிழந்து நிற்பர் என்பது அனுபவ உண்மை.

ஸ்ரீ ரமண பகவான் எந்த ஒரே சொல்லைக் கேட்ட அளவில் அதுவே உள் விளக்கும் தாரகமாகி அருட்கனல்

ஓங்கப்பெற்றுப் பரப்ரம்ம சொரூபமாகி விட்டனரோ, அந்த ஒப்பும் உயர்வு மற்ற சொல் '**அருணுசலம்**' என்ப தாகும். இவ் வொரு சொல் அவரது அகம் புகுந்து இழுத்து, தன் தூல வடிவான அருணுசலத்துக்கு (திரு வண்ணுமலைக்கு) அப் பெருமானைக் கொணர்ந்து, அவரை அடியோடு விழுங்கி, அவர்மயமாகவே ஆகிவிட்டது! இவ் வருள் லீலையை

"அகம்புகுந் தீர்த்துன் அககுகை சிறையாய்
அமர்வித்த தென்கொல்? அருணுசலா"

என்று ஸ்ரீ ரமண பகவான் கூறுகிருர். அருட்பரசிவ அருணுசல ஜோதியால் விழுங்கப்பட்ட ஸ்ரீ ரமண பகவான் தனது பதினுருவது வயதின் தொடக்கத்திலேயே அகண்டா கார பரமாத்ம ஞானியாய், பஹிர்முகமற்ற பால மோனி யாய், அருணுசல மலைச்சாரலிலேயே அமர்ந்துவிட்டார். அப்போது அவரை மோன குருவாகக் கொண்டு மொய்க்க ஆரம்பித்தன அன்பர் வண்டினம். அந்த ஆதிகாலத்தில் அநேகமாகச் சாதுக்களே ஸ்ரீ பகவானை இரவும் பகலும் சூழ்ந்திருந்தனர். அத் திருக்கூட்டத்தினர் அண்ணுமலையில் சிவநாமம் பாடித் தெருதோறும் பிக்ஷை யேற்றுவந்து ஸ்ரீ பகவானும் தாமுமாய்ப் பசியாறினர். அவ் வன்பர் களின் வேண்டுகோளுக் கிணங்க, பிக்ஷை ஏற்றுச் செல்லும் சமயத்தில் அந்தமிலா அருணுசலனின் அருள் நாமத்தையும் மஹிமையையும் வீதிதோறும், வீடுதோறும் விதை தூவித் தெளிக்கும் விதமாய் ஸ்ரீ ரமண பகவான் திருவாய்மலர்ந்து, தன் குருவுருவாய் ஒளிரும் அருணு சலனைக் கூவித் துதிக்கும் தோத்திரம் ஒன்றை யாத்தரு ளினர். இதுவே 'ஸ்ரீ அருணுசல அக்ஷரமணமாலை' யாகும். மக்கள் அறியாதவாறு மோன நிலையில் எத்தனையோ காலமாக இறைவனும் தானுமாய் இரண்டறக் கலந்து கிடந்த அருட் கலப்பினின்றும் — அத்வைத நிலையினின்றும் — சற்று இறங்கி வந்து, தாஸ்ய பாவத்தை மேற்கொண்டு நின்று — துவைத வேடமிட்டு — குரு சொரூபமான அருணுசலனுக்கும் தனக்கும் ஏற்பட்ட ஐக்கிய அழகை இதில் வர்ணிக்கிருர் ஸ்ரீ பகவான்.

தமிழகம் தோற்றுவித்த தமிழ்மறை மகானல்லவா நம் ஸ்ரீ ரமணேசன்? ஆதலின் அவர் தமிழ் எழுத்துக் களின் வரிசையில் 'அ' முதல் 'வை' என்ற எழுத்து ஈருக உள்ள அக்ஷரங்கள் ஒவ்வொன்றுலும் ஒவ்வொரு பாமலரையும் ஆரம்பிக்கின்றனர். இப் பாமாலை அருள் மலர் களின் மணத்தை அடிதோறும் ஊட்டுகின்றதால், **'மண மாலை'** என்று பெயர் பெற்றது. அக்ஷரங்கள் ஒவ்வொன் ருலும் ஆரம்பிக்கப்படும் மணமாலை யாதலின், **'அக்ஷரமண மாலை'** என்ற திருநாமம் இதற்குச் சூட்டப்பட்டது. மேலும், அக்ஷர (அழிவற்ற — என்றும் நிலைபெற்ற) திருமணத்தை (ஐக்கியத்தை)ப் பரமனேடு ஏற்படுத்த வேண்டிப் பாடப் பட்ட பாமாலை யாதலாலும், **'அக்ஷரமணமாலை'** எனப் பெயர் பெற்றது எனலாம். இத் திவ்விய அக்ஷரமண மாலையை ஏற்று அணிந்துகொள்ளும் பெருமானுகிய கடவுள் தலைவன் யாரெனின், ஸ்ரீ அருணாசலனே யாகும். அப் பரமனின் திருநாமத்தைப் பாடல் தோறும் ஒவ் வொரு முறை கூவி மகிழ்கிருர் ஸ்ரீ ரமண பகவான்.

"அருணா சலசிவ அருணா சலசிவ
அருணா சலசிவ அருணாசலா!"

"அருணாசலா... அருணாசலா... அருணாசலா" — இதுவே பாமாலை முழுவதும் நம் மன மொழி மெய் கவரும் மந்திர ஓங்காரமாக த்வனிக்கின்றது. ஆதலின் இவ் அக்ஷரமணமாலையானது **'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை'** என்ற அருள் நாமமேற்று விளங்குகின்றது.

'அருணாசலம்' என்பதற்குச் சரியான பொருள் என்னவெனில், அதை அறிந்தவர் பூவுலகில் கால்கொண் டுலாவிய புண்ணிய புருஷர்கள் அறுவரே யாவர். அவ் அறுவரன்றி வேறு யாரும் அதன் மெய்ப் பொருளறியார். அவ் வறுவர் ஆவோர்: ஆதிகுரு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி பெருமான், அவரது சீடர் சனகாதி நால்வர், அந்த மோன குருவின் அபேத சாக்ஷாத்காரமான ஸ்ரீ ரமண பகவான் ஆகியோர். ஏனெனில், அருணாசல மெய்ப்பொருள் மஹாபரமௌனமே யாதலின், மோன குருவா யெழுந் தருளிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியும், ஸ்ரீ ரமண பகவானும்,

மோன வியாக்கியானத்தாலேயே ஐயமகன்று அனுபூதி பெற்ற சனகாதி நால்வரும்தான் அப் பரமபதத்துக்கு (அருணாசல பதத்துக்கு)ப் பொருள் அறிய முடியும். அப் பதத்தின் மெய்ப்பொருள் கேட்கப்பட்ட போது, அதை உள்ளபடி விளக்குவதும் விளங்கிக்கொள்வதும் இந்த அறுவராலும் **'மௌனம்'** என்ற மஹாவியாக்கியானத் தால் மட்டுமே முடிந்தது! அருணாசலத்தின் பொருளாவது: அருணாசலம் = அருணாசலம். வியாக்கியானமாவது: மேற் சொன்ன அறுவரின் மௌனம். இவ்வளவுதான் கூற முடியும். இதற்குமேல் இதன் உண்மைப் பொருளை தத்தம் அனுபவத்தால், அருணை ரமணன் அருள் வலத்தால், அவனடியார் அடிமைத் திறத்தால், சுயமாக, அவரவர் தன்னுள்ளேதான் உணர்ந்துகொள்ள முடியும். ஏட்டி லடங்காது இறைபொருள் விளக்கம்.

எனினும், **'அருணாசலம்'** என்ற பதத்திற்கு வெளி முகமான அர்த்தமாவது: (1) **அருண** = ஜோதிமயமான, **அசலம்** = மலை; அதாவது, **'ஜோதிமலை'** என்றும் கூறலாம். (2) **அருண** = ருணங்களை (முற்பிறவியிலும் இப்பிறவியி லும் மக்களால் செய்யப்பட்ட பாபங்களாகிய மஹா ருணங் களை) அகற்றக் கூடிய, **அசலம்** = மலை; அதாவது, **'பாப மகற்றும் பருவதம்'** என்றும் கூறலாம்

'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை' என்ற மஹா சக்திவாய்ந்த இந்த மந்திர மணமாலையில் மொத்தம் நூற்றெட்டு மணமலர்கள் அடிகளாக அமைந்துள்ளன. நூற்றெட்டு மணமலரை வரிசையாக அமைத்து இவ் அருள் மாலையைத் தொடுக்கிருர் ஸ்ரீ ரமண பகவான். பிறகு,

"மாலை யளித்தரு ணாசல ரமணஎன்
மாலை யணிந்தருள் அருணாசலா"

என்று துதி செய்து தன் தலைவனுக்கு — குரு வடிவான ஸ்ரீ அருணாசல நாயகனுக்கு — மாலையிட்டு மகிழ்கிருர்.

# பாயிரம்

(எழுசீர் விருத்தம்)

தருணா ருணமணி கிரணா வலிநிகர்
　　தருமக் ஷரமண மகிழ்மாலை
தெருணா டியதிரு வடியார் தெருமரல்
　　தெளியப் பரவுதல் பொருளாகக்
கருணா கரமுனி ரமணா ரியனுவ
　　கையினாற் சொலியது கதியாக
வருணா சலமென வகமே யறிவொடு
　　மாழ்வார் சிவனுல காள்வாரே.

— ஸ்ரீ முருகனார்

**அன்வயம்** (பதம் பிரித்துக் கொண்டுகூட்டல்): தருண அருண மணி கிரண ஆவலி நிகர் தரும் அக்ஷர மண மகிழ் மாலை தெருள் நாடிய திரு அடியார் தெருமரல் தெளிய பரவுதல் பொருளாக கருணாகர முனி ரமண ஆரியன் உவகையினால் சொலியது கதி ஆக 'அருணாசலம்' என அறிவோடும் அகமே ஆழ்வார் சிவன் உலகு ஆள்வாரே.

**பொழிப்புரை:** இளஞ் சூரியனின் அழகிய கிரணக் கூட்டங்களை யொத்துப் பிரகாசிக்கின்ற (வரிசைக் கிரமமான) தமிழ் எழுத்துக்களால் ஆகித் தெய்வ மணம் கமழும் இனிய இப் பாமாலையானது ஞானத் தெளிவை விரும்பிய உத்தம அடியார்கள் தமது அஞ்ஞான மயக்கம் நீங்க வேண்டித் துதிப்பதற்காக அருள் வடிவ முனிபுங்கவனான மஹரிஷி ரமணாசாரியன் அகமகிழ்வோடு திருவாய்மலர்ந்தருளிய தாகும். இத் தோத்திரத்தையே துணையாகக் கொண்டு *'அருணாசலம்' என்ற உணர்வோடு (பிரக்ஞையோடு) இதயத்தில் ஆழ்ந்து மூழ்கும் நிஷ்டை பூண்டோர் சிவனது உலகை யாள்வர் (சிவனே) ஆவர் என்பதாம்.

---

*"... 'தன் ஆன்ம சொரூபமே அருணாசலம்' என்ற உணர்வோடு தன்னுள் ஆழ்ந்து மூழ்கும் நிஷ்டை பூண்டோர்..." என்றும் பொருள் கொள்வதுண்டு.

## காப்பு

**அருணாசல வரற்கேற்ற வக்ஷரமண மாலைசாற்றக்**
**கருணாகர கணபதியே கரமருளிக் காப்பாயே.**

**அன்வயம்:** அருணாசல வரற்கு ஏற்ற அக்ஷர மண மாலை சாற்ற, கருணாகர* கணபதியே, கரம் அருளிக் காப்பாயே.

**பொழிப்புரை:** அருணாசல மணவாளனுக்குகந்த தமிழ் எழுத்துக்களாலான மணமாலையைத் தொடுத்துச் சூட்ட, கருணை புரியுங் கணபதியே, நீ உன் அருளுதவிக் கரங்களை யளித்துக் காப்பாயாக.

## நூல்

**அருணா சலசிவ அருணா சலசிவ**
**அருணா சலசிவ அருணாசலா!**
**அருணா சலசிவ அருணா சலசிவ**
**அருணா சலசிவ அருணாசலா!**

1. **அருணா சலமென வகமே நினைப்பவ**
**ரகத்தைவே ரறுப்பா யருணாசலா.**

**அன்வயம்:** அருணாசலா! 'அருணாசலம்' என அகமே நினைப்பவர் அகத்தை வேர் அறுப்பாய்.

**பொழிப்புரை:** அருணாசலா! 'அருணாசலம்' என்று உள்ளத்தால் நினைப்பவருடைய அகந்தையை நீ வேரோடு நீக்கிவிடுவாய்.

**விளக்கவுரை:** மனிதனுக்கு ஈசுவரன் செய்யத்தக்க பெரிய உதவி அகந்தையின் நாசத்தை ஏற்படுத்துவதே. இதைவிடப் பெரிய உதவி ஒன்றையும் எவ்வளவு பெரிய தபஸ்வியும் கடவுளிடம் பெற்றுவிட முடியாது. பெறக் கூடிய மற்ற வரங்கள் யாவும் இவ் வகந்தை நீக்கம் என்ற வரத்தின்

---

*கருணாகர: 'கருணை புரியும்' என்றும், 'கருணை வடிவான' என்றும், 'கருணைக் கரத்தனாகிய' என்றும் பொருள் கொள்ளப்படும்.

முன் தூசி பெருந்தனவாகும். ஏனெனின், 'நான்', 'எனது' என்ற அகந்தை நீங்குவதால் ஜீவன் சிவனாகிறான். அதாவது, இவ் வரத்தால் இறைவன் எல்லா வரங்களையும் அளிக்கும் மகாசக்தியுள்ள தன்னையே தன் பக்தனுக்குக் கொடுத்து விடுகிறான். அதாவது, அவனைத் தன்மயமாகவே செய்து கொள்கிறான். ஆதலால் இதைவிடப் பெரிய நலம் வேறு எது இருக்க முடியும்? இராது, அல்லவா? இப்படிப்பட்ட உயர் நலத்தைத் தருகிறான் ஸ்ரீ அருணாசலன் என்று கூறுகிறார் ஸ்ரீ ரமண பகவான்.

இந்த ஈடிலா லாபத்தை அவரிடம் பெற என்ன உபாயம் கூறுகிறார்? அப் பெருமானின் திருநாமமாகிய 'அருணாசலம்' என்பதை அகத்தே நினைக்க வேண்டியது மட்டும்தான் அவ் வுபாயம். உடனே அந்த பக்தனின் அகந்தையை அருணாசலன் அடியோடு நீக்குகிறான் என்கிறார் ஸ்ரீ பகவான். "அருணாசலம் ஸ்மரணாத் முக்தி"— "காசியில் இறக்க முக்தி, அருணாசலம் நினைக்க முக்தி" என்ற ஆன்றோர் வாக்கு இதற்குச் சான்றாகும். அருணாசலத்தை மனத்தால் நினைத்தாலே முக்தி கிடைக்கின்றது என்பர். ஆம், அதை விளக்குகிறார் இவ் வடியில் ஸ்ரீ ரமண பகவான். அப்படி ஒருவன் நினைப்பானாகில் அவனுக்கு அருணாசலன் எப்படி முக்தி அளிக்கின்றான் என்றால், அந்த அன்பனை அருணாசலன் சும்மா விடுவதில்லை; அவனது அகந்தை — 'நான் இந்த உடல்', 'நான் இந்த மனம்', 'நான் அற்ப ஜீவன்', 'இவை என்னுடையவை' என்று அவனிடம் உள்ள அகந்தை — நாசமடைய உபாயம் செய்கிறான். அதனால் அன்பன் முக்தி பெறுகிறான். அதாவது, தன்னை நினைப்பதாலேயே அருணாசலன் ஜீவனுக்கு குருவாகி விடுகிறான் என்கிறார் ஸ்ரீ பகவான்.

'முன்னிலை படர்க்கைப் பொருள்களை நாட நாட மனம் மேலும் மேலும் எண்ணங்களாய் விரிந்து பெருகும்' என்பதே பொது விதி யாயினும், இதற்கொரு விதிவிலக்கா யமைந்தது அருணாசலம். அது தன்மையை நினைப்பூட்டும் அதிசய சக்திவாய்ந்த ஒரு முன்னிலைப் பொருள். ஏனெனில், அருணாசலம் அறிவறு கிரியெனத் தோன்றினாலும், அது

உண்மையில் கண்ணாரக் காணவும், கருத்தால் கருதவும் தக்கதாய் இவ் வுலகில் தோற்றம் கொண்டுள்ள ஆன்மாவே — 'நான் இருக்கிறேன்' என்ற வடிவில் உள்ளத்தில் விளங்கிக் கொண்டிருக்கும் தன்மையுணர்வே — யாகும். ஆகவே, ஞானத் திரளாய் நிற்கும் பெருமானாகிய அருணாசலனை நாம் நினைக்கும்போது, 'என்னை நினைக்கும் நீ யார் என்று பார்' என்று நம் கவனத்தைத் தன்மையுணர்வின் மேல் திருப்பி நம் அகந்தையை நீக்கும் அவனது அருட் செயல் இரகசியமாக நடைபெறுகின்றது. இது ஸ்ரீ ரமண பகவானது சொந்த அனுபவ மாகும்.

அகந்தையை எவ்வாறு முற்றிலும் நீக்குகிறான் என்பதை ஸ்ரீ பகவான் "வேர் அறுப்பாய்" என்பதன் மூலம் விளக்குகிறார். ஒரு மரத்தின் கிளைகளை வெட்டிவிட்டால், அது பிறகும் துளிர்த்துவிடும்; தரைமட்டமாக வெட்டப் படும் மரங்கள்கூட சிற்சில துளிர்த்துவிடுகின்றன. காரணம் அவைகளின் வேர் தரையில் கெடாமல் இருப்பதால்தான். ஆனால் ஸ்ரீ அருணாசலேசனாகிய குரு இப்படி அரை மரம் வெட்டி அழித்துவிட்டதாக இருப்பவனல்ல. அவன் ஜீவனின் அகந்தையாகிய மரத்தை வேர் முதற்கொண்டு வெட்டி அறுத்து வெளியே வீசி யெறிந்துவிடுகிறான்! வேரறுத்தா லன்றி விருக்ஷம் கெடாது. அது போலவே அகந்தையை சமூலம் அழித்தாலன்றி மீண்டும் உயிர்த்து எழுந்து பவசாகரத்தில் வீழ்த்தும். இவ்வாறுதான் துக்கமயமானதும், பலகோடி ஜன்மங்களாலும் பலகோடி வருடங்களாலும் அழிந்துபோகாததுமான சம்சார விருக்ஷமானது — அகந்தையானது — அருணாசலனின் அருளால் வேரறுக்கப்பட்டு அழிகிறது.

"அருணாசலம் என்று நினைத்தவுடனேயே நீ இவ்வித பெரிய நலனைத் தந்துவிடுகிறாயே, அருணாசலா!" என்று வியக்கிறார் ஸ்ரீ ரமண பகவான். இது வெறும் வியப்புச் சொல்லோ, உயர்வு நவிற்சியோ அல்ல. ஏனெனில், இது ஸ்ரீ ரமண பகவான் தானே அனுபவத்திலறிந்த உண்மை யாகும். எப்படி? அவர் மதுரையில் ஒருசமயம் தன் உறவினர் ஒருவரிடமிருந்து 'அருணாசலம்' என்ற வார்த்தையைக்

கேட்டார். கேட்டதுதான் தாமதம்; உடனே அவ் வருணா சலத்தைப் பற்றி எண்ணி யெண்ணிப் பெருமூச்செறிந் தடங்கினார். அருணாசலேசன் தன் ஒரு நாமத்தாலேயே ஸ்ரீ ரமண பகவானின் உள்ளம் புகுந்து, உளக்கனல் மூட்டி, ஊதுவித்து, ஞானப் பெருந்தீ பரப்பி, விரக்தி ஏற்றி, வெளியேற்றிவிட்டான்! 'அருணாசலம்' என்ற மஹாவாக்கியம் ஒன்றே அன்பன் ஒருவனை அஹம் வேரறுத்துவிடும் என்று ஸ்ரீ ரமண பகவான் இம் முதலடியில் கூறியது யாவும் தான் அறிந்த சத்தியமான அநுபவ உண்மை யாகும். தான் பெற்ற பேருண்மையைப் பெற்றவாறு, உள்ளபடி உலகுக் குரைக்கின்றார் குரு பகவான். அல்ல, அல்ல; அவருக்கு உலகு தன் தலைவனான அருணாசலேசனைத் தவிர வேறல்ல ஆதலின், அவ் வருணாசலனிடமே உரைக்கின்றார்!

இச் செய்யுளில் புதைந்து கிடக்கும் மற்றொரு அத்வைத பொருட் சுவையைக் கவனிப்போம். "இதோ பார்; 'அருணாசலம்' என்று நான்தான் ஒரு தரம் நினைத்து விட்டேனே? எனக்கு ஏன் முக்தி கிடைக்கவில்லை?" என்று நம்முள் ஓர் குதர்க்க புத்தி கூறி எழும்பலாம். அப்படிப்பட்ட அற்ப விசுவாசிகட்காகவும், அத்வைத தவ வேள்வியரின் சிரமப் பரிகாரமாகவும், இப் பாடலுக்கு மற்றுமோர் பொருள் இதில் காணப்படுகிறது. அதாவது, "அருணாசலம் என்பது ஆத்மசொரூபமே என்று உள்ளத்தால் நினைப்பவருடைய அகந்தையை நீ வேரோடு நீக்கிவிடுவாய்" என்பதாம். [அகமே = 'நான்' என்று நம்முள் விளங்குகின்ற ஓர் வஸ்துவே; அருணாசலம் என = அருணாசல நாதனாகும் என்று; நினைப்பவர் = அனன்னியமாக (தன்னிலும் வேறாகா தவாறு அத்வைதமாய்) நினைக்கக் கூடிய உத்தம பக்தர்கள்; அகத்தை = அகந்தையை (ஜீவத்வத்தை); வேரறுப்பாய் = நீ அடியுடன் அகற்றுகின்றாய்.] அதாவது, "நான் என விளங்கும் ஆத்மாவே அருணாசலன் என்று உன்னி வெளிவிடயம் விட்டு அந்தர்முகமாய் அல்லும் பகலும் ஸ்வாத்ம பக்தியாகிய நிஷ்டையுற் றிருக்கும் புத்திமான்களை நீயே இரண்டறக் கலந்து, நீ அவர்களாகவும், அவர்கள் நீயாகவும் ஆகிவிடுகிறாய்" என்பது பொருள். இதுவும் ஸ்ரீ ரமண பகவானின் அத்வைத அநுபவ உண்மையே.

**2.** அழகுசுந் தரம்போ லகமும் நீயுமுற்
றபின்னமா யிருப்போ மருணசலா.

**அ-ம்:** அருணசலா! அழகு சுந்தரம் போல் அகமும் நீயும் உற்று அபின்னமாய் இருப்போம்.

**பொ-ரை:** அருணசலா! அழகு, சுந்தரம் என்னும் (தமிழ்-வடமொழியான) இரு சொற்களும் பொருளால் ஒன்றேயாவது போல நானும் நீயும் இரண்டறக் கலந்திருப்போமாக.

**வி-ரை:** 'சுந்தரம்' என்பது சமஸ்கிருத பதம்; அதன் பொருள் 'அழகு' என்பதே. 'அழகு' என்ருலும் 'சுந்தரம்' என்ருலும் ஒன்றே. 'அழகான மாலே', 'சுந்தரமான மாலே' என்று ஒரு பூமாலேயை இவ் விரு பதங்களாலும் தனித் தனியே குறித்துப் பேசினுலும், அர்த்தம் ஒன்ருகவே பொருந்தும். அதாவது, இவ் விரு பதங்களும் குறிப்பிடுவது அந்த மாலேயின் அழகுத் தன்மை ஒன்றையே யாகும். அது போன்றதே ஜீவனும் ஈசுவரனும் ஐக்கியமாகும் இறைக் கலப்பு — சாக்ஷாத்காரம் — ஆகும். அதாவது, 'அழகு', 'சுந்தரம்' என்னும் இரு சொற்களும் சப்தத்தால் வேருயினும் பொருளால் ஒன்ருயிருப்பது போலவே, ஜீவனும் ஈசுவரனும் உபாதியுணர்வால் வேருயினும் உண்மை யியல்பால் ஒரு பொருளே யாவர்.

"இருக்கும் இயற்கையால் ஈசசீ வர்கள்
ஒருபொரு ளேயாவர் உந்தீபற
உபாதி யுணர்வேவே றுந்தீபற."
— உபதேச வுந்தியார் - 24

ஆகையால், மூல உபாதியுணர்வாகிய ஜீவபோத மற்றுச் சிவமாகிய பின் அங்கு இருவரில்லே; இருப்பது இறைமயம் ஒன்றே. ஸ்ரீ அருணசலத்துடன் தான் பெற்ற அத்வைத அனுபவமும் அவ்விதமே என்பதை ஸ்ரீ ரமண பகவான் இப் பாடலால் தெளிவாக்குகிருர்.

'அஹம்' என்னும் வடமொழிச் சொல் 'நான்' என்னும் பொருளே உடையது. 'அகமும் நீயும்' என்று ஸ்ரீ பகவான் கூறுகிருர். அதனுல், 'அழகும் சுந்தரமும்

போல் நானும் நீயும் உற்று' என்றுகிறது. இங்கு 'அழகு' என்பது 'நான்' என்றும், 'சுந்தரம்' என்பது 'நீ' என்றும் பொருள்படுகிறது. அதாவது, அழகாகிய ஸ்ரீ ரமண பகவானும் சுந்தரமாகிய ஸ்ரீ அருணாசலனும் சேர்ந்து என்றுகிறது. 'அபின்னம்' என்ற சொல்லுக்கு 'பிரிவற்ற', 'இரண்டற்ற', 'ஏகமாய்' என்று பொருள். அழகும் சுந்தரமும் எவ்விதம் இரு பொருளைக் குறிக்காததும், பிரிக்க முடியாததுமான ஒன்றே யாகுமோ, அவ்விதமே ஸ்ரீ ரமண பகவானும் ஸ்ரீ அருணாசலனும் இருவரல்லாத ஒரே இறைவனே — ஊழிதோறூழியும் பிரிக்க முடியாத ஒரே சத்திய வஸ்துவே — என்பது இதில் விளங்குவதாகும்.

சாதாரணமான கவிகள் பாடும்போது 'சந்திரனும் குளிர்ச்சியும் போலும்', 'மலரும் மணமும் போலும்', 'நீரும் தண்மையும் போலும்' என்றே பாடுவர். இந்த உபமானங்கள் ஜீவப்ரஹ்மைக்கியத்திற்குச் சரியான பொருத்தமாகா. ஏனெனில், சந்திரன் ஒரு பொருள்; குளிர்ச்சி அதன் குணம். மலர் ஒரு பொருள்; மணம் அதன் குணம். நீர் ஒரு பொருள்; தண்மை அதன் குணம். இவைகளை ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாதே தவிர, குளிர்ச்சி என்றுல் சந்திரன் என்ற பொருளில்லை; மணம் என்றுல் அது மலரல்ல. மலரும் மணமும் இரு பொருள்கள்; ஆனுல் ஒன்றை விட்டு ஒன்றிருக்காது. அவ்வளவே பொருந்தும். ஆனுல் அருட்கவியும் அனுபவ ஞானியுமான ஸ்ரீ ரமண பகவானின் அருள் வாக்கில் 'அழகும் சுந்தரமும் போல்' என்று வந்திருக்கிறது. அழகும் சுந்தரமும் ஒன்றேடொன்று சேர்ந்த இரு பொருள்களல்ல; ஒரே பொருள்தான். 'அழகு' என்று எதைச் சொல்லலாமோ, அதைச் 'சுந்தரம்' என்றும் சொல்லலாம். ஆனுல் மணம் என்று சொல்வதை எல்லாம் மலர் என்று சொல்லிவிட முடியாது. எனவே 'மலரும் மணமும்' என்பதைவிட 'அழகும் சுந்தரமும்' என்பது மிக அனன்னியமான ஐக்கிய உபமானம். மலரும் மணமும் இரு வஸ்துக்களின் சேர்க்கை வலிவை (பிரிக்க முடியா நெருக்கத்தை) மட்டும் குறிக்கிறது. 'அழகும் சுந்தரமும்' என்பதில் வஸ்து ஒன்றேயாக விருப்பதால், சேர்க்கை-பிரிவு என்பது நினைக்கவும் இயலாததாகிறது. அவ்விதமே ஸ்ரீ அருணாசலன் என்பது எதுவோ, அதுவே ஸ்ரீ ரமண பகவான் ஆகும்.

இதில் மற்றொரு விசேஷம் குறிப்பிடத் தக்கது. ஸ்தூலமான இரண்டு பொருள்களின் சேர்க்கையை உவமை கூறாமல் ஸ்ரீ பகவான் ரூபமற்ற 'அழகு சுந்தரம்' என்று உவமை கூறுகிறார். இதனால் அரூபியான இறைவனுடன் கொள்ளும் ஆத்மக் கலப்பை — அத்வைத அனுபவத்தையே — சிறப்பிக்கின்றார் ஸ்ரீ ரமண பகவான். அதிலும் தன்னை 'அழகு' என்றும் தலைவனை 'சுந்தரம்' என்றும் கூறுவதன் பொருள் ஸ்தூலமான தேக லக்ஷணங்களைப் பொறுத்ததன்று. ஒற்றைக் கோவணாண்டியாய் ஒன்றும் வேண்டா துலவும் ஸ்ரீ ரமணனுக்கும், நெட்டிருப்புப் பாறையாய் நிமிர்ந்து நிற்கும் ஸ்ரீ அருணாசலனுக்கும் வெளியழகுப் பொருத்தத்தைப் பற்றி இங்கு கூறவில்லை. ஸ்ரீ பகவானது உள்ளமானது கள்ளம் கபடமற்று, தூய ஸ்படிகமயமாய், பாபமற்று, பக்குவமுற்று, அழகு மணியாய், ஸ்ரீ அருணாசலன் குடிகொள்ளத் தக்கதாய் இருந்திருக்கிறது என்பதே 'அழகு' என்ற சொல்லை ஸ்ரீ பகவான் உபயோகித்ததன் காரணமாய் நாம் சொல்லலாம். இத்தனை பரந்த உலகிலும் உலக சிருஷ்டிகளிலும் ஸ்ரீ ரமண பகவானுக்கு சௌந்தர்யமானதாய்த் தோன்றியது எது? எதுவுமே யில்லாமல் அரூபியாய், அசலனாய், தனக்கு அன்னியமற்ற ஆத்ம சொரூபமே அவருக்குச் சௌந்தர்யமாயிருக்கிறது! "அழகு, அழகு என்று வெளிமுகத்தில் திரியும் மட உலகமே, உண்மை அழகான இவ் வாத்ம அழகே அழகு. அதனைப் பார். அதுவே கெடாதது, மாறாதது, குறையாதது, அழியாதது" என்று நமக்குச் சொல்லாமல் சொல்கிறார் போலும் ஸ்ரீ பகவான்.

மடமை இருளில் மதிமயங்கி நம் நாட்டினர் மொழிச் சண்டையிலும், மொழிப் பற்றிலும், மொழிப் பகையிலும் மனதைப் பறிகொடுத்துக் காலத்தை வீணாக்குகின்றனரே. அன்னார்க்கு இப் பாடலில் ஓர் அறிவுரை அமைந்துள்ளதும் உன்னற்பாலதாம். யாதெனில், 'அழகு' என்பது தமிழ்ச் சொல்; 'சுந்தரம்' என்பது சமஸ்கிருத பதம். தன்னை 'அழகு' என்றும் இறைவனை 'சுந்தரம்' என்றும் கூறி தென் மொழி வடமொழி இரண்டினையும் ஐக்கியப்படுத்துகிறார் ஸ்ரீ பகவான்! 'ஆனால் ஸ்ரீ ரமண பிரானைவிட ஸ்ரீ அருணா

சலன் குருவாய் உயர்ந்தவராயிற்றே; அதன்படி தமிழைவிட சமஸ்கிருதம் உயர்ந்தது என்று கூறுகிறாரா?' என்னும் பேதமைக் கண்ணுடையார்க்கு இவ் விரண்டின் சமத்துவம் உணர்த்த வேண்டி, அடுத்ததாக 'அகமும் நீயும் உற்று' என்றருள்கிறார் சர்வசமரச ஞானமணியான பகவான்!! இதில் 'அகம்' என்று சமஸ்கிருதச் சொல்லால் தன்னையும் 'நீ' என்று தமிழ்ச் சொல்லால் ஸ்ரீ அருணாசலனையும் குறிப்பிடுகிறார். "தன் மொழியே பெரியது என்று பித்தங் கொண்டழியும் மொழிப் பற்றினரே! இவ் விரண்டும் இறைவனுக்குச் சமமே. உண்மையில் இரண்டும் ஒன்றே யான இறைவனின் சப்தமே. இரண்டும் கலந்ததே ரமணீயமானது. இரண்டும் இரு கண்களே. நம் இரு கண்களில் எந்த ஒரு கண் உயர்ந்தது? அஃது ஒன்றுமில்லை யன்றோ? அது போலவே தமிழும் சமஸ்கிருதமும்" என்றவாறு நம்மவர் வீண் மயக்கத்துக்கு இவ் வடிகளில் தெளிவு மருந்தருளி யிருக்கின்றனர் போலும்.

"அழகு சுந்தரம் போல்" என்ற சொற்றொடருக்கு இன்னொரு அர்த்தம் உண்டு. அதாவது, 'அழகு', 'சுந்தரம்' என்ற சொற்கள் முறையே ஸ்ரீ பகவானது தாய், தந்தையரின் பெயர்களுமாகும். ஆகவே, "எனது பெற்றோராகிய அழகம்மையும் சுந்தரமைய்யரும் போலவே நானும் நீயும் நாயகி நாயகனாகப் பொருந்தி வேறுபாடின்றி இருப்போமாக" என்பதும் இப் பாடலுக்கு மற்றொரு பொருளாகும்.

விசேஷ உரைகள் வேண்டிய வரைக் கொள்ளலா மாயினும், முக்கியமாக இவ் வடியில் நாம் பெறும் பொருளாவது "ஒரே பொருளாகிய நானும் நீயும் அவ்விதமே இரண்டற்று ஒன்றாய் என்று மிருப்போமாக" என்பதே.

**3. அகம்புகுந் தீர்த்துன் னககுகை சிறையா**
**யமர்வித்த தென்கொ லருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! அகம் புகுந்து ஈர்த்து உன் அக குகை சிறையாய் அமர்வித்தது என் கொல்!

**பொ-ரை:** அருணாசலா! என் சித்தத்தில் நீ வந்து புகுந்து (குடிகொண்டு), என்னை வலுவில் கவர்ந்து இழுத்து

வந்து, உன் இதய குகைக்குள் (பின்னர் என்றும் தப்ப முடியாதபடி) சிறையாக (ஸஹஜ சமாதியில் வாழ) இருத்தி வைத்து விட்டாயே! இது என்ன அற்புதம்!

**வி-ரை:** 'நான் உடல், நான் மனிதன்' என்று நம் உள் எழும் உணர்வே (ஜீவ போதமே) முதல் வார்த்தையில் ஸ்ரீ பகவானால் குறிக்கப்பட்ட 'அகம்' என்பது. இந்த 'நான்' என்பதே ('அகம்' என்பதே) மனம், ஜீவன், அகந்தை என்று பலவிதமாகவும் சொல்லப்படுவது. இது அற்ற இடமே முக்தி — இறைநிலை. ஆதலின் அருணாசலேசன் ஸ்ரீ பகவானை இந்த 'அகம்' புகுந்து, அகமுகமாய் ஈர்த்துக் கொண்டுபோய் தன் அக குகையில் சிறையிட்டுவிட்டார். அதாவது, ஸ்ரீ பகவானிடம் 'நான்' என்ற ஜீவபோதமில்லாமல் தன்னிடத்தில் கவர்ந்து விட்டார் என்பது பாடலால் காணப் படுகிறது. 'புகுந்து ஈர்த்து' என்று ஸ்ரீ பகவான் குறிப்பிட்ட தாவது ஆன்மாபிமுகமான மனதை ஆன்ம அருட்சக்தி கவர்ந்து செல்வது என்பதாகும். 'உன் அக குகை' என்று ஸ்ரீ பகவான் குறிப்பிட்டதாவது ஸ்ரீ அருணாசலனின் இருப்பான உண்மை–அறிவு–இன்ப (சத்–சித்–ஆனந்த) நிலையாகும். முதலில் கூறிய அகந்தை 'அக'மானது உலக வியவகாரம் யாவும் விட்டொழிந்து உண்முகமாகிச் சென்று தன் உருவே அழிந்து ஆத்ம நிலையை அடைவதே 'அக குகை சிறையாய் அமர்வது' என்று சொல்லப்பட்டது. அதுவே இனி எப்போதும் மீளாச் சிறை; அதாவது, அக குகைக்குள் சிறை செய்த பிறகு, ஜீவபோதம் மீண்டும் என்றென் றைக்கும் எழாதவாறு தன்னில் கரைக்கப்பட்டு தன்மயமாய் ஆக்கப்பட்ட நிலை யாகும். அச் சிறைக் கூடமே ஆத்ம நிலையமாகிய இதய குகை என்று கொள்ளலாம். இதயத்தை (ஆன்மாவை)ச் சிறைக் குகையாகவும், மனதைச் சிறைப் படும் பொருளாகவும், அருணாசலன் இதய குகைக்குள் வசிப்பவனாகவும் இங்கு கூறப்பட்டுள்ளது. உண்மையில் இதயம் என்பது ஆத்ம நிலையே யன்றி ஓர் தனி இடமல்ல; ஆதலின் இடமும் பொருளும் ஆத்மாவாகிய ஒன்றே என்பது கொள்ள வேண்டியது. அதாவது, சிறைக் குகையும், சிறைப்படும் பொருளும், சிறை செய்வோனும் சிறை யிட்ட பின் ஒன்றே. ஆகவே ஸ்ரீ பகவான் ஜீவபோத நிலையம்

விட்டு ஆத்ம குகையில் இழுத்து அமர்த்தப்பட்டார் என்பதே பாடலின் கருத்து.*

இந்த ஜீவபோதமாகிய 'நான்' என்பது தானாகவே ஆத்மாவைச் சென்று அடைந்துவிட முடியாது. அதை வெளியிலிருந்து அவ் வாத்ம குகைக்குள் தள்ளவும், உள்ளிருந்து அதைத் தன்னிடம் இழுத்துக்கொள்ளவும் வல்ல ஓர் பரமசக்தியாகிய குரு வேண்டும். அப்பொழுது தான் ஜீவ-அகம் கவர்ந்துகொண்டு போகப்பட்டு, சிவ-அகம் (சிவோஹம்) என்னும் சிறையில் வைக்கப்படும். இதுவே குருவருளின் லீலை! இவ் வருள் லீலையால் தன்னைக் கவர்ந்து தன்மயமாக்கிய அருணாசல பரமகுருவின் அருட் கருணைத்திறனைக் களவுத் திறனாகக் கூறுகின்றார் ஸ்ரீ பகவான். 'என்னை நீ புகுந்து, கவர்ந்து, இழுத்து உன் இடமாகிய குகையில் உனக்காகவே சிறையிட்டு அமர்த்திக் கொண்டாயே! இது என்ன விந்தை!' என்று கூறி வியந்து துதிக்கிறார்.

வெளிமுகமான பொருளின்படி இனிக் கவனித்தாலும் மற்றொரு அர்த்தம் இப் பாடலில் தோன்றுகிறது. அதாவது, ஸ்ரீ பகவான் மதுரையில் அவரது அகத்தில் (வீட்டில்) இருக்கையில், ஸ்ரீ அருணாசலன் தானே தன் நாம மாத்திரத் தாலேயே அவருட் புகுந்து, அவரை வீட்டை விட்டுத் துறவேற்றி இழுத்து வந்து, தன் அகமாகிய (வீடாகிய) அண்ணாமலையின் குகைகளிலே (மலைச்சாரலிலேயே) வேறெங்கும் என்றைக்கும் போகாதபடிச் சிறை செய்து வைத்துவிட்டார் என்றும் பொருளாகிறது. அகம் என்றால் இதயம்; தேகத்தின் இதயம் மார்பகத்தே விளங்குதல் போல் பூமிக்கு இதயம் அருணாசலம் என்பது சாஸ்திரங்களில் கூறப்படுகின்றது. ஆகவே அருணாசலனின் அகமும் பூமியின் இதயமுமான அண்ணாமலையே ஸ்ரீ பகவானால் 'உன் அககுகை' என்று குறிப்பிடப்பட்ட பொருத்தம் இங்கு நோக்கத் தக்கது. எனவே உள்ளும் புறமும் ஸ்ரீ அருணாசல குருவின் அருள் லீலையே ஸ்ரீ பகவானைக் கவர்ந்திழுத்துச் சிறைப்படுத்திக் கொண்டதென்பது இப் பாடலில் நன்கு

*97வது பாடல் இங்கு ஒத்த நோக்கத் தக்கது.

புலனாகின்றது. ஈசனின் கைமாறு வேண்டாக் கருணைதான் என்னே!

**4. ஆருக் காவெனை யாண்டனை யகற்றிடி**
**லகிலம் பழித்திடு மருணாசலா.**

**அ-ம்:** *அருணாசலா! ஆருக்கா எனை ஆண்டனை? அகற்றிடில் அகிலம் பழித்திடும்.*

**பொ-ரை:** *அருணாசலா! நீ யாருக்காக என்னை வந்து இவ்வாறு ஆட்கொண்டாய்? (யாருடைய சிபாரிசுக்காகவும் அன்றி உன் அருளாலேயே ஆட்கொண்டாய் அல்லவா?) ஆகையால் என்னை நீ இனி கைவிடுவாயாகில், இந்த உலகம் முழுவதும் உன்னைப் பழிக்குமே.*

**வி-ரை:** *அருணாசலன் ஸ்ரீ ரமணபிரானை இளமைப் பருவத்திலேயே அருள் ஈந்து ஆட்கொண்டார். இதன் காரணம் என்ன? அவருக்கு அருள் தந்து ஆட்கொள்ளுமாறு யாராவது அருணாசலனிடம் சிபாரிசு செய்தனரா? அல்லது யாரையாவது திருப்தி செய்விப்பதற்காக அருணாசலன் தன் அருளை ஸ்ரீ ரமண பகவானுக்கு அளித்து ஆட்கொண்டாரா? அப்படியாயின், அருணாசலன் யாருக்காகவோ இவரை ஆட்கொண்டார் என்று கூறலாம். அப்படி ஆட்கொண்டிருந்தால், அந்த யார் பொருட்டு ஆண்டுகொண்டாரோ அவரது தகுதியின்மையின் பொருட்டு பின் ஒருகால் கைவிடவும் நேரும். ஆனால் நடந்தது அப்படியல்ல என்கிறார் ஸ்ரீ ரமண பகவான். "ஹே, அருணாசலா, நீ யார் பொருட்டாக, யாருக்காக என்னை ஆண்டாய்? யார் பொருட்டும் அல்லவே! நின் அருள் காரணமாகவே ஆண்டனை யல்லவா? மேலும் நீ என் பொருட்டும் (என் மிகுதியான தவத்தின், புண்ணியத்தின், அன்பின் பொருட்டும்) கட்டுப்பட்டுக் கடமையால் என்னை ஆட்கொண்டாய் என்று கூறவும் முடியாதே" என்கிறார். அருணாசலனின் இயல்பான அருள் ஒன்றைத் தவிர, தான் முதற்கொண்ட யார் பொருட்டாகவும் இவ் ஆட்கொண்ட செயல் நடைபெறவில்லை என்பது கருத்து. அவ்விதம் நடந்திருந்தால், பின்பொரு காலத்தில் அந்த பிறரோ, அல்லது ஸ்ரீ ரமண பிரானோ தனக்குச் சரியாக நடந்துகொள்ளவில்லை*

என்று ஏதேனும் ஒரு குற்றம் சாட்டி அருணாசலன் கைவிட்டு விடுவாரோ எனலாம். ஆனால் இங்கு அப்படி நடக்கவில்லை. கருணைக் கடலான அருணாசலன் பிடித்தால் விடாத, தன் இயல்பான, மஹா பிரவாஹமாகிய தன் கருணையினால் (அருளினால்) தானே விரும்பி ஸ்ரீ பகவானை பாலப் பிராயத்தில் ஆட்கொண்டார் என்று தெரிகிறது.

அப்படி அருளுகின்ற அருணாசலனின் அருள் திறத்தை அகிலம் முழுவதும் வியந்து வியந்து துதித்து மகிழ்வது இயல்பன்றோ? ஒரு காரணமுமின்றி, மிக மிக அதி கருணையால் தானே வலிந்து ஆட்கொண்ட தன் பக்தனைத் தானே பிறகு கைவிட்டார் என்றால், அது உலகுள்ளளவும் அருணாசலனின் அருளுக்கு (காரணமின்றி தானே இரங்கி அருளும் இறைவன் என்ற மகிமைக்கு)ப் பெரும் பழி யல்லவா? அதைக் குறித்து ஸ்ரீ பகவான் "இறைவா, அப்படி உன் பொருட்டு நீயே என்னை ஆட்கொண்டுவிட்டு, பின்பொருகால் என் பிழை குறித்தோ அல்லது பிறருக்காகவோ என்னை நீ அடிமைத் திறத்தினின்றும் விலக்குவாயாயின், இவ் வுலகமெல்லாம் உன் அருளைப் பழிக்குமே! அதனால் என்னை என்பொருட்டும், எதன்பொருட்டும் என்றும் விலக்கி விடாதே" என்று பிரார்த்திக்கின்றனர்.

**5. இப்பழி தப்புனை யேனினைப் பித்தா**
**யினியார் விடுவா ரருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! இப் பழி தப்பு; உனை ஏன் நினைப்பித்தாய்? இனி யார் விடுவார்?

**பொ-ரை:** அருணாசலா! இப் பழிச்சொல்லை நீ அடையாதபடி தப்பித்துக்கொள்வாயாக. உன்னை நான் நினைக்கும்படி நீயே ஏன் செய்தாய்? (நீ அப்படி செய்ததால்) இனிமேல் (இவ் விணக்கத்தை) யாரால் விட முடியும்? (இருவராலும் விட முடியாது என்றவாறு.)

**வி-ரை:** சென்ற செய்யுளில் 'அகிலம் பழித்திடும்' என்று குறிப்பிட்ட பழியையே (இறைவன் தன்னைப் பிரித்து விடுவதென்பது என்றுமே நடவாததாயினும், நடவாததை

நடக்குமேயானால் என்று கொண்டால் நேரும் பழியையே) இச் செய்யுளில் 'இப் பழி' என்று குறிப்பிடுகிறார் ஸ்ரீ பகவான். உலகத்தார் 'இவ் வருணாசலனின் கருணை இவ்வளவு தானா?' என்று தூற்றுவாரே என்பதே அந்தப் பழி யாகும். இப் பழியினின்றும் தான் தப்ப வேண்டுமாயின், அருணாசலன் ஸ்ரீ பகவானை என்றும் மீளா ஆளாய்க் கொண்டருள வேண்டும் என்பதே கருத்து.

இந்த நிர்ப்பந்தம் அருணாசலனுக்கு ஏற்பட்ட காரணம் என்ன? அதை அடுத்த வாக்கியமாய் "உனை ஏன் நினைப்பித்தாய்?" என்று கூறுகிறார் ஸ்ரீ ரமண பகவான். உலக மக்கள் தன் முயற்சியால், தன் நினைவால், தன் தபசினால் மட்டும் இறைவனை அடைந்துவிட முடியாது. அத்துடன் இறைவனின் பெருங்கருணையான அருளும் அவர்பால் சுரக்க வேண்டும். இவ்வாறு அருளால் ஆட்கொள்ளப்பட்ட பிறகுதான் அவ் விறைவனை இடை விடாமல், என்றும் விடாமல் நினைக்க, அனுபவிக்க முடியும். அதனால் ஸ்ரீ பகவான் 'நான் உன்னையே நினைக்கும்படி ஏன் செய்தாய்? அவ்விதம் செய்த காரணத்தால்தான் இப் பழியினின்று தப்ப வேண்டிய அவசியமும் உனக்கே வாய்த்தது' என்கிறார். உலக வாசனைகள் யாவும் விட்டு உயிர்க்குயிரான அருணாசல பரமாத்மனையே பற்றிக்கொண்டிருக்கும் நினைவைத் தனக்கு அவ் வருணாசலனே உண்டாக்கினான் என்கிறார் ஸ்ரீ ரமண பகவான்.

அவ்வாறு தன்னையே நினைத்துப் பற்றிக்கொள்ளச் செய்தபின்னர் 'விட்டு விடுதல்' என்றால், அதை யார் செய்வது? அருணாசலனா? ஸ்ரீ ரமண பிரானா? விடுவ தென்றால் பிடித்தவன்தானே விட வேண்டும்! பிடிப்போ (அருணாசலனை ஒட்டிக் கிடக்கும் நினைப்போ) அருணா சலனால்தான் நினைப்பிக்கப்பட்டிருக்கிறது என்கிறார். பிறகு இனியார் விடுவார்? பிடிப்பு அவனுடையது; ஆதலால் விட்டாலும், அச் செயல் அவனுடையதே. அக் குற்றம் அருணாசலனுடையதேயாய் விடுமன்றோ? ஏனெனில், பிடிக்கக் காரணமாகாத ஸ்ரீ ரமண பகவானால் விட மாத்திரம் எப்படிக் காரணமாக முடியும்? அதாவது, அருணாசலனை விட்டுவிட ஸ்ரீ ரமண பகவானுக்கு அதிகாரமே

இல்லை என்பது பெறப்படுகிறது. ஸ்ரீ ரமண பகவான் தானாகவே அருணாசலனை நினைத்திருந்தால், அவர் அந் நினைப்பை விட்டுவிடவும் ஹேது உண்டு. ஆனால் மார்ஜால நியாயப்படி அருணாசலனால் நினைப்பிக்கப்பட்டதால், இனி அந் நினைப்பை ஸ்ரீ பகவானால் விடமுடியாது. "பேய்த்தனம் விட விடாப் பேயாப் பிடித்தெனை..." என்று 71வது பாடலில் கூறியபடி, ஸ்ரீ பகவான் அருணாசலனின் நினைவை விட எண்ணினாலும் அந் நினைவு அவரை விடாது. "புலி வாயிற் பட்டது எவ்வாறு திரும்பாதோ, அவ்வாறே குருவின் அருட்பார்வையிற் பட்டவர்கள் அவரால் ரக்ஷிக்கப்படுவரே யன்றி ஒருக்காலும் கைவிடப்படார்" என்ற ஸ்ரீ ரமண வாக்கும் இங்கு ஒத்து நோக்கத்தக்கது. அருணாசலன் தானே புரிந்த அருள் லீலை இது வகையால், உலகம் பழிக்கும்படி தானே விட்டுவிடவும் மாட்டான். அதனால் இனி விடுவது இவர்கள் இருவருள் யாரால் முடியும்? யாராலும் முடியாது. அதைத்தான் "இனி யார் விடுவார்?" என்றருளினர் ஸ்ரீ ரமண பகவான்.

மேலும் ஸ்ரீ ரமண பகவான் அருணாசலப் பெருமானால் பரிபூரணமாக ஆட்கொள்ளப்பட்டுவிட்ட நிலையில் தமக்கும் அருணாசலனுக்கும் ஏற்பட்டுள்ள ஐக்கியம் கடலிற் கலந்த உப்புப் பதுமைக்கும் கடலுக்கும் ஏற்பட்டுள்ள இணக்கம் போன்றதே யாகும். கடலிற் கரைந்த உப்புப் பதுமை கடல் நீரிலிருந்து பிரிக்க முடியாதபடி ஒன்றாய்க் கலந்துவிடுகின்றது. பின் கடல் நீர் அவ் வுப்புப் பதுமையைத் தனித்து வெளியேற்ற முடியாது; பதுமையும் தானே வெளியேற இயலாதன்றோ? அவ்வாறே ஸ்ரீ ரமண பிரான் ஸ்ரீ அருணாசலனுடன் கலந்து கரைந்து விட்ட படியால், பிறகு ஸ்ரீ அருணாசலனோ ஸ்ரீ ரமணரோ ஒருவரை ஒருவர் எவ்விதத்தும் பிரிய முடியாது.

**6. ஈன்றிடு மன்னையிற் பெரிதருள் புரிவோ**
**யிதுவோ வுனதரு ளருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! ஈன்றிடும் அன்னையில் பெரிது அருள் புரிவோய்! இதுவோ உனது அருள்?

**பொ-ரை:** அருணாசலா! பெற்ற தாயினும் பெரிதும் இரக்க முடையவனே! முன்கூறியபடி என்னை நீ கைவிடு

வாயாகில், இதுவோ உனது திருவருளுக்குப் பொருந்தும்? (பொருந்தாது என்றவாறு.)

**வி-ரை:** உலகத்தில் ஒருவனுக்குத் தன்னைப் பெற்ற தாயைப் போல் தன்னிடம் இரக்கமும் பிரியமும் உடையவர் யாரு மிருக்க முடியாது என்பது முடிவு. ஆனால் ஒருவன் ஈசனின் பேரருளை உணரும்போது, அவனுடைய தாயிடம் அவன் அனுபவித்த அன்பு அமுதத்தின் முன் ஆமணக் கெண்ணெய் போல் சுவை யற்ற தாகிவிடுகிறது. இருள் சூழ்ந்த இரவில் மின்மினிப் பூச்சிகள் ஒளிவிடுகின்றன. ஆயினும் நக்ஷத்திரங்களின் ஒளி உண்டாயின், மின்மினி ஒளியிலும் அது மிகுந்து விடுகிறது. அதனினும் மிகுந்தது சந்திர ஒளி. உலகில் தன் கடமை கரவாதவளான ஓர் பெற்ற தாயின் அன்பை இச் சந்திர ஒளிக்கும், மற்றவ ரன்பை மின்மினி, நக்ஷத்திர ஒளிகளுக்கும் ஒப்பிடலாம். ஆனால் எல்லையிலாப் பிரகாசத் துடன் இரவி (சூரியன்) எழுந்தானுயின், அதன்பின் சந்திர ஒளி பயனற்றதாய் விடுகிறதன்றோ? அந்த சூரியப் பிரகாசமே இறைவனின் அன்பு — கருணை — அருளுக்குச் சமமாகக் கூறத்தகும். இரவியின் முன் இந்து போல் ஈசன் முன் ஈன்ற தாய். இதனையே ஸ்ரீ பகவான் இவ் வடியில் விளக்கு கின்றார். வளர்க்கும் செவிலித் தாயார் போன்ற பிற தாய்மார் பலர் ஒருவனுக்கு அமையலாமாதலின், அவர் களுள் பெற்றெடுத்த தாயே பிரியம் மிக உடையவ ளாகையால் ‘ஈன்றிடும் அன்னை’ என்றனர். ஆனால் அவ் அன்னையினும் பெரிதருள் புரிவோன் அருணாசலனே என்று கூறியதால், இறையருளானது தாயன்பினும் மிக உயர்ந்தது என்பது பெறப்படுகின்றது.

தாயன்பு புறக்கட்டுப்பாடுகளுக் குட்பட்டது. தாயன் புக்குக் குறைவில்லாத போதும் கர்ணன் பிறந்ததுமே அக் குழந்தையைக் கைவிட வேண்டிய சூழ்நிலையின் நிர்ப்பந்தம் ஈன்ற தாயான குந்தி தேவிக்கு ஏற்பட்ட வரலாறு இதற்குப் போதிய சான்றல்லவா? ஆனால் கடவுளுக்கு ஜீவர்கள் பாலுள்ள அன்பு எந்தச் சூழ்நிலை காரணமாகவும் எந்த நிர்ப்பந்தம் காரணமாகவும் தன் பக்தனைக் கைவிட இடந்தராது. இதனாலன்றோ ஸ்ரீ பகவான் சென்ற பாடலில் “இனி யார் விடுவார் அருணாசலா?” என்று பாடுகின்றனர்?

ஈன்ற தாயானவள் எவ்வளவு பிரியமானவளாயினும், மரணம் என்ற உபாதியைத் தவிர்க்க முடியாதவளாய்த் தன் பிரிய மைந்தனை விட்டுவிட்டு எப்படியும் பிரிந்து, மறந்து, மறைந்து விடுகிறாள். அவ்வாறே ஓர் பிரிய மகனும் கூட மரணத்தால் தன் தாயை விட்டுப் பிரிந்து சென்றுவிடவும் நேரும். மரணத்தை எல்லையாயுடையதே உலக வாழ்வு. ஆதலால் அதனிடையே காணப்படும் பிரியமெல்லாம் சாசுவத மற்றதே. மேலும் நோயும், பொருளின்மையும், பரஸ்பர உதவியின்மையும் தாய்க்கும் சேய்க்கும் இடையிற் புகுமேல், அவர்களது அன்பில் மாசு படிவது திண்ணம். ஆனால் அருணாசலனோ மரணத்தைத் தாண்டி என்றும் விளங்குபவனாகையாலும், அத்தகைய தன் அதீத ஆத்மநிலையையே தன் பக்தனான ஸ்ரீ ரமண பகவானுக்கும் அளித்துத் தன்னில் அபேதமாய்ச் செய்து கொண்டதாலும், வறுமை, நோய், இருவரிடையே பரஸ்பர உதவிநாட்டம் இவைகள் எல்லாம் ஆத்ம சொரூபத்தில் இன்மையாலும், தாய்-சேய் இவர்களிடையே உள்ள பரிவு போலல்லாமல் அருணாசலனின் அருள் ஈன்றிடும் அன்னையின் பெரிதருள் ஆகும் என்பது வெளிப்படை.

கடவுளாகிய அருணாசலனுக்கும் ஜீவனாகிய பக்தனுக்கும் இடையே உறவு எப்படி உண்டாகிறது? நெருப்புக்கும் அதன் பொறிக்கும் உள்ளது போன்றதும், கடலுக்கும் அதில் எழும் மேகத்துக்கும் உள்ளது போன்றதுமே கடவுளுக்கும் ஜீவனுக்கும் உள்ள உறவாகும். எனவே கடவுள்-ஜீவ உறவு இயல்பானதாகும். ஆன்மாவிலிருந்து ஜீவன் எப்போது எழுகின்றதோ, அப்போதே அருளும் கிளம்பிவிடுகிறது. எந்தச் சூரியனின் வெப்பம் கடலினின்று மேகங்கள் உற்பத்தியாகி எழுவதற்கு காரணமானதோ, அந்த வெப்பமே காற்றினை எழுப்பி, அக் காற்று மேகங்களை ஓடச் செய்கிறது. அதுபோலவே, எந்தப் பிரம்ம சுதந்திரம் தவறாகப் பிரயோகப்படுத்தப்படுவதால் ஆன்மாவினின்றும் ஜீவன் எழுகின்றதோ, அந்தப் பரிபூரண பிரம்ம சுதந்திரமே அப்போதே அருட்சக்தியாய் கிளம்பி, எழுந்த ஜீவனின் உய்வு பொருட்டு வேலை செய்யத் தொடங்கிவிடுகிறது. கடற்காற்று கடலினின்றும் எழுந்த மேகக் கூட்டங்களை விரட்டி குளிர்மலைப் பகுதிக்குக் கொண்டுசென்று அங்கு மழையாகப் பெய்விப்பதால்

அம் மழை நீர் பல வழிகளில் ஓடி கடைசியில் கடலை அடைவதைப் போல, பரம்பொருளின் அருட்சக்தி ஜீவனுடனேயே நீக்கமற இருந்து முதலில் ஈசனாகவும் தக்க காலத்தில் குருவாகவும் தோன்றி அதனைப் பிறவிகள் தோறும் வழி நடத்தி, பக்குவப்படுத்தி, முடிவில் ஆன்மாவாக ஐக்கியப்படுத்துகிறது.

"ஐயனே எனதுள் ளேநின் றனந்தசன் மங்கள் ஆண்ட
மெய்யனே உபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி..."

— கைவல்லியம் - 1.79

தாயுறவு ஒரு ஜென்மத்து உறவுதான். ஜென்மத்துக்கு ஜென்மம் தாய் மாறுகிறாள்.

"அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ
முன்னம் எத்தனை எத்தனை சென்மமோ
மூட னாய்அடி யேனும் அறிந்திலேன்
இன்னும் எத்தனை எத்தனை சென்மமோ
என்செய் வேன்கச்சி ஏகம்ப நாதனே."

— பட்டினத்தார்

ஆனால் அருணாசலனோ நமது கணக்கற்ற பிறவிகள் தோறும் உயிர்த்தாயாக விளங்குகிறான். ஆகவே அருணாசலத் தாய்க்கு சேயான ஜீவனுடன் உள்ள உறவு ஒரு ஜென்மத்து உறவு அல்ல. அது ஜென்மந்தோறும் தொடர்ந்து வருவது. எனவே தாயுறவு ஜன்மாந்திரத்தில் மாறும் என்றாலும், கடவுளுறவு மாறாது.

தாய்க்குச் சேயுறவு, தான் தாயென்றும், இது என் சேய் என்றும் எழுந்த எண்ணவடிவ முடையதால், அது சாசுவத மற்றது; மாற்றங்களுக் குட்பட்டது. ஆனால் கடவுளுக்கு ஜீவ சம்பந்தம் சுபாவ இருப்புறவாகையால், அது நித்தியம். தாய்க்குச் சேயுறவு, எழுந்த அம்ச உணர்வில் தோன்றிய உறவாகையால், அது கண்டம்; கடவுளுக்கு ஜீவசம்பந்தமோ இருப்புணர்வில் அடங்கிய உறவாகையால், அது பூரணம். அன்னையுறவு அன்னியப்

பிரிய வடிவம்; ஆண்டவன் உறவோ அனன்னிய ஆன்மப் பிரிய வடிவம். அன்னியப் பிரிய வடிவமே ஆசை என்பது; தன்மயமான அனன்னியப் பிரிய வடிவமே அன்பு என்பது. இவ் அன்பே சிவம்.

பிரியம் என்பது அனன்னிய மாகும் போதுதான் பூரணமாகிறது. கடவுளுக்கு நாம் அனன்னியம்; ஆனால் நமக்கோ கடவுள் அன்னியம். ஆகையால்தான் நமது பக்தி — கடவுளிடமுள்ள பிரியம் — போதாக் குறையானது; ஆனால் கடவுளின் அருளோ — நம்பால் உள்ள பிரியமோ — சம்பூரணமானது. நாம் கடவுளை நமக்கு அன்னியப் பொருளாக எண்ணி வழிபடும் வரை, நமது பக்தி பூரணப் பிரியமாகாது. இத்தகைய குறைபாடுடைய பிரியம் இவ்வாறு கடவுளின் அருளுக்கு ஈடாகாதாகையால், நமது பக்தி ஒருகாலும் அவனது அருள் பொழிவுக்குப் போதிய காரணமாகாது. அதனால்தான் அருணாசலனின் அருள் அவ்வியாஜ கருணை — காரணமில்லாத கருணை — எனப் பட்டது.

நம் உண்மை சொரூபத்தின் இயல்பான அம்சங் களாகிய சத்து, சித்து, ஆனந்தம் ஒரே பொருளாகையால், நம் இருப்பை அறிவதே ஆனந்த மாகும். இவ் வானந்தமே கடவுளின் பிரியமாக — அருளாக — விளங்குவதால், 'நான் இருக்கிறேன்' என்ற நம் இருப்பறிவே — ஆன்ம விளக்கமே — சரியான அருள் என்று ஸ்ரீ பகவான் கூறுவதுண்டு. எனவே அருணாசலனின் திருவருள் பாரபட்சமின்றி எல்லா ஜீவர்களின் உள்ளத்திலும், எல்லா இடங்களிலும், எல்லா காலங்களிலும், எல்லா நிலைகளிலும் ஜனனத்தையும் மரணத்தையும் பிரளயத்தையும் கடந்து 'நான் இருக்கிறேன்' என்று அவ்வியாஜமாய் விளங்கிக் கொண்டிருக்கும் அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபமாகையால், "ஈன்றிடும் அன்னையில் பெரிதருள் புரிவோய்" என்று ஸ்ரீ ரமண பகவான் அருணாசலனை விளிக்கிறார்.

"இதுவோ உனதருள்" என்பதற்கு இரு பொருள் உண்டு. 'ஓ' என்பதை ஏசல் குறிப்பாக எடுத்துக் கொண்டால், 4வது பாடலில் மேற்கூறியவாறு தன்னை இறைவன் விலக்குவானாயின் அச் செயலே 'இது' என்னும்

பதத்திற்குப் பொருளாகும்; 'ஓ' என்பதை வியப்புக் குறிப்பாக எடுத்துக்கொண்டால், 5வது பாடலில் கூறியவாறு அருணாசலனை அவனருளாலே நினைப்பிக்க வைத்து அவனுடன் ஸ்ரீ பகவான் பெற்ற பேரின்ப அத்வைத நிலையே 'இது' என்பதற்குப் பொருளாகும். அதாவது, இந்த அடிக்கு முன்னுள்ள அடிகளில் கூறியுள்ளதைத் தொடர்ந்து, 'அவ்வாறு நீ என்னை ஒருகால் விட்டுவிடுவாயோ? அப்படி விடுவதெனின், தாயினும் சிறந்த தயையுடையவனே, உன் அருளின் சிறப்பு இதுதானோ?' என்று உரிமையால், பக்திப் பெருக்கால் அருணாசலனை ஏசிக் கெஞ்சி முறையிடுவதாகக் கொள்வது முதற் பொருளின் சாரம். தனக்கு அருள் செய்து மீளாப் பெரும் பதம் தந்த அருணாசலனின் அருளை வியந்து, 'ஓ, இது உன் அருள்தான்!' என்று ஸ்ரீ பகவான் கூறுகிறார் என்பது இரண்டாவது பொருளின் சாரம்.

**7. உனையே மாற்றி யோடா துளத்தின்மே**
**லுறுதியா யிருப்பா யருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! உனை ஏமாற்றி ஓடாது உளத்தின் மேல் உறுதியாய் இருப்பாய்.

**பொ-ரை:** அருணாசலா! என் மனம் (அதனை வசப்படுத்தி வைத்திருக்கும் உன்னிடமிருந்து தப்பி) உன்னை ஏமாற்றிவிட்டு (வெளியுலகில் ஆசை கொண்டு) ஓடாதபடி நீ அதன்மேல் உறுதியாய் அமர்ந்திருந்து காப்பாயாக.

**வி-ரை:** ஸ்ரீ பகவானது உள்ளமானது அருணாசலனின் அருட்சக்தியால் உயர்வற உயர்ந்த பரமாத்ம நிலையுற்று, அவ் வருணாசலனே உள்ளமாய், உள்ள பொருளாய், உள்ளபடி விளக்க முற்றது. இவ்வாறு ஆரூட நிலையுற்ற அவ் வுள்ளம் பிராரப்தத்தாலோ, பூர்வ வாசனா பலத்தாலோ, வேறெதனாலுமோ தன்னிலையினின்றும் தவறிக் கீழிறங்கி விடாமல் என்று மிருக்கும்படி அளவிலா அருட் சக்தியால் தன் உள்ளத்தை வசப்படுத்தி வைத்திருக்கும் அத் தலைவனை ஸ்ரீ பகவான் கூவி "என் உள்ளத்தின்மேல் நீ இவ்வாறே உறுதியாய் இருந்தருள்வாயாக" என்று பிரார்த்தித்துக்கொள்கிறார்.

அன்னியமற்ற ஏகமாகையால் பிரம்மம் சுதந்திர மானது*. இச் சுதந்திரத்தால் இருப்பாக இருக்கவோ, எழுச்சியாக எழவோ தனக்கு வல்லமை உண்டு. இத் தற்சுதந்திரத்தை இருப்பாக இருப்பதற்குப் பிரயோகப் படுத்துவது 'சத்' எனப்படும் உள்ளபொருளாய் உள்ளபடி நிற்கும் நிலை யாகும்; அதற்கு மாறாக, இத் தற்சுதந் திரத்தை எழுச்சியாக எழுவதற்குப் பிரயோகப்படுத்துவது கர்ம உற்பத்தி யாகும். தன்னை இருப்பாக உணர்வதற்குத் தற்சுதந்திரத்தைப் பிரயோகப்படுத்துவது 'சித்' எனப்படும் மெய்யறிவாய் விளங்கும் நிலை யாகும்; அதற்கு மாறாக, தன்னை எழுச்சியாக உணர்வதற்குத் தற்சுதந்திரத்தைப் பிரயோகப்படுத்துவது அறியாமை உற்பத்தி யாகும். தான் ஏகமாம் தானேயாகிய ஆன்மாவுக்கு அனன்னியமாக இருப்பதாக உணர்வது இருப்பு; தன் அகண்ட ஏக நிலையை மறந்தவன் போல் தான் ஆன்மாவுக்கு அன்னியமாக இருப்ப தாக உணர்வது எழுச்சி. இவ்வாறு தற்சுதந்திரத்தால் கற்பனையாய்ப் பிரமாதமுற்று இருப்பாக நில்லாமல் எழுச்சியாக ஓடலே "உன்னை ஏமாற்றி ஓடல்" என்று ஸ்ரீ பகவானால் இவ் வடியில் குறிக்கப்பட்டுள்ளது.

இவ் வடியினால் ஸ்ரீ பகவான் சாதகர்களுக்கு அறிவுறுத்துவதாவது "உறுதியாய் **இரு; ஓடாதே**" என்ப தாம். ஏனெனில், ஒரு முறை ஒரு சிறிது பிரமாதத்திற்கு இடமளித்தாலும்கூட, படிகளில் உருண்டு எம்பிக் குதித்து ஓடும் ரப்பர் பந்தைப் போல் மனம் வாசனை வசப்பட்டு மேலும் மேலும் வேகங்கொண்டு வெளியே ஓடி நம்மை அடியோடு கவிழ்த்துவிடும். எழுச்சியாகத் தன்னை உணரும் மனம் புறமுகப்பட்டு உலகை நோக்கியே ஓடும் இயல் புடையது. அதற்குத் தனது அற்ப ஜீவ வலிமையினாலேயே அவ்வாறு ஓடாது ஆன்மாவில் நிலைத்து நிற்க இயலாது. அது ஓடாது ஆன்மாவில் நிலைத்து இருக்க வேண்டுமானால், அருணாசலன் அம் மனத்தின்மேல் உறுதியாய் இருக்க வேண்டும் — அதாவது, அம் மனத்தினுள் இருப்பு மாத்திர மாய் நன்கு பிரகாசிக்க வேண்டும். எனவே ஸ்ரீ பகவான் அருணாசலனிடம் "உனது பரிபூரண ஏகான்ம சொரூபமாய் மாத்திரம் நீ இதயத்தில் நன்கு விளங்கியருள்வாயாக" என்று வேண்டுகின்றனர்.

---

* இதன் வரிவான விளக்கத்தை 'ஸ்ரீ ரமண வழி' பக்கம் 380-381ல் காண்க.

'உன்னையே மாற்றி' என்பதற்கு மற்றொரு பொருளும் உண்டு. கயிறே மதிமயக்கத்தால் பாம்பாக மாற்றிக் காணப்படுவது போல், ஆன்மசொரூபத்தை உள்ளபடி அறியாத அறியாமை மயக்கத்தால் அவ் ஆன்மாவே உலகத் தோற்றமாக மக்களால் மாற்றிக் காணப்படுகிறது. அதாவது, மேற்கூறியவாறு தற்சுதந்திரத்தால் தன்னை ஆன்மாவின் வேறாக அன்னிய உணர்வு கொள்ளும்போது, தன் நிஜஸ்வரூப மீதியே உலகம், தெய்வம் — ஈசஜகம் — என மாற்றிக் காணப்படுகிறது. இவ்வாறு காணப்படும்போது, ஆன்ம சொரூபமாகிய அருணாசலன் உள்ளபடி தோன்றுவதில்லை. இதை ஸ்ரீ பகவான் "ஜகம் தோன்றும்போது சொரூபம் தோன்றாது; சொரூபம் தோன்றும் (பிரகாசிக்கும்) போது ஜகம் தோன்றாது" என்று 'நான் யார்?' என்னும் நூலில் கூறியுள்ளார். மேலும் தனக்கு அன்னியத் தன்மை இவ்வாறு ஏற்பட்டதும், தன் அன்பு — தன்மீதே இயல்பாக இருந்து வரும் ஸ்வாத்மப்பிரியம் — பிறபொருளாம் உலகம் தெய்வம் இரண்டின் மேலும் ஆசையாக ஓடுகிறது. இவ்வாறு நம் திருஷ்டி தோஷத்தால் அருணாசலனின் இயல்பாகிய இருத்தலே ஓடலாக மாற்றமடைகிறது. ஆகவே "அருணாசலனே, என் உள்ளமானது உள்ளபொருளாகிய உன்னையே திருஷ்டி தோஷத்தால் பௌதிகப் பிரபஞ்ச விஷயங்களாக மாற்றிக் கண்டு மயங்கி பூர்வ வாசனையால் அவ் விஷயங்களை விரும்பி யலையாதபடி அந்த உள்ளத்தின்மேல் மாற்றம் ஏற்பட இடந்தராமல் உறுதியாய் இருப்பாயாக" என்பது மறு பொருள்.

**8. ஊர்சுற் றுளம்விடா துனைக்கண் டடங்கிட**
**வுன்னழ கைக்காட் டருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! ஊர் சுற்று உளம் உனை விடாது கண்டு அடங்கிட உன் அழகைக் காட்டு.

**பொ-ரை:** அருணாசலா! வெளியுலகில் ஓயாமல் சுற்றித் திரியும் மனம் ஆன்மாவாகிய உன்னை விட்டு நீங்காமலும் இடைவிடாமலும் கண்டு, உன்னில் அடங்குமாறு அம் மனத்திற்கு உன் அருளழகைக் காட்டி வசப்படுத்துவாயாக.

**வி-ரை:** 'ஊர் சுற்றல்' என்பது முன்னிலை படர்க்கைகளாகிய அன்னியப் பொருள்களை நாடுவதே; இது மனத்தின் சுபாவம். ஆனால் ஆன்ம சுபாவமோ அன்னியத்தை நாடாது தன்னில் தானாய் நிற்பது. நம் கவன சக்தி அன்னியத்தை நாடும்போது அது மனமாக எழுச்சியடைகிறது; அது தன்னையே நாடும்போது ஆன்மாவாய் அமைகிறது. எனவே ஆன்மாவுக்கு வேறாகாத மனம் அன்னியத்தைக் கண்டால் பாயும்; தன்னியல்பைக் கண்டால் அடங்கிவிடும். இவ்வாறு அருணாசலன் எனப்படும் ஆன்ம சொரூபத்தைக் கண்டால் மட்டுமே மனம் அடங்குமாதலால், ஸ்ரீ பகவான் "உன்னைக் கண்டு அடங்கிட" என்று பாடுகிறார். இவ்வாறு மனம் ஆன்மாவை ஆறுநெய் வீழ்ச்சி போல் விடாது கண்டால், அது மீளாது ஒடுங்கிவிடும் — நாசமுறும்.

மனம் எப்போதும் சுகந்தரும் இனிய சுவைகளிலேயே நாட்டங் கொள்ளும் ஓர் சக்தி. ஆனால் அது பூரண சுகம் தரும் பொருள் எது வென்று அறியாத தோஷத்தால், கற்பனையான உலக விஷயாதிகளைச் சுகம் என்று நம்பி அவைகளை ஒவ்வொன்றாக நாடி அலைகின்றது. உலகச் சுகப் பொருள்கள் பலவற்றுள் ஏதாவது ஒன்றிலாவது பூரண சுகம் அதற்குக் கிடைத்திருக்குமாயின், அது பின்னும் ஊர் சுற்றாமல் அப் பொருள் ஒன்றிலேயே நிலைத்து அடங்கி இருந்திருக்க முடியும். ஆனால் மனத்தின் செயல் அப்படியிருக்கக் காணோம். ஒன்றை அடைந்த பின் திருப்தியுறாமல் மற்றொன்றை நாடி அலைகின்றது. உலக சுகங்கள் அற்ப, அநித்தியமானவையால்தான் மனதிற்கு அலைச்சல் ஓய்வதில்லை. ஆனால் அம் மனமோ எப்போதும் சுக நாட்டமுடைய ஒரு சக்தி என்றோம். அதனால் அது பூரண சுகம் எதுவோ அதிலன்றி வேறெங்கும் அமைதியுறாது. அந்தப் பூரண சுக வடிவம் எதுவெனில், அருணாசலன் எனப்படும் ஆத்ம சொரூபமே. மனமோ ஆத்மாவை அறியாத (காணாத) காரணத்தால் 'இது சுகமோ? அது சுகமோ? என்று ஊர் சுற்றுகிறது. இதை விளக்கவே ஸ்ரீ பகவான் "அருணாசலா, ஆத்ம சொரூபியாகிய உன் பேரழகை இந்த மனத்திற்கு நீ ஒருமுறை காட்டிவிடுவாயாக. அப்படி ஒருமுறை உன் அழகை (பூரண சுகத்தை) அது கண்டு

விட்ட தென்ருல், சுக நாட்டமேயுள்ள அம் மனம் பிறகு வேறென்றையும் விரும்பாமல், உன்னை விடாமல், உன்னையே கண்டுகொண்டிருப்பதாகிய ஆத்ம நிஷ்டையால் உன்னிடமே அடங்கி, உன்னில் கரைந்துபோய் விடு மன்றோ?'' என்று பிரார்த்திக்கும் முறையில் மனச் சஞ் சலம் நீங்காத மக்களுக்கு ஓர் உளவு சொல்லித் தந்தருள் கின்ருர்.

உலகப் பொருள்களின் அழகெல்லாம் சத்திய வஸ்து வின் சௌந்தரிய பொலிவின் பின்னப்பட்ட பிரதிபிம்பமே. எனவே பூரணமான சௌந்தரியம் என்பது சத்திய வஸ்துவே யாகும். சத்தியம் — சிவம் — சுந்தரம். புறத்தே காணப்படுகின்ற அழகெல்லாம் காலத்தால் சிதைவதால் உண்மை அழகல்ல. ஒரு நாள் இது அழகென்றும், பிறகு இது அழகல்ல என்றும் மாற்றி மாற்றி நினைக்கும் மனம் விவஸ்தையற்ற தாகும்; அது ஒருபடித்தாயிராது. எனவே மாற்றங்களுக் கிடையிலும் மாற்றமுருது நிலையாக உள்ள தைக் காண்பதே அழகை உள்ளபடி காணல். இத்தகைய மாற்றமில்லா அழகாகிய சொரூப லாவண்யத்தைக் காணும்போதுதான், மனம் மாற்ற மடையாது ஆன்மாவை விடாது கண்டு அடங்கிவிடும். ஆனல் அருணுசலன் தன் அழகை (தன் பேரின்ப இயல்பை)த் தானே தன்னரு ளாலே காட்டினலன்றி, யாரே அதைக் காண வல்லார்? எனவே ஸ்ரீ பகவான் "உன்னழகைக் காட்டு அருணுசலா" என்று பிரார்த்திக்கின்ருர்.

**9. என்னையழித் திப்போ தென்னைக்கல வாவிடி**
**லிதுவோ வாண்மை யருணுசலா.**

**அ-ம்:** அருணுசலா! என்னை இப்போது அழித்து என்னைக் கலவாவிடில், இதுவோ ஆண்மை?

**பொ-ரை:** அருணுசலா! (நீயே எல்லா வுயிர்கட்கும் பதியான புருஷோத்தம ஞகையால்) 'நான்' என்னும் ஜீவபோதத்தை இப்பொழுதே அழித்து, நீ என்னை இரண்டறக் கலந்துகொள்ளாவிட்டால், இது வீரமிக்க உன் ஆண்மைக்குப் பொருந்துமோ? (பொருந்தாது என்பதாம்)

**வி-ரை:** ஞான சற்குருவாகிய அருணுசலனின் பேராற்றலாகிய மோன அருட்சக்திதான் இங்கு 'ஆண்மை' எனக் கூறப்பட்டது. அகந்தையை அழிக்கவல்ல இத் தகைய உண்மையான ஆண்மை சற்குருவுக்கே உரித்த தாகும். எனவே தனிப்பட்ட ஜீவன் என்ற வியக்தித் துவத்தை அழிக்க சற்குரு ஒருவரால்தான் முடியும். "அகந்தை அடக்கப்படக் கூடாத ஒரு மதயானை. அதை யடக்கச் சிங்கத்துக்குக் குறைந்த எதனுலும் முடியாது. அந்தச் சிங்கமே குரு. அவருடைய ஒரே பார்வை இந்த மத யானையாகிய அகந்தையை நடுங்கச் செய்து கொன்றுவிடு கிறது. காலக்கிரமத்தில், நீ அழிந்த விடத்திலேயே உன் நிஜ மகிமை யுள்ள தென்பதை யுணர்வாய்" என்று ஸ்ரீ பகவான் கூறியுள்ளார்*.

ஆம், இத் தன்னழிவு ஒரு நஷ்டமல்ல. நீர்க் குமிழி உடைந்து உருவழிவதாலும், நதி கடலில் கலந்து உருவழிவதாலும், உண்மையில் நஷ்டம் ஏற்படுவதில்லை. நீர்க் குமிழி நீர்ப்பரப்பாகிறது; நதி கடலாகிறது. கடலை யடைந்த நதியின் ரூபம் அழிகிறது; அதன் எல்லை அழி கிறது; அதன் ஓட்டம் அழிகிறது; பெருகுவதும் வற்றுவது மாகிய மாற்றங்கள் அழிந்து கடலில் ஒரே மட்டமாய் நிலைத்துவிடுகிறது. அது போலவே, 'நான் இவ் வுடல்' எனும் அகந்தை உருவழிந்து, தனிவியக்தித்துவம் அழிந்து, எழுச்சி அழிந்து, பிறப்பிறப்பாதி உபாதிகள் யாவும் அழிந்து, என்றுமுள்ள ஆன்மப் பொருளாய் நிலைத்து விடுகிறது.

'நானழிந்தால் மிஞ்சு நலமே(து)?'என் பாரறியார்;
வானழிந் தாலுமென்ன? மற்றென்றைத் — தானடைய
ஏன்மிஞ்ச வேண்டும்? 'இருக்கின்றேன்' என்னுமின்ப
ஆன்மா அருணு சலம்.

— ஸ்ரீ அருணுசல வெண்பா - 57

பொருள்: "ஆன்மவிசாரத்தால் மூலமாகிய 'நான்' என்னும் அகந்தையே அழிந்துபோகுமானுல், அந்தோ, பிறகு அதனுல் நமக்கென்ன பயன்?" என்று கேட்போர் அறியாமைமிக்க மூடர்களே யாவர். சுவர்க்கம் முதலிய

* 'ஸ்ரீ மஹர்ஷி வாய்மொழி' பக்கம் 37ஐக் காண்க.

சகல போக லோகங்களும் திருசியப் பொருள்களும் அழிந்து போனாலுந் தானென்ன நஷ்டம்? திருசியமான ஒன்றைப் பெற்று அதனால் தான் சுகமடைவதற்காக ஓர் அகந்தை 'நான்' எதற்காக அழியாமல் மிஞ்சி யிருக்க வேண்டும்? அகந்தை அழிவுக்குப் பின்னும் பரமானந்த வடிவமான ஆன்மா 'இருக்கின்றேன்' என்று சன்மாத்திரமாக விளங்கிக் கொண்டிருக்கிற தன்றோ? அது இவ் வருணாசலமே.

மரணத்தி லெல்லாம் பெரிய மரணமே — மீளாத, பிறவாத மரணமே — முக்தி. சாதாரணமாக நாம் காணும் மக்களின் மரணம் என்பது தேகத்தின் மரணமே. அந்த மரணத்தால் மனமோ ஆத்மாவோ அழியாது. மனம் பிழைத்திருப்பதால்தான், ஜீவர்கள் மீண்டும் தேக மெடுத் துப் பிறக்கின்றனர். இம் மரணத்தால் 'நான் ஒரு ஜீவன், நான் ஒரு தேகம்' என்னும் பாவனைகள் நீங்கா. முக்தியை விரும்புவோர் இந்த பாவனைகளாகிய தானே அழிந்து போகத் தயாராக வேண்டும்; தன் ஜீவ அழிவுக்குத் தானே முற்பட வேண்டும்! கேவலம் வந்து வந்து போகின்ற தேகத்தின் பிரிவாகிய மரணத்திற்கே பயந்து, மிரண்டு, அழுது, ஏங்கும் மக்கள் இனி என்றுமே மீளாததும் தனக்கென்று ஒன்றுமே இல்லாததுமான ஓர் பெரு மரணத்துக்குச் சம்மதிப்பார்களா? அப்படி யார் சம்மதிக் கிறார்களோ, அவர்களே தீரர் எனப்படுவர்; அவர்களே உயர்ந்த பக்குவிகள்! பலகோடி மக்களுள் ஒருவர் கூட இந் நிலையை விரும்புவது அபூர்வம்! அவ்வாறிருக்க, அந் நிலைக்காக ஏற்பட்ட பெருங் காதலை (பராபக்தியை)த் தடுக்க வொண்ணமல், அந் நிலையை அருள வரும் (தன்னை அழிக்க வருகின்ற) இறைவனைத் துரிதப்படுத்தி அறை கூவி அழைக்கும் மஹா தீரம் யாருக்கு உண்டாக முடியும்? அம்மம்ம! அவ் வரிய, ஒப்புயர்வற்ற தீரம், தீரர் யாரினும் தீரம் படைத்த ஸ்ரீ ரமண பகாவனுக்கே உண்டாயிற்று போலும்! அதனால்தான் நம் பெருமான், தன்னை அதி சீக்கிரம், இப்பொழுதே அழித்து, தனக்கென்று தனியாக ஒன்றுமில்லாமல் செய்து, தன்னைக் கலந்து நிறையும்படி அருணாசலனைக் கூவியழைக்கிறார். அது மட்டுமல்ல. "ஹே, அருணாசலா, நீ ஆண்மையுள்ள புருஷோத்தமனாயின்,

என்னை இப்பொழுதே அழித்து இரண்டற என்னைக் கலந்தருள்'' என்று எதிர் நின்றும் அறைகூவுகிறார்! என்னே பக்குவம்! என்னே வீரத்திலும் வீரம்!

**10. ஏனிந்த வுறக்க மெனைப்பிற ரிழுக்க**
**விதுவுனக் கழகோ வருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! எனைப் பிறர் இழுக்க, ஏன் இந்த உறக்கம்? இது உனக்கு அழகோ?

**பொ-ரை:** அருணாசலா! உனக்கே உரியவளாகிய என்னை (ஜீவனை) ஐம்புல ஆசைகளாகிய அன்னியர்கள் அபகரித்துத் தம் வழிக்கு இழுத்துச் செல்லவும், (நீ அதைக் கண்டும் காணாதவன் போல்) ஏன் இவ்வாறு போலி யுறக்கம் கொள்கின்றாய்? இது உன் திருவருளுக்கு அழகாகுமா?

**வி-ரை:** தன் பொருளைப் பிறர் கொண்டு செல்ல ஒருவன் சும்மா விருப்பானாயின், அவன் ஆண்மை யற்றவனா யிருக்க வேண்டும்; அல்லது ஆண்மையுடையோனாயின், அச் சமயம் உறக்கத்தில் அவன் இருக்க வேண்டும். இங்கு பொருளுக்கு உடையவன் அருணாசலன்; அவனுக்கு உரிய பொருள் ஸ்ரீ ரமண பகவான். தன்னை அருணாசலனுக்கே சம்பூர்ணமாய் அர்ப்பணித்துவிட்ட ஸ்ரீ ரமண பகவான், அவனது பொருளேயான தன்னைப் பிறர் கொள்ளாது காப்பாற்ற வேண்டியதும் அவ் வருணாசலனின் பொறுப்பே என்று பிரார்த்திக்கிறார். அருணாசலனே ஆண்மைமிக்க புருஷோத்தமன் என்பதை முன் பாடலாற் குறித்தார். அதனால் அவனை மீறி எவரும் அவன் பொருளைக் கவர முடியாது. வல்லார்க்கும் வல்லானான அவன் உறங்கும்போது பொருளைக் கொள்வதான மற்றொரு வழியிலும் தன்னை யாரும் கவர்ந்து செல்லக் கூடாதென்று இப் பாடலில் ஸ்ரீ ரமண பிரான் "அருணாசலனே, உன் பொருளாகிய என்னைப் பிறர் இழுத்துச் செல்லும்படி உறங்குவையாகில், (உறக்கம், விழிப்பு, கனா என்ற மூன்றவஸ்தையுமற்று) என்றும் விழித்திருப்பவனென்று கூறப்படும் உனக்கு அது அழகாகுமா?'' என்று பிரார்த்திக்கின்றார்.

இங்கு ஸ்ரீ பகவான் "இந்த வுறக்கம்" என்று குறிப்பாகக் கூறுவது ஏன் என்றால், இது உண்மையான, இயல்பான உறக்கம் அல்ல. 'இந்த வுறக்கம்' என்றால் 'இப்படிப்பட்ட போலி யுறக்கம்' என்பது அர்த்தம். அருணாசலன் உண்மையில் உறக்கமே யறியா ஆன்ம சொரூப மாகையால், இந்த வுறக்கம் வெறும் பொய்யான நடிப்பே யன்றி நிஜமான உறக்கம் ஆகாது.

கவனமே ஜீவன். இக் கவனத்தைப் புல விஷய வாசனைகள் வெளித்தள்ளுவது இங்கு 'என்னைப் பிறர் இழுத்தல்' என்று ஸ்ரீ பகவானால் குறிப்பிடப்பட்டது. இவ்வாறு நம் கவன சக்தி வாசனைகளோடு சேர்ந்து வெளி விஷயங்களை நாடும் போது, அது 'சித்தம்' ஆகிறது. தன்னை நாடும் தற்கவன மாத்திர நிலையில், அது 'சித்' மாத்திரமாய் அமைகிறது. தன்னிலையினின்றும் — சின்மாத்திர நிலையினின்றும் — நம் கவன சக்தி நழுவும் நிலையே 'தன் மறதி' என்னும் மாயாவுறக்க மாகும். இந்த வுறக்கம் ஒரு வெறும் பொய்யான கற்பனையே தவிர உண்மையானதல்ல. ஆனால் இந்தப் போலி யுறக்கம் தோற்றமாத்திரமாக நேரும்போதுதான் நம் கவனம் விஷய வாசனைகளால் வெளியே இழுக்கப்பட முடியும். ஆகவே ஸ்ரீ பகவான் "அருணாசலனே, சிற்சொரூபனாகிய நீ உண்மையில் உறக்கமற்றவனாய் என்றும் விழித்திருக்க, ஏன் இவ்வாறு போலி யுறக்கம் கொள்கிறாய்? இந்த உனது போலி யுறக்கம் காரணமாக, நான் விஷயவாசனைகள் வசப்பட்டு சலனப்பட்டுள்ளேன். நான் இவ்வாறு சலனப் படும்படி விடுத்தால், இது உன் அசலத் தன்மைக்கு அழகோ?" என்று வினவுகிறார்.

நம் கவன சக்தியை உலக விஷயாதிகளில் இழுத் துச் செல்லும் ஆசைகளின் தொகுதியே — வாசனைகளின் கூட்டமே — 'சித்தம்' எனப்படும் அகந்தை யாகும். இந்த அகந்தை 'நான் ஒருவன்; இவை என்னுடையவை; எனக்கு இன்னது வேண்டும்' என்றவாறு பல வடிவங்களில் தோன்றுமாகையால், அதை 'பிறர்' என்று ஸ்ரீ பகவான் குறிப்பிட்டார். நாமெல்லாம் 'நான்' என்று எந்த அகந்தையைக் குறிப்பிடுகிறோமோ, அதையே ஸ்ரீ பகவான் 'பிறர்' என்று குறிப்பிடுகின்றார். இதிலிருந்து என்ன

தெரிகிறதென்றால், உண்மையில் அவர் இந்த 'நான்' என்ற பாவமகன்று வேறு எதுவாகவோ இருப்பதால்தான் இப் பாடலில் அகந்தையை 'பிறர்' என்று குறிப்பிட முடிந்தது என்று விளங்குகின்றது. அதாவது, அப் பெருமான் அகந்தை விடுபட்ட ஆத்மசொரூபி யாகிவிட்டபடியால்தான் அகந்தையையும், அகந்தையின் மாயா காரியங்களான உலக ஆசைகளையும் 'பிறர்' என்றார்.

**11. ஐம்புலக் கள்வ ரகத்தினிற் புகும்போ**
**தகத்திநீ யிலையோ வருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! ஐம்புலக் கள்வர் அகத்தினில் புகும் போது, நீ அகத்தில் இலையோ?

**பொ-ரை:** அருணாசலா! மேற்கூறிய அவ் வைம்புல ஆசைகளாகிய கள்வர்கள் உள்ளத்திற் புகும் போது, நீ அங்கு இல்லாமல் போயினையோ? (இருந்தா யல்லவா என்றவாறு.)

**வி-ரை:** அகத்திற் குடையோனாகிய இல்லத் தலைவன் வீட்டிலிருக்கும்போது, அன்னியர்களாகிய கள்வர்கள் வீட்டினுள்ளே புகுவது இயலாததன்றோ? அது போன்றே, சத்திய அறிவுமயமான அருணாசல பரமாத்மா இதயத்தில் எப்பொழுதும் எழுந்தருளியிருக்கையில், கண், காது, நாக்கு, மூக்கு, சருமம் (தோல்) என்னும் வாயில்களின் வழியே முறையே காட்சி யறிவு, சப்த அறிவு, ருசி அறிவு, வாசனை அறிவு, ஸ்பரிச அறிவு என்னும் ஐவகை போலி அறிவுகளாகிய கள்வர்கள் உள்ளே புக இயலாதவர்களாம். மேற்கூறிய ஐவகை யறிவை யன்றி உலகம் என்பது வேறொன்று மில்லை. "உலகு ஐம்புலன்கள் உரு, வேறன்று" (உள்ளது நாற்பது – 6). உலக வாழ்க்கை எனும் பிரமை இவ் வைம்புல வடிவாகவே உள்ளே புகுவதால், உள்ளம் அதன் வசப்பட்டு பஹிர்முக மடைகிறது; ஆத்ம சொரூபத்திலிருந்து நழுவி உலகம் என்று ஒன்று இருப்பதாக உணர்கிறது. இவ்விதம் ஐம்புலன்கள் உள்ளத்தைக் கவர்ந்து வெளியே கொண்டு வரும் திருடர்களாவதால், ஸ்ரீ பகவான் அவைகளை 'ஐம்புலக் கள்வர்' என்றனர். மனத் தெளிவு ஏற்படுவதற்கு முன்பு நண்பர்களாக, இன்புறுத்தும் சகாயிகளாகத் தோன்றிய

ஐம்புல உணர்ச்சிகள், தெளிவு ஏற்பட்ட பிறகு துன்பத்தையே தரும் ஹித சத்துருக்கள், கள்வர்கள் (பிறர்) என்று கண்டுகொள்ளப்படும். இக் கள்வர்களாகிய ஐம்புல அறிவுகள் உண்மையற்ற போலிகள். உண்மையான அறிவானது உள்ளே அகத்தில் விளங்கும் ஆத்ம அறிவே. "போலியான இக் கள்ள அறிவுகள் மனதை ஆத்ம சொரூபத்தினின்றும் பறிக்க உள்ளே நுழையும்போது, அதற்கிடந்தராது காப்பவனாகிய (ஆத்மாவாகிய) அருணாசலனே, நீ அகத்தில் இல்லையா என்ன?" என்று வினவுகிறார் ஸ்ரீ பகவான்.

இருப்பு நிலையினின்றும் பிரமாதத்தால் நழுவி வாசனைகளின் வசப்பட்டு 'நான்' எனும் பொய்யுணர்வாக உந்தப்பட்டு எழுச்சியடைவது ஐம்புலக் கள்வர்கள் மனதில் புகுவதற்கு ஹேதுவாகிறது. இதனால் இருப்பறிவு ஐம்புல அறிவாய்த் திரிபடைந்து ஜீவனை (சிதாபாசனை) பந்தத்தில் ஆழ்த்துகிறது. ஆனால் ஐம்புலன்களும் இவ்வாறு கள்ளத்தனமாய்த் தொழிற்படும்போதும், அருணாசலன் அகத்தில் இல்லாமல் போவதில்லை யல்லவா? இவ் வுண்மை தெள்ளத் தெளிவாக உணர்வாகிவிட்டால், ஐம்புலச் சேட்டை தனக்கு இடமின்றி இல்லாது ஒழிகின்றது.

"உரைமாண்ட உள்ளொளி உத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோணோக்கம் ஆடாமோ."

என்னும் மணிவாசகரின் அனுபவப்படி, உத்தமனாகிய அருணாசலன் உள்ளத்தில் புகுந்ததும் ஐம்புலப் பறவைகள் இருக்க இடமின்றி பறந்தோடின. அப்படியிருக்க, அருணாசலன் அகத்தில் இமைப் பொழுதும் நீங்காது வீற்றிருக்கிறான் என்ற உண்மை உணரப்பட்டால், ஐம்புலக் கள்வர் ஒருகாலும் அகத்தினில் புகவே யில்லை என்ற அஜாத ஞானம் அனுபவமாகிறது.

அகத்தின் தலைவனான அருணாசலன் தன் பொருளைக் கள்வர்கள் கொள்ளை யிடும்படி உறங்குபவனல்ல என்பது சென்ற பாடலில் விளக்கப்பட்டது. இப் பாடலில் அப் பெருமானாகிய இல்லத் தலைவன் வீட்டிலில்லாமல் எச்

சமயத்தும் இரான் என்பதும் நிச்சயிக்கப்பட்டது. எனில், பின் ஏன் உலக மக்கள் ஐம்புல வழிச் சென்று ஆத்ம ஞானத்தை இழக்கின்றனர் என்பதை அடுத்த பாடலாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கிறார்.

**12. ஒருவனா முன்னை யொளித்தெவர் வருவா**
**ருன்சூ தேயிது வருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! ஒருவன் ஆம் உன்னை ஒளித்து எவர் வருவார்? இது உன் சூதே.

**பொ-ரை:** அருணாசலா! (தனக்கு அன்னியமாய் எவருமில்லாத) ஏகனாகிய உனக்குத் தெரியாமல் எவர் இங்ஙனம் உள்ளத்தில் புக முடியும்? ஆகையால் (இவ் வைம் புலக் கள்வர்களின் நுழைவாகிய) இது உன் சூழ்ச்சியே யாகும்.

**வி-ரை:** 'ஒருவன்' என்ற சொல்லுக்கு ஒப்பற்ற பரம புருஷன் என்றும், அத்வைத மெய்ப்பொருளாகிய ஏகன் என்றும் இரு விதத்தில் பொருள் கொள்ளலாம். சென்ற பாடல்களிலிருந்து அருணாசலன் ஆண்மையாளன் என் பதும், உறக்கமற்றவன் என்பதும், எப்போதும் அகத்தில் இருக்கிறான் என்பதும் அறியக் கிடைக்கின்றது. அருணா சலன் அப்படிப்பட்ட ஒப்பற்ற புருஷனாகையால், தம் வரு கையைக் காண முடியாதபடி அவன் கண்ணைக் கட்டி ஒளித்து மற்றவரால் அகத்தில் வர இயலாதல்லவா? எனவே அவன் உடன்பாடு கொண்டுதான் ஐம்புலக் கள்வர் உள்ளே வர முடியும். அப்படியாயின், இது பாராமுகமாகிய அவன் சூதே — மாயமே — என்று ஸ்ரீ பகவான் குற்றஞ் சாட்டு கின்றார்.

மேலும் ஆத்ம அறிவை யன்றி மற்ற எவ்வித அறிவும் பொய்யான — இருப்பற்ற — பிரமையே யாதலால், இருப்பது ஆத்ம சொரூபமான அருணாசலன் ஒருவனே யாகும். அதாவது, அருணாசலன் தன்னை யன்றி பிறர் என்றும், வேறு பொருள் என்றும், எங்கும், எப்போதும், எவ்வித அன்னியமுமில்லாமல் இருக்கின்றான். 'என்றால், ஐம்புலக் கள்வர்கள் யாராயிருக்கலாம்?'' என்ற ஐயம் உதிக்கின்றது. இதனை ஸ்ரீ பகவான் விளக்குகின்றார். ''அருணாசலா, ஆத்மாவாகிய நீயே உள்ளவனாகிய ஏகனா

கையால், வந்தவர் மற்றவராக எப்படி யிருக்க முடியும்? நீயே அறிவாகிய சர்வக்ஞன்; ஏனைய ஐம்புல அறிவுக ளெல்லாம் உன்னில் உன் மாயா சக்தியால் கற்பிக்கப் பட்ட போலி அறிவுகளே — சூதே — யாகும். அந்தக் கற்பனையாகிய மாயையும் உன்னிலேயே உனக்கு அனன் னியமாகவே இருப்பதால், இது உன் சூதேதான்!'' என் கின்றனர். சூதில்லாத அறிவு என்பது தன்மையுணர்வு (first person consciousness) ஆன ஆத்ம அறிவு ஒன்றே தான்; ஏனைய ஐம்புல அறிவுகளான உலக அறிவு (second and third person knowledges) ஆத்மாவில் கற்பனையான போலி அறிவுகளே. அதாவது, ஆத்மப் போலியே உலகம்; ஆத்மாவின் நிஜ சொரூபமே (யதார்த்த ஆத்மாவே) அருணாசலம் என்பதாம். ஆத்மாவாகிய அருணாசலனை பாமர மக்கள் உலகமாகக் காண்கின்றனர்; எதனால்? அறிவு தெளியாத சூதினால்! ஆனால் அருணாசலனைத் தம் ஆத்மாவாக அனுபவிக்கின்றனர் ஞானிகள்; எதனால்? அவ் அருணாசலனின் அருளால் சூது விடுபட்டு அறிவு தெளிந்துள் ளதால்! இதனையே ஸ்ரீ பகவான் ''இறைவா, அருணாசலனே, ஏகனாகிய உன்னை ஒளித்து உலக அறிவாகிய ஐம்புல அறிவுகள் எங்ஙனம் உள்ளே வரமுடியும்? முடியாது. அவ்விதம் உலகோர் மயங்குவது உன் சூதாகிய மாயா சக்தியின் காரியமே யன்றோ?'' என்று வியக்கின்றனர். உலகோர் ஆன்ம அறிவொளியைக் கண்டு தெளியாதவரை இச் சூது உண்மை போல் தோன்றி அவர்களை மயக்கிக் கொண்டிருக்கும். அதனால்தான் ஸ்ரீ பகவான் பின்வரும் ஒரு பாடலில் ''சூதுசெய் தென்னைச் சோதியா தினியுன் சோதி யுருக்காட் டருணாசலா'' என்று பிரார்த்திக்கின்றார். அருணாசலன் ஒருமுறை தன் ஜோதி சொரூபத்தைக் காண்பித்துவிட்டான் என்றால், அவனது மாயா சக்தியின் காரியமாகிய இச் சூது இருப்பற்றதாகி மறைந்துவிடும்.

இம் மாயா காரியத்தின் விசேஷம் எப்படிப்பட்டது? அகண்ட இருப்பும், அகண்ட அறிவும், அகண்டானந்த முமாகிய அருணாசல பரமாத்மா மாயை என்ற கண்ணாடி வழியே காணப்படும் போது, அகண்ட இருப்பு ஜீவ எழுச்சியாகி, ஏகனாகிய தன்னையே பலவாகக் கண்டு, அந்தப் பலவற்றில் ஒன்று மட்டுமே தான் என எல்லை

யிட்டு, அதனால் மற்றவை அன்னியமாகி, சத்–அசத் என்னும் இரட்டை யாகின்றது; இவ்வாறே அகண்ட அறிவு எல்லைக்குட்பட்டு உடலறிவாகக் குறுகி, அவ் வுடலளவுக் குள் குறுக்கப்பட்ட அறிவு போக எஞ்சியுள்ள மற்றவை அன்னிய உலக அறிவாகி, சித்–ஜடம் என்னும் இரட்டை யாகின்றது; இது போலவே அகண்டானந்தம் 'இது நான், இவை என்னுடையவை' என்ற எல்லையால் குறுகி, தனக்கு கிட்டியவையே சுகமாகவும் கிட்டாத மற் றவை துக்கமாகவும் இரட்டை வடிவில் மாறுகிறது. இவ் வளவு விசித்திரமான மாயா காரியம் ஏகாத்ம வஸ்துவாகிய அருணாசலனின் சூதே யாகையால், இப்படிப்பட்ட மாயா வியான அருணாசலனை உள்ளபடி யாரே அறிய முடியும் என்று ஸ்ரீ பகவான் அடுத்த பாடலில் வினவுகிறார்.

**13. ஓங்கா ரப்பொரு ளொப்புயர் வில்லோ**
**யுனையா ரறிவா ரருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! ஓங்காரப் பொருள்! ஒப்பு உயர்வு இல்லோய்! உனை யார் அறிவார்?

**பொ-ரை:** அருணாசலா! 'ஓம்' என்னும் பிரணவ ஒலியின் பொருள் வடிவானவனே! தனக்கு ஒப்பாவாரும் மிக்காவாரு மின்றி விளங்குபவனே! உன்னை யார்தான் உள்ளபடி அறிந்துவிட முடியும்? (முடியாது என்றவாறு.

**வி-ரை:** 'ஓம்' என்னும் பிரணவம் அ–உ–ம் என்னும் மூன்று தொனிகளைக் கொண்டது. பிரணவம் பற்றி விரிவாகக் கூறும் நூல்களில் இம் மூன்று தொனிகளின் பொருள்களை விளக்கும்போது, விரிதல்–ஒடுங்கல்–ஓய்தல் (மோனம்), சிருஷ்டி–ஸ்திதி–ஸம்ஹாரம், பிரம்ம–விஷ்ணு–மகேசன், ஜாக்ர–ஸ்வப்ன–சுழுப்தி, ஆதி–மத்தி–அந்தம் என்றவாறெல்லாம் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு ஓங்காரமே சகலமும் அடங்கிய வித்தாகச் சொல்லப்படுகிறது.

சகல உலகத்திற்கும், சகல அறிவிற்கும் மூலகாரண மாகிய 'ஓம்' என்னும் பிரணவ சொரூபத்தின் உட் பொருளாய் விளங்குவது பிரம்மமே யாகும். 'அஹம்' என்னும் ஸ்புரிப்பு அப் பிரம்மத்தின் பிரக்ஞாரூபம் —

ஒளி யுரு; 'ஓம்' என்னும் பிரணவமோ அப் பிரம்மத்தின் சப்த ரூபம் — ஒலி வடிவம். ஆகையால் இவ் விரண்டும் அதன் இரு கலைகள் அல்லது இரு முகங்கள். சாஸ்திரங் களில் 'ஓம்' என்னும் ஒலி 'நாதம்' எனப்பட்டதாகும்; 'நான்' என்னும் ஒளி 'பிந்து' எனப்பட்டதாகும். ஒவ்வோர் அசைவுக்கும் ஒளியும் உண்டு, ஒலியும் உண்டு; ஆயினும் மனம் நுட்பமாகும் அளவிற்கே அவை உணரப்படும். ஒலி ஒளிகளின் மூலம் ஒன்றே யெனினும், ஒளிக்குப் பிறகே ஒலி உணரப்படுகிறது. அதனால்தான் ஸ்ரீ பகவான் "நான் என்பது அண்ணன்; ஓம் என்பதோ தம்பி" என்று கூறுவதுண்டு. ஒலியும் ஒளியும் ஒடுங்கிய நிலையே — சொல் லுணர்வடங்கிய நிலையே — பூரண மோனம் அல்லது மெய்ஞ் ஞானம் எனப்பட்டது. ஆகையால் ஞான வரம்பாகிய மோனமே பிரம்மத்தின் உண்மையான, இயல்பான சொரூபம். அதாவது, ஓங்காரப் பொருளாகவும், 'நான்' என்னும் சொற்பொருளாகவும் விளங்குவது மோனமே யாகும். எப்போதும் தானாகவே உள்ளத்தில் ஒளிரும் அம் மோனத்தை எண்ண, சொல்ல, எழுத எவராலும் முடியாது. இதை ஸ்ரீ பகவான்

"ஒரெழுத்தென் றுந்தானா யுள்ளத் தொளிர்வதாம்
ஆரெழுத வல்லா ரதை?"

என்று கூறுகிறார்*. அதனால்தான் சுப்ரமண்யர் 'ஓம்' என்னும் பிரணவத்தின் பொருளைத் தன் தந்தைக் குபதேசிக்கும்போது, அதை மோனத்தாலேயே விளக்கினார். எனவே, ஓங்காரத்தின் உட்பொருளாய் விளங்கும் மோன சொரூபமாகிய அருணாசலனை உள்ளபடி அறிவது என்பது, மனம் 'ஓம்' எனும் பிரணவத்தோடும் 'நான்' எனும் ஸ்புரிப்போடும் ஒடுங்கி முற்றும் அற்றுப்போகின்ற பேரழி வாகிய ஞானப் பிரளயத்தால் ஏற்படுகின்ற மோன நிலையில் அருணாசலன் அயலேதுமின்றி இரண்டற்ற பொருளாய், ஏகமாய் ஓங்கி விளங்குவதாகும். அந் நிலையிலும் அருணா சலனை அறிவது அருணாசலனே யாகும்; அதனை அறிய வேறு பொருள் இன்மையால்.

---

* 'ஸ்ரீ ரமணோபதேச நூன்மாலை — விளக்கவுரை' பக்கங்கள் 408-411ஐக் காண்க.

"தகுந்த விசாரமெனுஞ் சாதனைசெய் துள்ளே
புகுந்தறிந்தே னென்றுரைத்தாற் பொய்யாம்!—அகந்தை
யறிவதொன்று மில்லை; யழிவதது! தன்னை
யறிவ தருணா சலம்."

— ஸ்ரீ அருணாசல வெண்பா - 39

ஒன்றை அறிவதென்றால், அறியப்படும் பொருளைவிட அறிபவன் மேலானவனாகவே இருக்க வேண்டும்; அல்லது சமமானவனாகவாவது இருக்க வேண்டும். இல்லையேல், அதனை 'அறிவது' என்பது அசாத்தியம். சகல சிருஷ்டியும், ஸ்திதியும், லயமும் பிரணவமாகிய ஓங்காரத்தில் அடக்கமாவதால், அந்த சிருஷ்டிகளுக்குள் எதுவும் — தேவர், மனிதர் முதலியோர் எவரும் — ஓங்காரத்தை ஒப்பும் சமானர் ஆகார். சமானமே இல்லை எனில், மிக்காராகிய ஓங்காரத்தினும் உயர்ந்தவர் யாருமிலர் என்பது நிச்சயம். ஆகவே ஓங்காரத்தை ஒப்பாரும் மிக்காரும் எங்கும் எவருமில்லாத போது, அந்த ஓங்காரத்திற்கும் பொருளாய் — உள் விளக்கமாய் — விளங்கும் அருணாசல பரமாத்மனை யார் அறிவார்? யாருமில்லை. அதாவது, இறைவனை அவ் விறைவனே அறிவனன்றி இன்னொருவர் அறிதல் அசம்பாவிதம் என்பது விளங்கும்படியும், அவ்விதம் ஆத்ம சாஷாத்காரம் அடைந்த மகான்கள் அந் நிலையில் தம் தனியிருப்பை யிழந்து அவ் விறைவனே யாகிவிடுவதால் — அறியவும், அறியப்படவும் அங்கு இருமை யில்லாததால் — அப்போதும் 'இறைவனை அறிந்தேன்' என்று கூற யாருமிலர் என்பது விளங்கும்படியும் "உனை யார் அறிவார் அருணாசலா?" என்றனர் ஸ்ரீ பகவான்.

**14. ஔவைபோ லெனக்குன் னருளைத் தந்தெனை
யாளுவ துன்கட னருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா ! ஔவை போல் எனக்கு உன் அருளைத் தந்து எனை ஆளுவது உன் கடன்.

**பொ-ரை:** அருணாசலா! ஒரு தாய் இயல்பாகவே எக்காரணமின்றியும் தன் பிள்ளைக்கு இரங்குவது போல (தாயினும் பன் மடங்கு தயாளுவான) நீயும் எனக்கு உன் திருவருளைப் புரிந்து என்னை ஆட்கொள்ள வேண்டியது உன் கடமையே யாகும்.

வி-ரை: இங்கு இறைவனுக்கு ஒரு கடமை உண்டு என்கிறார் ஸ்ரீ பகவான்! அது யாது? ஸ்ரீ ரமண பிரானை அருள் கூர்ந்து தன் அடியவனாக ஆட்கொண்டருள்வது அருணாசலனின் கடமையாகிறது. இதற்கு உதாரணமாக ஒரு பச்சிளங் குழந்தையினிடம் அதன் தாய்க்குத் தோன்றும் இரக்கத்தைக் குறிப்பிடுகின்றார். தன் சின்னஞ் சிறு குழவியின் பசியைப் பாலூட்டித் தணிப்பது தாயின் கடமையே யாகும். அதற்காக அக் குழந்தையிடம் அவள் எப்போதும் ஏதும் எதிர்பார்ப்பதில்லை. உலகத் தாயாரின் வாத்ஸல்யத்தில் (மகவன்பில்) பலன் விழையும் கரவு சூழ்வது உண்மை யாயினும், அந்தப் பிரியமானது குழந்தை பால் மணம் மறக்கும் வரையாவது சிருஷ்டியில் இயல்பாகவே கரவற்றதாக இறைவனால் ஏற்படுத்தப்பட்டுள்ள தன்றோ? ஆகையால் இதனை உவமையாகக் கூறப்பட்டதே யன்றி, இறைவனின் அருளுக்கு உலகத் தாயாரின் குழந்தை யன்பு சமம் என்பதாலல்ல. அது சமமாகாது. எனவே சிசுவி னிடம் தாய்க்கு இயல்பாய்த் தோன்றும் இரக்கத்தைக் காட்டி ஸ்ரீ பகவான் "அருணாசலா, ஒரு தாயின் அருள் அவளது கடமையே யாவது போல் என்னை உனக்கு அடிமையாக ஆட்கொண்டு உன் அருளை எனக்களிப்பதும் உன் கடமையே யாகும்" என்றனர்.

ஒரு குழந்தை தகுதியுள்ளதாயினும் சரி, தகுதி யற்றதாயினும் சரி, அதனைப் பெற்ற தாய்க்கு அதன்மீது அன்பு பொழிந்து அதனை வளர்த்துக் காப்பாற்றுவது கடமையாகிறது. அக்குழந்தை முடமோ மூடமோயாயினும், அதனை அன்புடன் பேணுவது அதன் தாய்க்குரிய கடமை யாகும். உண்மையில், புத்திசாலியான ஆரோக்கியமான குழந்தையைவிட, உடலிலோ புத்தியிலோ ஊனமுள்ள குழந்தையிடம்தான் தாயின் கடமை அதிகமாகிறது. அது போலவே, பக்தன் எவ்வளவுதான் தகுதியற்றவனும் பக்குவ மற்றவனுமாயினும், அவன்மீது அருள் பொழிந்து அவனை ஆட்கொள்வது அருணாசலனின் கடமையாகும்.

ஈன்ற தாய்க்குத் தன் குழந்தையிடம் அன்பு காட்டுவது கடமை யாகும். ஆனால் அருணாசலனின் அருளோ அவனுடைய இயல்பு. ஆகையால் அவனருள் உலகத் தாய்

மார்களின் அன்பினும் பல கோடி மடங்கு உயர்ந்தது. அப்படி தன் இயல்புக் கிணங்க அருளாவிடினும், அருணாசலன் தன் அருளைக் கடமையாகவாவது அன்னைபோல் ஆற்ற வேண்டும் என்கிறார் ஸ்ரீ பகவான். அருணாசலன் கடமை கடந்து உள்ளவனாக இருக்க, அவனுக்கு ஒரு கடமையை ஸ்ரீ பகவான் ஏன் விதிக்கின்றார்?

"கடமை கடந்த கடவுள் உனக்கோர்
கடமை விதிக்கக் கடவேன் — மடமை
மகனெனைநீ பெற்று வளர்த்ததனால் இந்தச்
செகமிகழா வாறருளே செய்."

— ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் - 507

"அகம் புகுந்தீர்த்து" என்றபடியும் "உனை ஏன் நினைப்பித்தாய்?" என்றபடியும் அருணாசலன் தனது இதயத்துள் புகுந்து தன்னைக் கவர்ந்து இழுத்து அவனையே தான் நினைக்குமாறு செய்துள்ளதால், பெற்ற குழந்தையைப் பேணி வளர்ப்பது ஒரு தாயின் கடமையாவது போல் அவன் தன்னிடம் தொடங்கிய அருட்செயலைப் பூர்த்தி செய்து தன்னை முழுதும் அவனுக்கு ஊணாக்கிக்கொள்ள வேண்டும். 'ஆளுவது' என்றால், பக்தன் எழுச்சி சுதந்திர மற்று — தனக்கொரு தனியிருப்பற்று — அருணாசலனின் அருளாட்சியில் முற்றும் இருத்தப்படுதல் என்பது பொருள். இதுவே அருள். அருள் என்பது ஜீவனின் துக்கத்தை நிவர்த்திக்கவும் அவனுக்கு சுக பிராப்தி யளிக்கவும் வல்ல சக்தி யாகையால், கோரிய காரியம் கைகூட்டுவது சரியான, பூரண அருளாகாது. துக்க நிவிருத்தியும் சுக பிராப்தியும் அகந்தை அழிந்த நிலையில்தான் நிரந்தரமாகவும் முழுமை யாகவும் கிட்டுமாகையால், தனி வியக்தித்துவம் அறலே சரியான, பூரணமான அருளாகும். அப்படிப்பட்ட அருளைத் தான் ஸ்ரீ பகவான் இங்கு அருணாசலனிடம் வேண்டுகிறார்.

பக்தன் அன்னிய உணர்வோடு தனி வியக்தியாக இருக்கும்வரை அருணாசலனை அவனால் அறிய முடியாது என்று சென்ற பாடலில் ஸ்ரீ பகவான் தெளிவுபடுத்தி யுள்ளார். ஆனால் அருணாசலன் ஸ்ரீ பகவான் உள்ளத்தில் புகுந்து தன்னை நினைக்குமாறு செய்துள்ளான். ஆகையால்,

"என்னை யழித் திப்போ தென்னைக் கலவாவிடில்" என்றபடி அருணாசலன் ஸ்ரீ பகவானது தனி வியக்தித்துவத்தை அழித்துத் தனது சொரூபத்தில் இரண்டறக் கரைத்து விடுவதால் தன் சொரூப உண்மையை ஸ்ரீ பகவானுக்கு உணர்த்தி அவன் தொடங்கிய அருட்செயலை அவனே பூர்த்தி செய்து வைக்க வேண்டியது அவனது கடமை யாகும். இவ்வாறு தன் தனியிருப்பு முற்றிலும் அழிந்து தான் அருணாசலனுடன் ஐக்கியமடைவதாகிய அத்வைத நிலைக்காகவே ஸ்ரீ பகவான் "எனக்கு உன் அருளைத் தந்து என்னை ஆளுவது உன் கடன் அருணாசலா" என்று பிரார்த்திக்கின்றார்.

பக்தன் தனது தனியிருப்பை அருணாசலப் பேரொளியில் முற்றிலும் இழந்து அவனுடன் இரண்டறக் கலந்தாலன்றி அருணாசலனின் உண்மை சொரூபத்தை அறிவது — காணுவது — என்பது இயலாததாகையால், ஸ்ரீ பகவான் அடுத்த பாடலில் அருணாசலனிடம் அவனது அருட் பார்வையால் தன்னை உண்டருளமாறு வேண்டுகிறார்.

**15. கண்ணுக்குக் கண்ணாய்க் கண்ணின்றிக் காணுனைக்**
**காணுவ தெவர்பா ரருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கண்ணுக்குக் கண்ணாய் கண் இன்றிக் காண் உனை எவர் காணுவது? பார்!

**பொ-ரை:** அருணாசலா! காண்பார்தம் கண்ணுக்கும் (மனத்துக்கும்) கண்ணாக நின்று (ஆன்மாவாய் இருந்து), அந்த ஊனக் கண் போன்று ஓர் கருவி இன்றியே, காணாமற் காண்போனாகிய உன்னை எவர் (எந்தக் கண் கொண்டு எப்படி) காண்பது? ஆகையால் பார்க்கத் தக்கோனாகிய நீயே (நான் உன் அருளால் உன்னைக் காணும்[illegible]) உன் அருட்கண் பார்வையை என்மேற் செலுத்து[illegible]

**வி-ரை:** நாமெல்லாம் கண்ணால் காண்கின்றோம். [illegible]னால் கண் ஜடமே யாதலால் கண்ணின் வழியே மனம் [illegible]ற்படாவிடில், கண் விழித்திருந்தாலும் காணுவதில்லை. [illegible]தனால் கண் வழியே காணுவது மனமே எனத் தெரிகிறது.

ஆகையால் மனமே கண்ணாகும். இந்தக் கண்ணிற்கும் (மனத்திற்கும்) கண்ணாகிய மற்றொரு கண் உண்டு! அதுவே இறைவன் — அருணாசலன் — ஆன்மா. இதனை ஸ்ரீ பகவான் "விண்ணாதிய விளக்குங் கண்ணாதிய பொறிக்குங் கண்ணாம் மனக் கண்ணுக்குங் கண்ணாய்... ஒளிரும் அண்ணாமலை என் ஆன்மா" என்று 'ஆன்மவித்தைக் கீர்த்தனத்'தில் குறிப்பிடுகின்றார். விண் முதலிய பஞ்ச பூதங்களாலாகிய சகல உலகங்களையும் விளக்கப்படுத்தும் மனமாகிய கண்ணையும் காண்கின்ற — விளக்குகின்ற — கண்ணாக ஆன்மா விளங்குகின்றது என்பது பொருள். அதே பொருளே இங்கும் கொள்ளப்படுகிறது. மனமே கண்களின் மூலம் காணுகின்றது. அந்த மனத்தின் விருத்தி நிலை, ஒடுக்க நிலைகளையும் விளக்கப்படுத்தும் அறிவொளியாய் ஆன்மா இருந்து விளங்குவதால், அவ் வான்மாவே மனக்கண்ணையும் காணும் மெய்யான கண் — அறிவுக் கண் — ஆகிறது. ஆகவே "கண்ணுக்குக் கண்ணாய்" என்றனர் ஸ்ரீ பகவான்.

மனம் கண்களின் வழியே தொழிற்படும் போது மட்டுமே நமக்குக் காட்சி தோன்றுகின்றது. அந்த மனத்திற்கும் சுயமாகவே காணும் சக்தி யில்லை! அந்த சக்தி — அறிவொளி — ஆன்மாவினிடமிருந்தே மனதிற்கு வருகிறது; அப்போதுதான் மனம் தொழிற்பட முடியும். ஆன்மாவிடமிருந்து பெற்ற அறிவொளியைக் கொண்டே மனம் இவ்வாறு தொழிற்படுவதால், அது 'சிதாபாசம்' எனப்பட்டது. ஆன்மாவிடமிருந்து மனதிற்கு ஒளி வராதபோது, அது வெறும் ஜடமே. அதனால் மனம் சைதனிய ஒளியின்றிக் — கண்ணின்றிக் — காண முடியாததாம். ஆனால் அருணாசலனாகிய ஆன்மாவோ கண்ணின்றிக் காண முடியும். ஏனெனில், அவன் தானே ஒளிமயமான — அறிவுமயமான — சுயம்பிரகாசன்! அவனுக்கு ஒளி வேறெங்கிருந்தும் உதவிக்கு வர வேண்டியதில்லை. அதனால் அவன் ஊனக் கண்ணின் உதவியில்லாமல், மனக்கண்ணின் உதவியுமில்லாமல் சுயமாகவே காண்பவன் என்னும் இத் தத்துவம் விளங்க "கண்ணின்றிக் காண் உனை" என்றனர்.

உண்மையான இருப்பு என்பது அருணாசலனின் இருப்பே யாகும். அந்த இருப்பு அதன் சுய அறிவொளியால் இருந்தொளிர்வது. அதே இருப்பின் அறிவொளியால்

தான் மற்ற எல்லாப் பொருள்களும் இருப்பது போல் தோன்றுகின்றன. ஆகவே, மற்ற பொருள்களின் தோற்ற மாத்திரமான இருப்பு உண்மையில் அருணாசலனின் இருப்பே யாதலாலும், அந்த இருப்பும் தனக்குத் தானே ஒளிர்வதாலும், அருணாசலன் 'சர்வ சாக்ஷி' எனப்பட்டது. அவ்வாறே ஜீவனாகிய நம்முடைய போலி இருப்பு உண்மையில் அருணாசலனின் இருப்பே யாதலால், அவன் 'ஜீவ சாக்ஷி'யும் எனப்பட்டது. எனவே, அருணாசலன் 'இருக்கிறேன்' என்னும் நம் உண்மையான இருப்புணர்வாய் இருந்தொளிர்வதே அவன் நம்மைக் கண்ணின்றிக் காணும் அருட்செயலாகும்.

ஒருமுறை ஸ்ரீ பகவான் **"To see is to know, to know is to become, and to become is to be"** (காணல் என்பது அறிதலாகும்; அறிதல் என்பது ஆதலாகும்; ஆதல் என்பது இருத்தலாகும்) என்று ஆங்கிலத்தில் கூறினர். ஆகவே, உண்மையான காணல் — மெய்க் காட்சி — என்பது இருத்தலே யாகும்.

"தானா யித்தலே தன்னை யறிதலாம்
தானிரண் டற்றதால் உந்தீபற
தன்மய நிட்டையீ துந்தீபற."

— உபதேச வுந்தியார் - 26

ஆன்ம நிஷ்டையாகிய இப் பாரமார்த்திக நிலையில் தன்னையன்றி வேறொன்றுமேஇல்லை என்றபடி ஆன்மசொரூப ணாகிய அருணாசலன் இரண்டற்று ஏகமாய் இருக்கின்று ணயினும், ஜீவ திருஷ்டியான மனோமயக் கற்பனையில் அவ் வருணாசலனே எல்லாமாய் (அனேகமாய்)த் தோன்றுகிறான். இவ்வாறு விவர்த்தமாக (தோற்ற மாத்திரமாக)த் தானே எல்லாமா யிருத்தலே எல்லாவற்றையும் கண்ணின்றிக் காணாமல் காணும் விசித்திர அருட்காட்சி யாகும். அதாவது, எல்லாம் என்பது தானே யாதலால், எல்லாவற்றையும் காணுதல் என்பது தானா யிருத்தலே யாகும். ஆகவே, இவ் விருத்தலே "கண்ணின்றிக் காணல்" என்பதாகும். இதுவே மெய்ஞ்ஞானிகளுக்கு சம்மதமான சர்வஜ்ஞத்துவ மாகும்.

"குற்றநோக் காலேது கோலம் பலகோலும்
முற்றுமாந் தோற்ற முயங்குமோ — அற்றாய
அத்துவிதான் மாவை யபரோக்க மாவுணர்தல்
முற்றுணர்வாம்; அல்ல பிற."

— குருவாசகக் கோவை - 934

பொருள்: (ஜீவர்களின்) தோஷ திருஷ்டியால் (உரு வற்ற) எந்த ஆன்மா பல்வேறு வடிவுற்று இந்தப் பிரபஞ்சத் தோற்றம் முழுவதும் ஆகியிருப்பதாகத் தோன்றுகின்றதோ, அந்த அத்துவித ஆன்மாவைப் பிரத்தியக்ஷமாக அனுபவித்து அறிவதுதான் சரியான முற்றுணர்வாகும்; மற்றவை முற்றுணர்வாகாது.

"தன்னைத் தவிரமற்றோர் சத்தையைக்கா ணாமையினால்
பின்ன மறப்பிறங்கும் பேரறிவே — உன்னதமாம்
முற்றுணர்வா மல்லாது முக்கா லமுணருறும்
மற்றுணர்வோ? அல்ல மதி."

— குருவாசகக் கோவை - 926

பொருள்: தன்னை (ஆன்மாவை)த் தவிர வேறு எந்த ஒரு பொருளுக்கும் இருப்பை (உண்மையை)க் காணாததால், இரண்டற ஏகமாய் விளங்கும் பேரறிவுதான் தலைசிறந்த முற்றறிவு (சர்வஜ்ஞத்துவம்) ஆகுமே யன்றி, முக்காலங் களின் நடப்புக்களை யறியும் அயலறிவு சிறந்ததோர் அறி வாகுமா? ஆகாது என்று தெரிந்துகொள்க.

மேலும் "கண்ணலால் காட்சி யுண்டோ?" என்ற படி கண்ணின்றிக் காணப்படுபொருள் எதையும் காண முடியாததாலும், அக் காணப்படு பொருள்களின் தோற்றத் திற்குக் காரணமாகிய பிரமாதம் அறிவுக் கண்ணாகிய அருணாசலனுக்கு எக்காலத்திலும் இல்லாததாலும், கண் ணின்றிக் காணும் அவனுக்கு முப்புடி பேதக் காட்சி பொருந்தாத ஒன்றாகும். காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்னும் முப்புடி பேதங் கொண்ட காட்சி வெறும் மனோகற்பனையே தவிர மெய்க் காட்சி யாகாது. இம் முப்புடி பேதமற்று ஏகமாய் இருப்பதுதான் மெய்க்

காட்சி யாகும். இதுவே காணாமல் காணல் எனப்பட்டது. காணாது காணல், நினையாது நினைத்தல், சொல்லாது சொல்லல் என்பவை யெல்லாம் இருத்தலே யாகும்.

இனி, காண்பவன் (திருக்கு) காட்சிப்பொருளை (திருசியத்தை)க் காண முடியுமே தவிர, காட்சிப்பொருள் காண்பவனைக் காண முடியாது. அவ்வாறே ஆத்மாவாகிய அருணாசலன் மனத்தை (ஜீவனை)க் காண முடியுமே தவிர, மனம் அல்லது ஜீவன் (திருசியமாவதால்) திருக்காகிய அருணாசலனை (ஆன்மாவை)க் காண முடியாது. அதாவது, ஊனக் கண்ணால் பார்க்கப்படும் எவனும், பார்க்கும் எவனும் ஆன்மாவைக் காண முடியாது. இது பற்றியே "உனைக் காணுவது எவர்?" என்றனர் ஸ்ரீ பகவான்.

கடைசியில் உள்ள 'பார்' என்ற பதம் தனிப் பொருள் கொண்டது. அதாவது, பார்த்தல் என்பது காணு தல்; காணுதலைப் பற்றிய இலக்கணம் மேற்கூறியவாறு ஆன்மாவினுடையதே யன்றிக் கண்ணுக்கோ மனத்துக்கோ உரியதல்ல. உண்மையான 'காணல்' என்பது ஆத்மாவின் சுயவிளக்கமாகிய திருவருளே. அதனால் ஸ்ரீ பகவான் "அருணாசலா, நீ ஒருவனே காண்பவனாதலாலும், காண் பானுக்கு சாட்சிக் கண்ணானவன் நீயே யாதலாலும், உன் அருள் விளக்கமே உன்னை உண்மையிற் காண்பதாகுமன்றி பிறரால் காண்டற்கரியோனாதலாலும், உன் அருளாலேயே உன்னை நான் உன்மயத்தில் கண்டுகொள்ளும்படி அருள் கூர்ந்து என்னைப் பார்ப்பாயாக" என்று பிரார்த்திக் கின்றனர்.

கண்ணாடியில் தெரியும் நமது முகத்திலுள்ள கண்கள் நம்மைப் பார்க்கவேண்டுமாயின், நாமே அந்தப் பிரதிபிம்பக் கண்களைப் பார்க்க வேண்டு மல்லவா? நம் பிரதிபிம்பம் நம்மைப் பார்ப்பது என்பது நாம் அதைப் பார்ப்பதே; தனித்தனி இருவேறு செயல்களல்ல. அந்தப் பிரதிபிம்பம் நம்மைப் பார்க்க வல்லதாவதற்குக் காரணம் நாம் அதைப் பார்ப்பதே யன்றோ? அவ்வாறே நிஜ பரம் பொருளாகிய அருணாசலனின் பிரதிபிம்பமே 'நாம்' என்னும் அசத்திய ஜீவன். எனவே, நாம் அருணாசலனின் உண்மை

சொரூபமாகிய ஆன்மாவைக் காண வேண்டுமாயின், அவன் நம்மீது கருணைகொண்டு நம்மை அருட்பார்வை யிட்டாலொழிய அது நடவாது. அதற்காகவே அருணசல னின் அருட்பார்வையை ஸ்ரீ பகவான் யாசிக்கின்றனர்.

"அடியேன்மேல் நீகொள் அருட்பார்வை யேதான்
அடியேன் அகங்காணும் பார்வை — முடிவான
மூலவருட் பார்வைஎன்மேல் மூண்டருள்வாய் அப்பார்வை
யால்உனையே நான்காண ஆழ்ந்து."

"பார்வையென்ருல் தன்னையே பார்ப்பதுதான் அன்னியந்
பார்வை குருடன்றிப் பார்வையோ — ஆர்வமோ [தேர்
டென்றும் அகமுகமாய் இன்பவருட் பார்வையுடன்
நின்றிடுமா றென்னைப்பார் நீ."

— ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் - 9, 10

அருணசலனின் உண்மை சொரூபத்தைக் காண்ப தற்குத் தடையாயிருப்பது நம்முடைய தனி வியக்தித் துவமே. அருணசலனின் அருட்பார்வையாகிய கதிரொளி யால் இந்த வியக்தித்துவம் விழுங்கப்படும்போதுதான் அவனது உண்மை சொரூபம் உள்ளவாறே விளக்கமாகும். இதையே "தலைவன் காணல் எவன்? ஊணுதல் காண்" என்று ஸ்ரீ பகவான் 'உள்ளது நாற்பது' 21வது பாடலில் விளக்கியுள்ளார். சற்குரு சொரூபமாகிய அருணசலன் நம்மை அருட்பார்வை யிட்டாலொழிய நம் தனி வியக்தித் துவம் அழியாது.

"தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான் சற்குருவா
மன்னுபெருஞ் சீய மதயானை — தன்னடைமேல்
சொப்பனத்தே தோன்றித் துடிப்பகற்றுக் கேவலமா
நிற்பதுபோல் பாரா ரெனின்."

— ஒழிவிலொடுக்கம் - 1.2

பொருள்: சிங்கமானது மதயானையின் கனவில் தோன்றி அதன் பிடறிமேல் ஏறி அமர்ந்ததும் அவ் யானை யின் உயிர்த்துடிப்பெல்லாம் அடங்கி அது செயலற்று சும்மா நிற்பதே போன்று, பெருமைக்குரிய அருட்சிம்மமாகிய சற்குரு இந்த நனவாகிய கனவில் எழுந்தருளி தன் அருட்

பார்வையைச் சீடன்மேல் இட்டு அகந்தையின் சேட்டையை அடக்காவிடில், அவன் என்ன சாத்திரங்களைக் கற்று தன் தனிவியக்தித்துவத்தை இழந்த அகந்தையற்ற வாழ்வைத் தன் சாதனையால் அடைய முடியும்? (முடியாதென்க.)

சற்குருவின் பார்வையால் நம் வியக்தித்துவம் அழியும் அருட்செயல் எங்ஙனம் நடந்தேறுகிறது? சூரியனால் இருளைக் காண முடியாதது போல், ஞானசூரியனான சற்குருவால் அஞ்ஞான இருளைக் காணமுடியாது.

> "ஓரிடமுந் தங்காமல் ஓடோடித் தேடியுமே
> காரிருளை யென்றுந்தான் காணாத — சூரியன்போல்
> வாடாத மாமாயை வல்லிருளைக் காணவே
> கூடாதா னெங்கள் குரு."
>
> — ஸ்ரீ ரமண தேவமாலை - 137

எனவே சற்குரு நம்மைப் பார்க்கும்போது, நம்மை அஞ்ஞான இருள்வடிவான ஜீவனாகக் காணாமல் அறிவொளி மயமான ஆன்மாவாகவே காண்கிறார். ஆகையால் அருட் சக்தி வாய்ந்த ஆன்மப் பேரொளியாகிய அவரது பார்வை யின் முன் இருள் வடிவான அகந்தை எழ முடியாது. அதனால்தான் பின்வரும் ஒரு பாடலில் ஸ்ரீ பகவான் "பார்த் தருள் மாலற" (என் அஞ்ஞான இருள் நீங்கும்படி என்னைப் பார்த்தருள்வாயாக) என்று பிரார்த்திக்கின்றார். இவ்வாறு அவர் நம்மை ஆன்மாவாகவே பார்ப்பதால் நாமும் நம்மை ஆன்மாவாகவே காணச் செய்கிறார். உண்மையில், அவர் நம்மை அருட் கண்ணோக்கால் பார்ப்பதும், நாம் நம்மைத் தெளிந்த அறிவால் பார்ப்பதும் தனித்தனி இரு வேறு செயல்களல்ல.

> "சிவன்சேர்வ தாலே தெளிவதோ? சித்தத்(து)
> அவன்சேர்வ தத்தெளிவி னாலோ? — அவலஞ்செய்
> பேதமறும் ஒன்றைஇரு வேறாகப் பேதுறுவார்க்(கு)
> ஓதமறு மாற்றமில் லோம்."
>
> — குருவாசகக் கோவை - 604

அருணாசலனின் அருட்பார்வையானது நம் உள்ளத் தில் அவன் 'நான் நானே' என்று ஸ்புரிப்பதே யாகும்.

எனவே, அருணாசலன் நம்மைக் காணும் கண்ணே நாம் ஆன்மாவைக் காணும் கண்ணுமாகும். 'அந்தமிலாக் கண்' எனப்படும் அந்தக் கண் 'இருக்கிறேன்' என்ற பிரக்ஞை வடிவில் விளங்கும் நம் இருப்பே யாகும்.

**16. காந்த மிரும்புபோற் கவர்ந்தெனை விடாமற்**
**கலந்தெனோ டிருப்பா யருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! காந்தம் இரும்பு போல் எனைக் கவர்ந்து, விடாமல் கலந்து எனோடு இருப்பாய்.

**பொ-ரை:** அருணாசலா! காந்தம் இரும்பைத் தன் பால் கவர்வது போல, நீ என்னை நின்பால் கவர்ந்திழுத்து, பின் ஒருகாலும் என்னைப் பிரியவிடாதபடி இரண்டறக் கலந்து என்னோடு இருந்தருள்வாய்.

**வி-ரை:** இங்கு காந்தமாவது அருணாசலன்; இரும்பாவது ஸ்ரீ ரமண பகவான். காந்தம் இரும்பைத் தன்பால் வலிந்து இழுத்துக்கொள்ளும் தன்மையது. அது போலவே அருணாசலனான அருட்காந்தன் தன் மனதைக் கவர்ந்து அவனது இருப்பிடமாகிய அருணாசலத்திற்கே இழுத்து வந்து சேர்த்து வைத்துவிட்ட அருள் லீலையை ஸ்ரீ பகவான் குறிப்பிடுகிறார்! "அவ்வாறு உன்னிடமே என்னை அண்டிக் கிடக்கச் செய்த நீ என்னை என்றும் இனி விட்டுவிடாமல் என்னோடு இரண்டறக் கலந்தருள்வாயாக" என்று ஸ்ரீ பகவான் பிரார்த்திக்கின்றனர்.

காந்தத்தின் தன்மை இரும்பை இழுத்துக்கொள்வதே; ஆனால் அவ் விரும்பு துருவேறி நிறைந்திருந்தால் காந்தத்தினால் இழுபடாமல் கிடக்கும். அவ்வாறே இறைவனின் இயல்பு நம்மைத் தம்பால் இழுத்தணைத் தருள்வதே; ஆனால் உலக ஆசையாதிகளான துரு நம்மை மூடியிருக்கும் வரையில் அருணாசலனின் அருட்காந்தக் கவர்ச்சிக்கு நாம் ஆட்பட, அகப்பட முடியாது! துரு நீங்க நீங்க காந்தத்தின் கவர்ச்சியில் இரும்பு சிக்குறும். அவ்வாறே நிராசையுற்று பூரண பக்குவியாயிருந்த ஸ்ரீ ரமண பகவான் அருணாசல அருட்காந்தத்தால் இழுக்கப்பட்டார்.

காந்தமும் இரும்புமாகக் கூறப்பட்ட இவ் வுதாரணம் மற்றொரு விதத்தும் பொருட் பொருத்த முடையதாயிருக்கிறது. அதாவது, "கலந்தெனோ டிருப்பாய்" என்றபடி காந்தம் இரும்போடு கலந்து போவதாகக் கூறப்பட்டிருக்கிறது. சாதாரணமாக ஒரு இரும்புத் துண்டின் மேல் காந்தத்தால் ஒழுங்காக சில முறை தேய்த்தால் அவ் விரும்பும் காந்த மாகிவிடும். பிறகு அது தன்பால் இரும்புத் துணுக்குகளை இழுக்கும் சக்தி யிருப்பதைக் காட்டும்; காந்தத்தின் தன்மையான வடதுருவ நாட்டமும் அதற்கு வந்துவிடும்! அதாவது, அவ் விரும்பு முற்றிலும் காந்தமயமாகவே ஆகிவிடும்; பிறகு அது காந்தமே. இது எவ்வாறு ஆயிற்று? இரும்புத் துண்டின்மேல் காந்தம் தேய்படும் போது, அவ் விரும்பின் அணுக்கள் வட-தென் துருவ ஒழுங்குப்படி ஒருமுகமாகத் திருப்பப்படுகின்றன. தற்கால விஞ்ஞான நூலார் கூற்றின்படியும் 'ஒருமுகப்பட்ட இரும்பு அணுக்களே காந்தம்' என்பது நிரூபணம். அது போலவே ஜீவர்கள் பரமார்த்தத்தில் ஆன்ம சொரூபிகளே ஆயினும், அவர்களது மனமாகிய அணுக்கள் உண்முகமான ஒருமுக நாட்டமற்று பலபடித்தான ஆசைகளாகச் சிதறியுள்ளதால்தான் காந்தசக்தி (அருட்சக்தி)யற்றுக் கிடக்கின்றனர். குரு என்னும் ஓர் பெரிய காந்தத்தால் (இறைவனால்) தேய்க்கப்படும்போது அந்த பலமுகமாய்ப் பிரவிருத்தித்திருந்த ஜீவ அணுக்களே ஒருமுகமாம் அந்தர்முகமாவதால் ஆத்ம காந்தமய மாகின்றன!

"இரும்பணுக்கள் பன்முகமா ஏய்ந்தவற்றைக் காந்தம்
திரும்பவைத்துத் தென்வடலாச் செய்யுந் — திரும்புவதால்
தான்காந்த மாவதுபோல் தன்முகமாக் கும்பிரம்ம
வான்காந்தம் அண்ணா மலை."

— சாதனை சாரம் - 459

ஆகவே ஸ்ரீ பகவான் "காந்தமானது இரும்பைக் கவர்ந்து அதன்மயமாக்கிக் கொள்வது போலவே, நீயும் என்னைக் கவர்ந்து, நான் உன்னைப் பிரிந்து 'நான் ஒரு தனியானவன்' என்ற பேத உணர்வாய் இனி என்றுமே தோன்றமுடியாதவாறு என்னை உன்மயமாக்கி, நீ நானாக என்றும் இருந்தருள்வாயாக" என்று பிரார்த்திக்கவே

கின்றனர். உண்மை இயல்பில் ஜீவர்கள் யாவரும் சிவ சொரூபமே என்ற அத்வைத பேருண்மையை விளக்க ஸ்ரீ பகவான் கையாண்ட காந்தம்-இரும்பு உதாரணம் இவ் விதம் மிகச் சிறந்த உட்பொருளைக் கொண்டதாகிறது.

"உனை யார் அறிவார்?" என்றபடியும், "உனைக் காணுவது எவர்?" என்றபடியும், நாம் நம்மை ஒரு தனி வியக்தியாக உணரும்வரை, அருணாசலனின் உண்மை சொரூபத்தை நம்மால் அறிய முடியாது. எனவே, அச் சொரூபத்தைக் காண வேண்டுமானால், நம் தனி வியக்தித் துவம் அவனது அருட்பார்வைக்கு ஊணாகிவிட வேண்டும். ஆனால் வெளிவிடயங்களை நாடும் விருப்பத்திற்கு—அன்னியப் பொருள்களின் கவர்ச்சிக்கு — நாம் ஆட்பட்டிருக்கும் வரை, நம் தனி வியக்தித்துவத்தை இழக்க நாம் சம்மதிக்க மாட்டோம். ஆகவே அருணாசலனே தன் காரணமற்ற கருணையால் நம்மை அன்னியப் பொருள்களின் கவர்ச்சியி னின்று மீட்டு, தன்னை நாடும் பேரன்பை நமக்களிக்க வேண்டும். அருணாசலன் தன் அருட்சக்தியால் நம்மை ஆன்மாபால் கவர்ந்திழுத்தாலன்றி, நமது அற்ப புத்தி வலிவால் மட்டும் நாம் வெளிவிடயங்களை விட்டு ஆன்மாவை அறிந்தடைய முடியாது. எனவே, ஜீவனாகிய நாம் சுயமான சக்தியோ அறிவொளியோ இல்லாத ஒரு பரதந்திரனை போலி உபாதியானதால், பரிபூரண சுதந்திரமுள்ள — சர்வசக்தி வாய்ந்த — அறிவு சொரூபமாகிய அருணா சலனே தன் அருட்காந்த சக்தியால் நம்மைத் தன்பால் கவர்ந்திழுக்க வேண்டும். இவ்வாறு அருணாசலனின் அருட் காந்தக் கவர்ச்சியினால் நாம் அன்னியத்தை நாடும் விருப்பத்தை விட்டு ஆன்மாவை நாடி யறிய பேரன்பு கொள்ளும்போதுதான், அவன் தன் அருட்பார்வையாகிய பேரொளியால் நம் தனி வியக்தித்துவத்தை விழுங்கிவிடு கிறான். அதனால்தான் இவ் வன்புக் கவர்ச்சியே வேண்டு மென்று கேட்கிறார் ஸ்ரீ பகவான்.

இப் பாடலில் 'கவர்தல்' என்பது ஆன்மாபால் உள்ளத்தில் பக்தியை மூட்டுவதே யாகும்; 'கலந்திருத்தல்' என்பது ஞான நிலையில் உறுதியாக இருத்தி வைப்பதே யாகும்.

"ஈர்க்கும்பூ மிக்கவர்ச்சி யின்றேல் நிலத்திலொன்று
தீர்க்கமாய் நிற்குந் திறத்ததோ? — பார்க்கில்
இழுப்பேதான் பக்தி; யிருப்பேதான் ஞானம்;
இழுப்பிருப்பொன் றின்றேன் றிரா."

— சாதனை சாரம் - 116

அருணாசலனின் தன்மையானது அசைவற்ற இருப்பே. எந்த அசைவும் இல்லாமல், வெறும் இருப்பு மாத்திரமாய் இருந்து, அருணாசலன் நம்மை எப்படி கவர்ந்து இழுக்கின்றான்? அவனது திடமான அத்துவித மோன இருப்பே நம் ஸ்வஸ்வரூபமாகிய இருப்பு மாகை யாலும், நமக்கு நம்மிடத்திலேயே அத்தியந்தப் பிரிய மிருப்பதாலும், அவனது இருப்பே நம்மை இழுக்கும் இயல் பினது. ஆயினும், நமது உண்மை இருப்பின் அறிவு நமது தடித்த தேகாத்மபுத்தியின் அடர்த்தியால் மறைக்கப் பட்டுள்ள வரை, அருணாசலனின் இயல்பேயான அருட் காந்தக் கவர்ச்சி நம்மால் உணரப்படுவதில்லை. அவனது அருட்சக்தி நம்மை அவனது காந்தக் கவர்ச்சிக்கு ஆட்படுத்தும் வகையில் நம் மனத்தில் வேலை செய்யும் அதிசயச் செயலைச் சற்று ஆராய்வோம்.

மனம் எந்தப் பொருளில் சுகத்தைக் காண்கின்றதோ, அந்தப் பொருளின்பால் அது கவர்ந்திழுக்கப்படுகின்றது. எனவே, ஐம்புல விஷயங்களில்தான் சுகம் உள்ளது என்ற தவறான எண்ணத்தினால்தான் — அவிவேகத்தினால்தான் — மனம் அவ் விஷயங்கள்பால் கவர்ந்திழுக்கப்படுகிறது. சுகத்தின் உண்மையான இருப்பிடம் ஆன்மாவே தவிர ஐம்புல விஷயங்கள் அல்ல என்ற சரியான விவேகம் எந்த அளவுக்கு ஏற்படுகிறதோ, அந்த அளவுக்குத்தான் ஆன்மசொரூபமாகிய அருணாசலன்பால் கவர்ச்சி ஏற்படும். எனவே அருணாசலன் நம் உள்ளத்தில் இருப்பு மாத்திரமா யிருந்து தனது அறிவொளியால் — அருளொளியால் — நம் மனத்தில் சரியான விவேகத்தை மூட்டுவதால் நம்மைக் கவர்ந்திழுக்கிறான். அவனது அருள் 'நான் இருக்கிறேன்' என்ற அறிவொளி வடிவில் நம் உள்ளத்தில் எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கிறது. ஆனால் அந்த அறிவொளியின்

தெளிவு பகிர்முக ஆசைகளாகிய மாசுகளால் மழுங்கித் தடைபட்டுள்ளது. எவ்வாறு துரு நீங்காதவரை இரும்பு காந்தத்தால் இழுக்கப்படாதோ, அவ்வாறு உள்ளத்தில் விளங்கிக் கொண்டிருக்கும் அருளொளி உலக ஆசாபாசங்களால் மங்கி மறைபட்டிருக்கும்வரை மனம் ஆன்மாபால் ஈர்க்கப்படாது. ஆகையால் பல பிறவிகள் தோறும் அருணாசலன் தன் அருளொளியால் ஒவ்வொரு ஜீவனின் மனத்திலும் விவேகத்தைக் கிரமமாகத் தூண்டிவருகிறான். விவேகம் பெருகப் பெருக, மனத்தின் மாசுகள் மேலும் மேலும் நழுவி பக்தியும் வைராக்கியமும் தலைப்படுகின்றன. விவேகத்தின் பலத்தால் மன மாசுகள் நீங்க நீங்க, உள்ளத்தில் அருளொளி மேலும் மேலும் தெளிவாகப் பிரகாசிக்கிறது; அருளொளியின் பிரகாசம் இவ்வாறு ஓங்க ஓங்க, விவேகம் மேலும் மேலும் திடப்படுகிறது. விவேகம் இவ்வாறு தெளிவடையத் தெளிவடைய, 'சுகம் என்பது உள்ளத்திலேதான் உள்ளதே தவிர, வெளிப் பொருள்களில் அற்பமும் இல்லை' என்ற திட நிச்சயம் மேலும் மேலும் ஸ்திரப்படுகிறது. இவ்வாறுதான் மனம் அன்னியத்தை நாடாத வைராக்கியமும் தன்னை நாடும் பக்தியும் அடையப் பெறுகிறது. இவ்விதமாக நம் உள்ளத்தில் அருணாசலன் அறிவொளியாக ஒளிர்வதால் தான், அவன் தன்பால் நம்மைக் கவர்ந்து ஈர்க்கிறான். அருணாசலன் இவ்வாறு ஜீவனைத் தன்பால் கவர்ந்தீர்த்து செயல்படும் விதத்தைத்தான் ஸ்ரீ பகவான் 'ஸ்ரீ அருணாசல பதிகம்' 10வது பாடலில் விளக்குகிறார்.

''பார்த்தனன் புதுமை உயிர்வலி காந்த
பருவதம்! ஒருதரம் இதனை
ஓர்த்திடும் உயிரின் சேட்டையை ஒடுக்கி
ஒருதன தபிமுக மாக
ஈர்த்ததைத் தன்போல் அசலமாச் செய்தவ்
வின்னுயிர் பலிகொளும்; இஃதென்!
ஓர்த்துய்மின் உயிர்காள் உளமதில் ஒளிரிவ்
வுயிர்க்கொலி அருணமா கிரியே.''

அதாவது, அருணாசலனை ஒருமுறை நினைத்த ஜீவனின் உள்ளத்தில் ஒரு தெளிவு தூண்டப் பெறுகிறது. இந்தத் தெளிவினால் பகிர்முக பிரவிருத்திகளாகிய

மனச் சேஷ்டைகள் மேற்கூறியவாறு தானகவே மெல்ல மெல்ல ஒடுங்குகின்றன. இவ்வாறு அருணாசலன் மனத்தை ஐம்புல விஷயங்களினின்றும் மீட்டு ஆன்மாபிமுகமாகக் கவர்ந்தீர்த்து, அதனால் அதனைத் தன்போல் அசலமாகச் செய்து, சகலமும் விழுங்கும் ஆன்மப் பேரொளியில் அத் தூய்மையான உயிரை அமிழ்த்தி தனக்கு ஊணாக்கிக் கொள்கிறான். மனத்தை இவ்வாறு ஆன்மாபால் வலிந்து கவர்ந்திழுக்கக்கூடிய விசித்திர அருட்காந்த சக்தி அருணாசலனின் இயல்பே யாகையால், ஸ்ரீ பகவான் அவனை "உயிர் வலி காந்த பருவதம்" என்று வர்ணிக்கிறார்.

மேற்கூறியவாறு அருணாசலனின் அருளொளி நம் உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு கூர்ந்து பிரகாசிக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு நம் மனம் அவன்பால் கவர்ந்திழுக்கப்படுகின்றது. அதனால்தான் அடுத்த பாடலில் ஸ்ரீ பகவான் அந்த அருளொளியின் கூர்தலை வேண்டுகின்றனர்.

**17. கிரியுரு வாகிய கிருபைக் கடலே**
**கிருபைகூர்ந் தருளுவா யருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கிரி உரு ஆகிய கிருபைக் கடலே! கிருபை கூர்ந்து அருளுவாய்.

**பொ-ரை:** அருணாசலா! மலைவடிவாக எழுந்தருளியுள்ள கருணைக் கடலே! கருணை கூர்ந்து எனக்கு அருள் செய்வாய்.

**வி-ரை:** மிருதுவான நீராலானது கடல்; கடினமான கல்லாலானது மலை. இங்கு ஸ்ரீ பகவான் அருணாசலனை விரோதாலங்காரமாக வருணிக்கும் விதம் அற்புதமாயிருக்கிறது. தனிப்பெருங்கருணையான அருட்கடலானது திரண்டு அருணாசல மலையுருவாகி இருக்கிறதாகக் கூறுகின்றனர்! "மலையின் உருவமாய் எழுந்தருளியுள்ள கருணா சமுத்திரமே! அருணாசலா! நீ ஸ்தூலத்தில் கடினமான மலைபோல் தோன்றினாலும், உன் இயல்பில் நீ கருணா சமுத்திர மன்றோ? ஆதலின் அவ் வியல்பின்படியே கருணைகூர்ந்து அருள் செய்வாயாக" என்று ஸ்ரீ பகவான் பிரார்த்திக்கின்றனர்.

கிருபை, கருணை, அனுக்கிரகம், அருள் என்பவையெல்லாம் 'நான் இருக்கிறேன்' என்ற வடிவில் ஒவ்வொரு ஜீவனின் உள்ளத்திலும் விளங்கிக் கொண்டிருக்கும் ஆன்ம விளக்கமே என்று ஸ்ரீ பகவான் கூறுவதுண்டு. இவ் வான்ம விளக்கம் உயர்வு, தாழ்வு என்ற வேற்றுமையின்றி எல்லா ஜீவர்கள் உள்ளத்திலும், இங்கு, அங்கு எனுதபடி எல்லா இடத்தும், இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற பேதமின்றி எல்லாக் காலத்தும், ஜாக்கிரம், சொப்பனம், சுழுப்தி என்ற தடைகளற்று எல்லா நிலைகளிலும் ஒரே படித்தாய் எல்லையற்று நீக்கமற நிறைந்திருப்பதால், இதனைக் "கிருபைக் கடல்" என்று ஸ்ரீ பகவான் வர்ணிக்கின்றனர்.

எங்கும் நிறைந்துள்ள இக் கிருபைக் கடல் இப் பூவுலகில் அருணாசலமென ஒரு கிரியுருவாக எழுந்தருளக் காரணம் என்ன? பிரம்ம விஷ்ணுக்களுங்கூட நிலைகலங்கிய காலத்தில் அவர்கள்மேல் தனிப்பெருங்கருணை கொண்டு அவர்கள்அகந்தையை வேரறுத்து அவர்கட்கு மெய்ஞ்ஞானத்தைப் புகட்டியருளுவதற்காகக் கிருபைக் கடலாகிய சிவ பெருமான் அவர்களிடையில் இவ் வறிவொளி மலைவடிவில் ஞானகுருவாய் எழுந்தருளினுன். எனவே, எல்லாருள்ளத்திலும் ஆன்ம சொரூபமாய் விளங்கும் சிவபெருமான் புறத்திலும் இக் கிரியுருவாக எழுந்தருளியிருப்பது ஜீவர்கள்பால் அவனுக்குள்ள எல்லையற்ற பரமகருணைக்கோர் ஒப்பற்ற அத்தாட்சி யாகும். ஆகவே அருணாசலனைப் பார்த்து "கிரியுருவாகிய கிருபைக் கடலே" என்கிருர் ஸ்ரீ பகவான். அருளே — அன்பே — திரண்டு உருவெடுத்து விளங்கும் இவ் வருணாசலனைக் காணக் காண பரவசம் மேலிட்டு, "இதய மன்றகம் அசலமா நடமிடும் அருணமலை யெனும் எலையறும் அருளொளிக் கடலே" (அஷ்டகம் – 7) என்றும், "அருள்நிறைவான அமுதக் கடலே" (பஞ்சரத்னம் – 1) என்றும், "அருள்நனி சுரந்து அங்கு அருவியாய் பெருகும் அருணமாமலை யெனும் அன்பே" (பதிகம் – 1) என்றும், "அன்புரு அருணாசல" (பதிகம் – 2) என்றும் இம் மலையை வர்ணித்து வர்ணித்து மகிழ்கின்ருர் ஸ்ரீ பகவான்.

ஜீவர்கள் கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாத அருளொளிக் கடலான பரம்பொருள் ஜீவர்கள்பால் இயல்பாய் உள்ள அதன் எல்லையற்ற அன்பின் காரணமாக அவர்கள் கண்ணூரக் காணவும் கருத்தால் கருதவும் தக்க விதத்தில் கிரியுருவாய் — அசல உருவாய் — எழுந்தருளியதில் ஓர் ஆழ்ந்த பொருள் உண்டு. அதனைக் காண்போம்.

"மௌனம் உள் எழும் ஒருமொழி அருள்நிலையே" (உபதேச தனிப்பாக்கள் - 27) என்னும் ஸ்ரீ பகவானின் அருண்மொழியின்படி, அசைவற்ற மௌனமே ஒப்பற்ற அருள்நிலை யாகும். ஏனெனில், உள்ளபொருள் உள்ளலற உள்ளத்தே உள்ளதால், அதன் உண்மை நிலையை விண்டு விளக்க இயலாது. விண்டு விளக்குவது என்பது அவ்வுள்ளபொருளின் இயல்பான அசல மோன நிலையினின்றும் திரிந்து எழுச்சியடைந்து சலன வடிவாவதாகும். இந்தச் சலன நிலை பரம்பொருளின் யதார்த்த அசல நிலையினின்றும் மாறுபட்டதால், இம் மாறுபட்ட நிலையில் இருந்துகொண்டு எவ்வித திரிபும் அடைய முடியாத அப் பரம்பொருளின் உண்மை நிலையை உள்ளபடி விளக்குவது என்பது அசாத்தியம். ஆகவே, உள்ளபொருளின் உண்மையை விளக்குவது அசைவற்ற அத்துவித மோன நிலையில்தான் சாத்தியமாதலால், அம் மோன நிலையையே "உள் எழும் ஒரு மொழி அருள் நிலையே" என்று ஸ்ரீ பகவான் குறிப்பிட்டுள்ளார். எனவே, அருளின் உண்மை சொரூபம் மோனமே யாகையாலும், மோனம் என்பது அசல இருப்பே யாகையாலும், கிருபைக் கடலாகிய சிவபெருமான் அருணகிரி என்னும் இவ் வசல உருவாய் எழுந்தருளியுள்ளான். அதாவது, மோன முழுப்பொருளாகிய சிவபெருமான் தன் உண்மை நிலையை — அருள் நிலையை — அசல மோன இருப்பு நிலையை — உள்ளவாறே விண்டிடாது விளக்கிக் காட்டுவதற்காகவே நம்பால் தனக்குள்ள இயல்பான பரமகருணையினால் இப் பூவுலகில் அருணாசலமாய் விளங்கி நிற்கின்றான். இதையே தான் ஸ்ரீ பகவான் "விண்டு இது விளக்கிடு விறல் உறுவோன் ஆர், விண்டிலை பண்டு நீ விளக்கினை என்றால்? விண்டிடாது உன் நிலை விளக்கிட என்றே விண்தலம் அசலமா விளங்கிட நின்றாய்" என்று 'ஸ்ரீ அருணாசல அஷ்டகத்'தின் இரண்டாவது பாடலில் விளக்குகிறார்.

அருள் எப்போதும் நம் உள்ளத்தில் 'இருக்கிறேன்' என்ற ஆன்ம விளக்கமாய் விளங்கிக் கொண்டிருக்கின்ற தாயினும், அதன் இயல்பான தெளிவு மனத்துக்கண் மாசுகளால் மங்கி மறைபட்டிருக்கின்றது. எனவே அருள் நம் உள்ளத்தில் விசேஷமாக விளங்கினாலன்றி, அதன் உண்மை சொரூபம் நம்மால் உணரப்பட இயலாது. அதனால்தான் ஸ்ரீ பகவான் "கிருபை கூர்ந்து அருளுவாய் அருணாசலா" என்று பிரார்த்திக்கின்றார். 'கிருபை கூர்தல்' என்றால், 'அருள் அதிகரித்தல்', 'அருள் மிகல்' என்பது பொருள். அதாவது, 'இருக்கிறேன்' என்று விளங்கும் அருளொளியின் தெளிவு அதிகப்படுமாறு அருள்புரிய வேண்டும் என்று இப் பாடலில் ஸ்ரீ பகவான் யாசிக்கின்றார். இவ் வருளொளியின் தெளிவு — 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வின் தெளிவு — உள்ளத்தில் அதிகப்பட்டு பிரகாசமாக ஓங்க ஓங்க, மனம் அதன்பால் கவரப்பட்டு அதிலே கரைந்தழிய மேலும் மேலும் பேரன்பு கொள்கிறது. இந்த அருளொளியின் தெளிவு அதிகப்படும் நிலையே — கூர்ந்து பிரகாசிக்கும் நிலையே — 'ஆன்ம ஸ்புரிப்பு' எனப்படுவதாகும்; இந்தத் தெளிவு பூரணமடைவதே 'ஆன்ம ஞானம்' ஆகும். இதைக் குறித்து ஸ்ரீ பகவான் "தன்னைத் தனில் உணர, மின்னும் தனுள் **ஆன்ம ப்ரகாசமே; அருள் விலாசமே**" என்று 'ஆன்ம வித்தைக் கீர்த்தனத்'தின் 3வது சரணத்தில் பாடியுள்ளார். எனவே, உபாதிக் கலப்பற்று இருப்பறிவு மாத்திரமாய் விளங்கும் தன்னுணர்வின் தெளிவே திருவருளின் சரியான அடையாள மாகும்.

"அறப்பாலாம் பஃறிருப்பேற் றால்மட்டு மீசன்
சிறப்பாந் திருவருள்தே றாதே — மறப்பால்
அணவு மனக்கவலை யற்றவுப சாந்த
உணர்வின் தெளிவா லொழிந்து."

— குருவாசகக் கோவை - 753

பொருள்: (ஆன்ம சொரூபத்தை மறந்து போகும்) பிரமாதத்தால் உண்டாகின்ற மனக் கவலைகள் யாவும் அழிந்த உபசாந்த ஞானத் தெளிவு ஒன்றையே, இறைவனது பெருந் திருவருளை யடைந்ததற்கு அடையாளமாகக்

கொள்க. அது ஒன்றைத் தவிர, நல் வழியில் வந்து சேர்ந்து பெருகும் பலவித ஐசுவரியங்களை மட்டும் அடைந்திருப்பதைக் கொண்டு நீ ஈசன் திருவருளை யடைந்து விட்டதாகக் கருதிக்கொள்ளாதே.

அருள் என்பது அன்பே அல்லது பிரியமே யாகும். அது உண்மையில் சச்சிதானந்தமாய் — அஸ்தி-பாதி-பிரியமாய் — உள்ள ஆன்ம சொருபத்தின் அனன்னிய இயல்பாகுமே தவிர, ஜீவ திருஷ்டியில் தோன்றுவது போல் ஓர் அன்னிய சக்தி ஆகாது. அருள் இவ்வாறு 'இருக்கிறேன்' என்னும் அனன்னியமான தன்மை யிருப்புணர்வாய் விளங்கும்போது, அது பூரணமானது. ஆனால் உண்மை இயல்பில் அருள் நம் சொந்த அனன்னிய ஸ்வாத்ம பிரியமே என்றாலும், நாம் பிரமாதத்தால் நம் உண்மை நிலையை விட்டு ஒரு தனிவியக்தியாய் எழும்போது, அருள் ஓர் அன்னிய சக்தி போல் நமக்குத் தோன்றும். அருள் இவ்வாறு அன்னியமாக விளங்கும்போது, அது பரிச்சின்னமே யாகின்றது. அருள் அனன்னியமாக — தன்மயமாக — ஸ்புரிக்கும் போதுதான் 'கூர்தல்' ஏற்படும். அருணாசலன் இவ்வாறு கிருபைகூர்ந்து நம் உள்ளத்தில் தன் உண்மை இயல்பாகிய அருளை நம் ஸ்வஸ்வரூபமாக ஸ்புரித்துக் காட்டினாலன்றி, நாம் அவன்பால் பூரண அன்போடு கவரப்பட்டு அவனோடு கலந்திருக்க மாட்டோம். அதனால்தான் ஸ்ரீ பகவான் தன் உள்ளத்தில் அருளொளிகூர்ந்த பிரஜ்ஞை வடிவில் ஸ்புரித்தருளுமாறு அருணாசலனிடம் பிரார்த்திக்கின்றனர்.

**18. கீழ்மே லெங்குங் கிளரொளி மணியென்**
**கீழ்மையைப் பாழ்செய் யருணாசலா.**

**அ-ம்:** கீழ் மேல் எங்கும் கிளர் ஒளிமணி! அருணாசலா! என் கீழ்மையைப் பாழ் செய்.

**பொ-ரை:** கீழான மன நிலையின் காலத்திலும் மேலான பக்குவ மன நிலையின் காலத்திலும் எல்லாக் கால தேசங்களிலும் தன் ஞானப் பிரபாவத்தால் பிரகாசிக்கின்ற

(சுத்தாசுத்தங்களால் பாதிக்கப்படாமல் பிரகாசிக்கின்ற) சுயம்பிரகாச சிவமணியே! அருணாசலா! என் கீழ்மையான சுபாவத்தை நீ அழித்தருள்வாயாக.

வி-ரை: ''கீழ்மேல் எங்கும்'' என்ற சொற்றொடருக்கு நேரிடையான, வெளிப்படையான பொருளாவது 'கீழ் மேல் முதலிய பத்து திசைகளிலும்' என்பதாகும்; ஆனால் உள்ளடங்கியுள்ள பொருள் யாதெனின், 'கீழோர் மேலோராகிய எல்லா ஜீவராசிகளின் இதயத்திலும்' என்பதாகும். இவ்விடத்து 'கீழ் மேல்' என்பன மனத்தின் கீழ்மை நிலையையும் மேன்மை நிலையையும் குறித்தலால் ஆகுபெயராகக் கொள்ளப்படுகின்றன. ''எங்கும் கிளர் ஒளி மணி'' என்பது 'எல்லாருள்ளத்திலும் ''நான் இருக்கிறேன்'' என்னும் போத வடிவில் ஆன்ம சொரூபமாய் விளங்கும் அறிவொளி மணியே — ஞானசூரியனே' என்று பொருள்படும்.

பஞ்ச பூதங்களுள் ஆகாசம் நுட்பப் பொருளாகியதால், அது எல்லா விடத்தும் எல்லையற்றுப் பரந்து விரிந்து விரவியுள்ளது. ஆனால் நுட்பமான இந்த பூதாகாசத்தைவிட அதிநுட்பமானது மனாகாசம்; அதனினும் அதிநுட்பமானது சிதாகாசமாகிய அருணாசலனே. எனவே அருளொளியாகிய அருணாசலன் நுட்பத்திலும் நுட்பனாகையால், அவனே எங்கும் கிளர்வோன். அதாவது, எல்லா இடங்களிலும், எல்லாக் காலங்களிலும், எல்லா நிலைகளிலும், எல்லா ஜீவர்களின் இதயத்திலும், எல்லாமாய் நிறைந்து விளங்குபவன் அருணாசலனே.

காலமும் இடமும் மனத்தின் கற்பனை யாதலால், எல்லாக் காலமும் எல்லா இடமும் மனத்தின்கண்ணே அடங்கினவாம். சொப்பனத்திற் காண்கின்ற இடமும் காலமும் மனத்தின் விரிவே யாகையால், சொப்பனப் பிரபஞ்சத்தில் தானே எங்கும் விரவியுள்ளானல்லவா? ஜாக்கிர சொப்பனத்திலும் அமைவது இதுவே. எல்லாக் காலமும் இடமும் மனத்திலேதான் அடங்கியுள்ளதாலும், அம் மனமும் 'நான் இருக்கிறேன்' என்ற அறிவொளியிலேதான் ஒளிர்வதாலும், அறிவொளியாகிய அருணாசலன் விளங்காத காலமோ இடமோ கிடையாது அல்லவா?

"நாமன்றி நாளேது நாடேது?...
நாமின்றன் றென்றுமொன்று நாடிங்கங் கெங்கு
நாமுண்டு நாள்நாடில் நாம்." [மொன்றால்

— உள்ளது நாற்பது - 16

கல் முதலிய எல்லாப் பொருள்களிலும் ஆன்ம இருப்பு உள்ளது. எந்தப் பொருளும் அணுவின் திரட்சியே யாகையால், அணுவிலும் சேதனம் காணப்படுகிறது. அந்தச் சேதனம் ஆன்மவிளக்கமே. ஜீவர்களின் அஞ்ஞான திருஷ்டியில் இவ் வுலகின் பொருள்கள் ஜடப்பொருள்களாகத் தோன்றினும், ஞான திருஷ்டியில் உலகம் முழுவதும் அறிவுமயமாகவே விளங்கும். எனவே உலகின் எல்லாப் பொருள்களுமாய் விளங்குபவன் அறிவுசொரூபமாகிய அருணாசலனே.

மேலும், அருணாசலன் இவ்வாறு பற்பல ஜடப் பொருள்களாய்த் தோன்றி காணப்படுகின்ற அஞ்ஞான தசையிலும், அவனே ஒவ்வொரு ஜீவனின் உள்ளத்திலும் அவ் வுலகப் பொருள்களைப் பார்க்க உதவும் அறிவொளியாக ஒளிர்கின்றான். அதனால் ஸ்ரீ பகவான் "ஜீவர்கள் கீழோ ராயினும், மேலோராயினும், அவர்களுள் அந்தர்யாமியாய், அவரவர்களுடைய ஆன்மாவாய் நிறைந்து, அவரவர்இயல்புக் கேற்ற அளவில் அறிவொளியாகப் பிரகாசிக்கும் அருணாசல மணியே" என்று அழைக்கின்றனர். ஞானமற்ற கீழோரான பாமர மக்களிடம் உழைக்கவும், உண்ணவும், உயிர்க்கவும், வினைப்பயன் நுகரவும் மட்டுமே அறிவுள்ள ஜீவாத்ம சொரூபமாகவும், ஞானமுற்ற மகான்களிடம் ஞான சொரூபமாகவும், சர்வ தெய்வ சொரூபமாகவும், பரமாத்மா வாகவும் விளங்குபவன் ஒருவனேயான அருணாசலனே யாதலின், "கீழ் மேல் எங்கும் கிளர் ஒளி மணி" என்றனர்.

மாயையினால் ஆன்மாவை முற்றிலும் தோன்றாமல் மறைக்கவோ அல்லது இல்லாது செய்யவோ முடியாது. மாயை ஒன்றை மற்றொன்றாகத் திரிபுபடுத்தியே காட்ட வல்லதாகும். ஆகையால், மாயையின் சக்தியால் ஜீவர்கள் ஆன்மாவை இடம் காலம் என்ற எல்லைக்குட்பட்ட ஜடப்

பொருள்கள் நிறைந்த உலகமாகக் கண்டு, அவற்றுள் தன்னையும் ஒருவனாக எண்ணி பிரமிக்கின்ற போதும்கூட, எல்லா ஜீவராசிகளின் உள்ளத்திலும் 'நான் இருக்கிறேன்' என்ற ஆன்ம விளக்கம் என்றும் குன்றாது இயல்பாக விளங்குகிறது. இந்த சுயம்பிரகாசமான, குன்றாத ஆன்ம விளக்கமே அருணாசலனாகும். மாயையால் கற்பிக்கப்பட்ட ஜாக்கிர, சொப்பன, சுழுப்தியாகிய மூன்று நிலைகளிலும் அருணாசலன் 'இருக்கிறேன்' என்ற அறிவொளி மணியாய் கிளர்வோன் ஆவான். மேலும் தாழ்வு–மேலான மனநிலைகள் யாவிலும் ஆன்ம சொரூபமாகிய அருணாசலன் குன்றாத விளக்கமுடையவன். நம் மனம் எத்தகைய கீழ் நிலையில் இருந்தாலும், அப்போதுங்கூட 'நான் இருக்கிறேன்' என்று பிரகாசிக்கும் அருணாசல விளக்கத்திற்குக் குறைவில்லை. ஆனால் அருணாசலன் இவ்வாறு 'நான் இருக்கிறேன்' என்ற வடிவில் எப்போதும்குறையாதுபிரகாசித்தாலும், மாயையின் அநிர்வசனீய சக்தியால் 'நான் இருக்கிறேன்' என்ற இச் சுத்த அறிவு 'நான் இத் தேகமாக இருக்கிறேன்' என்ற கலப்புணர்வாகத் தோற்ற மாத்திரமாய்த் திரிபடைந்து விளங்குகிறது.

எனவே கீழ்மையாவது யாதெனின், தன் உண்மை யியல்பை உள்ளபடி (ஆன்மாவாக) உணராது, தன்னை தேகமாகவோ, மனமாகவோ, வியக்தி ஜீவனாகவோ எண்ணி, அதனால் தான் பிறப்பிறப்பாகிய வினைக் கடலில் உழன்று வருந்துவதாகக் கருதும் அறியாமையே யாகும். இவ் வறியாமையே அகந்தை, மனம், சித்சடக்கிரந்தி,பந்தம், மாயை, அவித்தை, இருள், பாழ் முதலிய பலவித நாமங் களால் அழைக்கப்படுவ தாகும். இவ் வகந்தையே எல்லாக் கீழ்மைகளுக்கும் ஆணிவேராகையால், ஸ்ரீ பகவான் 'கீழ்மை' என்னும் சொல்லை இங்கு அகந்தையைக் குறிக்கும் ஆகு பெயராகப் பயன்படுத்துகிறார். ஜீவர்கள் யாவரும் தன்னை யாரென்று விசாரித்தறியாத அஞ்ஞானத்தினாலேயே மேன்மையுள் மேன்மையாகிய தன் யதார்த்த ஆன்ம சொரூபத்தை மறந்து கீழ்மையுறுவதால், அவர்களின் இக் கீழ்மையானது அருணாசலனின் கூர்ந்த அருளொளி யினாலேயே அழிக்கப்படக் கூடியதாகும். எனவே "அகந்தை

யாகிய இக் கீழ்மையானது என்னிடம் அடியோடு இல்லாது போகும்படி நீ உன் அருள் வலியால் செய்தருள்க'' என்று ஸ்ரீ பகவான் பிரார்த்திக்கின்றனர்.

'பாழ்' என்றால் 'இருப்பற்றது' என்பது பொருள். உண்மையான இருப்புள்ளதை இருப்பற்றதாக என்றுமே செய்ய முடியாதாகையாலும், ஸ்ரீ பகவான் இங்கு "என் கீழ்மையைப் பாழ் செய்' என்று பிரார்த்திப்பதாலும், நம் கீழ்மையானது — ஈனமான தேகத்தை 'நான்' என்று அபிமானிக்கும் அகந்தையானது — உண்மையில் என்றுமே இருப்பற்றது என்பதை நாம் அறியவேண்டும். இருப்புள்ள கயிறை நல்ல வெளிச்சத்தில் காணும்போது இருப்பற்ற பாம்பு இருப்பற்றதாகச் செய்யப்படுவது போலவே, உண்மை இருப்புள்ள ஆன்ம சொரூபமாகிய அருணாசலனை அவனது தெளிந்த அருளொளியில் காணும்போது என்றும் இருப்பற்ற அகந்தையும் அதன் விளைவுகளாகிய உடல் உலகங்களும் இருப்பற்றனவாகச் செய்யப்படுகின்றன. எனவே தன் கூர்ந்த அருளொளியால் இப் பாழான அகந்தையைப் பாழ் செய்யுமாறு அருணாசலனை வேண்டுகின்றனர் ஸ்ரீ பகவான்.

எல்லாக் காலத்திலும் எல்லா இடத்திலும் எல்லாமாய் விளங்குவது அருணாசலனே யாயினும், அவனது உண்மை யான, இயல்பான விளக்கம் 'நான் இருக்கிறேன்' என்னும் தன்மையுணர்வே யாகும். ஆகையால், அவனை நானு அன்னியப் பொருள்களாய்க் காண்பதே கீழ்மை யாகும்; அவனை ஏகமாய், அனன்னியமாய், 'நான் இருக்கிறேன்' என்னும் அறிவொளியாய்க் காண்பதே உண்மையான மேன்மை யாகும். எனவே, அருணாசலன் தனது கூர்ந்த அறிவொளியால் 'நான்' என்னும் இருப்பு மாத்திரமாய் ஸ்புரிக்கும்போதுதான், நானு அன்னியப் பொருள்களைக் காணும் கீழ்மையானது பாழாய் — என்றும் இருப்பற்றதாய் — ஆக்கப்படுகிறது.

ஜீவர்களின் கீழ்மைகளாகிய எல்லாக் குற்றங்களும் அவற்றின் ஆணிவேரான அகந்தை அழிந்தாலன்றி அழியாவாகையால், ஸ்ரீ பகவான் அடுத்த பாடலில் குற்றம் முற்று அறுக்கப் பிரார்த்திக்கின்றனர்.

**19.** **குற்றமுற் றறுத்தெனைக் குணமாய்ப் பணித்தாள்**
**குருவுரு வாயொளி ரருணாசலா.**

**அ-ம்:** குரு உருவாய் ஒளிர் அருணாசலா! குற்றம் முற்று அறுத்து எனைக் குணமாய்ப் பணித்து ஆள்.

**பொ-ரை:** எனது சற்குரு மூர்த்தியாக விளங்கும் அருணாசலா! என்னிடமுள்ள குற்றங்கள் யாவற்றையும் (அவற்றின் மூலமாகிய அகங்கார வேரோடு) அழித்து, என்னைக் குணவானாகச் செய்து, உன் திருவடிக்கு ஆளாக்குவாயாக.

**வி-ரை:** "தகுந்த உயர்ந்த பக்குவிகளுக்கு குரு அவர்களது அறிவிற்கறிவாகவே உள்ளிருந்து அருள் விளக்கம் ஏற்படுத்துவதும் உண்டு" என்ற ஸ்ரீ ரமண பகவானின் சுயானுபவத்தினின் றெழுந்த உன்னத உபதேசம் இங்கு கவனிக்கத் தகுந்தது. சனகாதி நால்வருக்கும் ஞானமூட்ட, எங்கும் ஆத்ம சொரூபமாய் நிறைந்து விளங்கும் இறைவன் ஓர் வடிவு கொண்டு, மௌனியாய், தன் இருப்பு மாத்திரமாயிருந்து குருவாயினன். மிக உயர்ந்த பக்குவிகளாகிய அந் நால்வரும் அந்த மௌனத்தாலும், குருவின் சாந்நித்திய தரிசன மாத்திரத் தாலும் அறிவடைந் தமர்ந்தனர்! ஆனால் அதியுத்தம உயர் பக்குவியான ஸ்ரீ ரமண பகவானின் விஷயத்திலோ ஈசனுக்கு ஓர் மனித வடிவில் குருவாகி வெளித் தோன்ற வேண்டிய அவசியமும் கூட இலதாயிற்று! இதனையே "தன் அறிவிற்கறிவாய் இருந்தருள்வான்" என்ற மேற்கண்ட ஸ்ரீ பகவானின் உபதேசம் குறிக்கின்றது.

அவ்வாறே ஆயாசமின்றி ஆன்ம சாக்ஷாத்கார முற்ற ஸ்ரீ ரமண பகவான் இத்தகைய உயரியதினும் உயரிய உத்தம பக்குவம் உலகோர்க் கிலதாதலை முன்னிட்டு, அவர்கட்குக் குருவின் அவசியத்தையும் மகிமையையும் விளக்க வேண்டியே, அருணாசலத்தை அடையுமுன்பே தான் தன் அறிவுக்கறிவாய் அனுபவித்த பரமாத்மப் பொருளையே வெளியிலும் அருணாசலமாய், கிரியுருவாய், குருவுருவாய்க் கண்டுகொண்டு போற்றித் துதிக்கின்றனர்.

மனித வடிவில் எவரையும் கனவிலும் குருவாய்க் கொள்ள வேண்டாத அதியுத்தம பக்குவியான ஸ்ரீ பகவான் இவ்வாறு புராதன அருணாசலத்தையே குருவாய்ப் பாவித்தவராய், தன்னை அடிமையாகவும், ஸ்ரீ அருணாசலத்தை ஆண்டாணுகவும் கொண்டு போற்றுபவராய், அதன் மூலம் அவ்வுறவின்படி (குரு சிஷ்ய முறைப்படி) குருவினிடம் ஒருவன் யாசிக்கக் கூடியதும், குரு ஒருவர் சீடனுக்கு அளிக்கக்கூடிய மிக மிக உயர்ந்த பெரு நலனுமாவது யாது என்பதையும் உலகுக்கறிவிக்க வேண்டிப் பிரார்த்திக்கின்றனர். அது யாது? அதுவே குற்றம் முற்றும் நீக்கி அருள்வதும், குண நலன் அளித்து ஆளுவது மாகும். இதுவே குருவின் எல்லையிலா மகிமை. முக்தியும் பக்தியும் முதலிலேயே அடைந்துயர்ந்த ஸ்ரீ பகவான் பிறகு தன் யதார்த்த ஸத் இயல்பையே வெளியில் குருவாய் துவைதமாய்ப் பாவிக்கும் போது, குற்ற நீக்கமும் குண நலமும் ஆட்கொள்ளலும் அதனிடம் கோரிப் பிரார்த்திப்பதிலிருந்து நாம் இதை உணர்ந்து கொள்ள வேண்டியிருக்கிறது. எத்தகைய உயர்ந்தோராயினும், தன் குற்ற நீக்கத்துக்கும், குண நலன் களுக்கும் தன் குருவைச் சார்ந்து யாசிக்கும் பணிவே மேலானது என்பது இதன் கருத்து.

"என்னை யாளுவது உன் கடன் அருணாசலா" என்று ஸ்ரீ பகவான் 14வது பாடலில் பிரார்த்தித்தபடி, சீடனின் குற்றம் முற்றும் அறுத்து, அவனைக் குணவானாய்ப் பணித்து ஆளுவது ஞான சற்குருவின் கடமை யாகும். 'ஆளுவது' என்பது சீடனின் மனதை மீண்டும் எழ இயலாதவாறு ஆன்ம நிஷ்டையில் நிலைநிறுத்தி அருள்வசப்படுத்துவதாகும். சீடனை இவ்வாறு ஆன்ம நிஷ்டையில் நிலை நிறுத்துவதற்கு முதலில் சற்குரு அவனது குற்றங்கள் அனைத்தையும் களைந்து அவனுக்கு குணசீலத்தை நல்குவது அவசியமாகிறது. 'குற்றம்' என்பது மனதை அன்னியப் பொருள்களின்பால் இழுத்துச் செல்லும் ஆசாபாசங்கள், விருப்பு வெறுப்புகளாகிய வடிவாய்த் தோன்றும் எல்லாவித விஷயவாசனைகளையும், 'குணம்' என்பது ஐம்புல விஷய நுகர்ச்சியில் ஆசையற்றவனாய் இருப்பு நிலையிலேயே நிஷ்டையுற்றிருக்கும் விருப்பமாகிய சத்வாசனையையும் இங்கு குறிக்கின்றன. மேற்கண்டவாறு குற்றத்தைக்

களைந்து சற்குணத்தை நல்குவதன் மூலமே சற்குரு நம்மை முற்றும் அருள்வசப்படுத்துகிருர்.

மனம் விஷயவாசனைகள் வசப்பட்டிருக்கும்வரை, உண்முகமாகி 'இருக்கிறேன்' என்னும் பிரஜ்ஞை வடிவில் உள்ளத்தில் விளங்கிக்கொண்டிருக்கும் சற்குருவினிடம் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள அதற்கு விருப்பம் ஏற்படாது. சற்குருவின் அருட்சக்தி மனத்தை இதயத்தினுள் காந்தம் இரும்பு போல் இழுத்துக்கொள்ள எப்போதும் தயாராக இருந்தாலும், விஷயவாசனைகள் மனம் அவரது அருட்காந்தக் கவர்ச்சியால் இழுக்கப்படுவதற்குத் தடையாக நிற்கின்றன. எனவே எல்லா விஷயவாசனைகளும் முற்றும் அழிக்கப்பட்டாலன்றி, மனம் சரணுற்று இதயத்தில் 'நான்' என்ற வடிவில் எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கும் குருவின் சுயம்பிரகாசமான அருளொளிக்கு ஆட்பட்டு கரைந்தொழிய உடன்படாது. தேகாத்ம புத்தியாகிய அகந்தை எழுந்த பிறகே விஷய வாசனைகள் எழுமாதலால், எல்லா விஷய வாசனைகளுக்கும் ஆணிவேர் அகந்தையே யாகும். ஆகையால் இந்த அகந்தையாகிய ஆதிக்குற்றம் (original sin) அழிந்தாலொழிய, அதனை ஆசிரயித்து நிற்கும் மற்ற எல்லாக் குற்றங்களும் உள்ளத்தில் நுட்பமான வித்து வடிவில் இருந்து கொண்டே தக்க காலத்தில் கிளம்பி எழும். அதனுல்தான் ஸ்ரீ பகவான் "குற்றம் முற்று அறுத்து" என்று பாடுகிருர். 'முற்று' என்ருல் 'அவற்றின் மூல வேராகிய அகந்தையோடு' என்பது பொருள். ஆகையால் 'முற்றறுத்து' என்பதால் வாசனைகள் வயப்பட்ட மனம் லயமாகாமல் அதனை வேரோடு நாசப்படுத்தி என்று பொருள் கொள்ள வேண்டும்.

தேகான்ம பாவமாகிய அகந்தையே எல்லாக் குற்றங்களுக்கும் இருப்பிடமாவது போல, அகந்தை முற்றும் அழிந்த நிலையே குண பூரணமாகும்.

"தானந் தவம்வேள்வி தன்மம்யோ கம்பக்தி
வானம் பொருள்சாந்தி வாய்மையருள் — மோனநிலை
சாகாமற் சாவறிவு சார்துறவு வீடின்பம்
தேகான்ம பாவமறல் தேர்."

— உள்ளது நாற்பது - அனுபந்தம் -13

குருவருளால் விஷய வாசனைகள் வலுவிழக்குமளவுக்கு மனத்தில் சத்வாசனை அதிகரிக்கும். சத்வாசனை இவ்வாறு அதிகரிக்க அதிகரிக்க, தெய்வீக சம்பத்துக்களாகிய மற்ற எல்லா நற்குணங்களும் மனத்தில் தாமே பெருகும். இவ்வாறு சர்வ குணசம்பன்னனுனவனே இறைவனுக்கு ஆளாகத் தக்கோன் ஆவன்.

"ஏழைக் குடிலுக் கிராசன் எழுந்தருள்முன்
பேழைப் பொருளனுப்பிப் பின்போமா(று)—ஏழையெனைத்
தெய்வசம் பத்தால் திருத்தி யுனக்கேற்பச்
செய்வதும்உன் செய்கையன்றோ? செய்."

— ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் - 27

உண்மையில், குற்றங்களாகிய விஷய வாசனைகளை நீக்குவதும், குணமாகிய சத்வாசனையை அளிப்பதும், ஆட்கொள்ளுவதும் ஆகிய செயல்கள் மூவ்வேறு தனித்தனி செயல்கள் அல்ல; இவை மூன்றும் ஒன்றேயாகும். சற்குருவின் அருளொளி நம் உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு கூர்ந்து பிரகாசிக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு விஷய வாசனைகள் குன்றி, சத்வாசனை மிகுந்து, மனம் குருவின் அருளுக்கு ஆளாகும். அதனுல்தான் ஸ்ரீ பகவான் "குற்ற முற்றறுத்து எனைக் குணமாய்ப் பணித்து ஆள்" என்று பிரார்த்திக்கின்ருர். இதே பிரார்த்தனை மீண்டும் 69வது பாடலில் "பூமணமாம் மனம் பூரண மணங் கொளப் பூரண மணம் அருள் அருணசலா" என வேறு வடிவில் எதிரொலிக்கின்றது. அங்கு 'பூ மணம்' என்பது விஷய வாசனையையும், முதலில் வரும் 'பூரண மணம்' என்பது சத்வாசனையையும், அடுத்து வரும் 'பூரண மணம்' என்பது மனம் இறைவனுக்கு முழுதும் ஆட்பட்டுவிட்ட பூரண ஐக்கிய நிலையையும் குறிக்கின்றன.

விஷயவாசனைகளின் நீக்கமும் சத்வாசனையின் பெருக்கமும் சற்குருவின் அருளாலேயே நிகழக் கூடியதாகும். சற்குருவின் கிரியை அதிநுட்பமானது; அது மனம் வாக்குக்கு எட்டாதது. சற்குருவின் அருள் சம்மதமின்றி எந்த ஒரு வாசனையும் எழுச்சியடைந்து மனத்தின் மேற்பரப்புக்கு வர முடியாது. வாசனைகள் எழுச்சியடைந்து மனத்தின் மேற்பரப்புக்கு எண்ண வடிவில் வரும் போது

தான், அவற்றை நம்மால் அறிய முடியும். ஆனால் அவை இவ்வாறு கிளம்புமுன்பே, அவை வித்து வடிவில் உள்ளத்தில் கிடக்கும் அந் நிலையிலேயே, அவை யாவும் சற்குருவுக்குத் தெரிந்தே உள்ளன. அவர் நுட்பத்திலும் நுட்பமான ஆன்மாவாய் நம் உள்ளத்தில் என்றும் விளங்குவதால், அவர் நமது வாசனைகள் யாவற்றையும் வித்து நிலையிலேயே அறிவார். எனவே இவ் வாசனைகள் யாவையும் அழிக்கும் விதத்தை அவரே அறிவார். வாசனைகளை அழிக்க வேண்டி அவற்றை ஒவ்வொன்றாய்க் கிளப்பி மனத்தின் மேற்பரப்புக்கு வரச் செய்து, அதே சமயம் நம் மனம் கிளம்பிய வாசனைகள் வசப்பட்டு அவற்றால் அலைக்கழிக்கப்படாமல் தன்னாட்டத்தில் ஊன்றி நிற்கும் விவேகத் தெளிவையும் தனது அருளொளியால் நமக்கு வழங்குகிறார். இவ்வாறாக மெல்ல மெல்ல மனத்தின்மீதுள்ள விஷய வாசனைகளின் ஆதிக்கத்தை வலுவிழக்கச் செய்கிறார்.

"விஞ்சுங் குருவின் விபூதி வலத்தருளால்,
அஞ்சேல், அடைவாயிவ் வான்மவறி(வு) — எஞ்சியொரு
வாதனைதான் மீந்தாலும் வாளா இரான்ரமண
போதகுரு நாதப் புமான்."

— சாதனை சாரம் - 63

நம் உள்ளத்தில் நுட்பமான மூலவடிவத்தில் கிடக்கும் வாசனைகள் வித்துக்கள் போன்றவை. நிலத்தில் பல்வேறு விதைகள் புதைந்து கிடக்கும் போது, பயிர் விளையும் விதைகள் எவை, களைகளை உற்பத்தி செய்யும் விதைகள் எவை என்பதை இனம் காணுவது அசாத்தியம். நீர் பாய்ச்சப்பட்டு அதனால் விதைகள் முளைத்தெழுந்தபின்னரே, களைகளைப் பயிரினின்றும் பிரித்துக் கண்டு அவற்றைக் களைவது சாத்தியமாகும். இதே போன்று, வாசனைகள் உள்ளத்தில் விதை வடிவில் கிடக்கும்வரை நம் விவேகத்தினால் விஷய வாசனைகளைப் பிரித்துக் கண்டு அவற்றைக் களைய இயலாது. குருவருளாகிய நீர் பாய்ந்து அவ் விதைகள் எண்ண வடிவில் முளைக்கும் போதுதான், விஷய வாசனை களாகிய கேடுசெய்யும் விதைகளை மெல்ல மெல்லக் களைய நம் விவேகத்தைப் பயன்படுத்த முடியும். இங்கு கேடுசெய்யும் விதைகள் என்று குறிப்பிடப்படுவதே ஸ்ரீ பகவான் இப்

பாடலில் கூறுகின்ற 'குற்றம்' ஆகும். இந்தக் குற்றங்களில் எல்லாவித விஷயவாசனைகளும் — சுப-அசுப வாசனைகள் இரண்டுமே — உள்ளடங்கியனவாம். அதாவது,உள்ளமாகிய வயலில் சத்வாசனை என்னும் விதையே ஆன்ம நிஷ்டை என்னும் பயிராகத் தடைபடாது செழித்து வளர்வதற்காக, அசுப விஷயவாசனைகள் மட்டுமன்றி சுப விஷயவாசனைகளும் களையப்படுவது அவசியமாகிறது*. சற்குருவின் அருளொளியால் உள்ளத்தில் தூண்டப்பட்ட கூரிய தன்னோட்டத்தால் தான் இவ் விருவித விஷயவாசனைகளும் முற்றும் களைந் தெறியப்பட முடியும்.

"முளைத்தபின்னர் தான்முடியும் முள்விதையைக் கண்டு
களைத்தெறிதல்; உந்தியான காலத் — துளத்துளுறை
வாசனைகள் எண்ணமாய் வந்தால்தான் சாதனையால்
நாசமுறும்; அஃதே நலம்."

"வாசனையே வித்து; வருமெண்ண மேசெடிகள்;
ஈசனருள் மேலே யெழுப்பிவிடும்; — ஆசையற
நல்லவிவே கத்தால் நசுக்குவிக்கும்; இவ்வருட்போர்
வெல்லும்வரை யோய்ந்து விடேல்."

"உள்ளத்தில் உள்ளமாய் உள்ளபடி உள்ளநிலை
விள்ளற் கிலாத விழுப்பநிலை — உள்ளந்
தெளிவித்தை நட்டுத் திருவருள்நீர் பாய்ச்சி
விளைவிப்போன் சற்குருதே வே."

— சாதனை சாரம் - 214, 215, 29

நம் உள்ளத்திலுள்ள எல்லா வாசனைகளும் எண்ண வடிவில் மேலே கிளம்ப அனுமதிக்கப்பட்டால், மனம் சில வாசனைகளின் வேகத்தினால் இழுத்துச்செல்லப்பட்டு தன் விவேக பலத்தை இழந்துவிடும். ஆகையால், எந்த நேரத்தில் எந்த ஒரு வாசனை வெளிக் கிளப்பப்பட வேண்டும் என்பது சற்குரு ஒருவருக்கே தெரியும். நமது அற்ப விவேக பலத்தினால் அழிக்கக் கூடிய அளவுக்குட்பட்ட வாசனைகளை மட்டுமே எண்ண வடிவில் எழுச்சியடைவதற்கு

*'குருவாசகக் கோவை' பாடல்கள் 676, 677 இங்கு ஒத்துநோக்கத் தக்கனவாம்.

அனுமதிப்பார். நம்மிடமுள்ள சில வாசனைகள் நம்மால் தாங்க முடியாத அளவுக்கு அதிபயங்கரமானதா யிருக்கு மாதலால், அவற்றை ஒரு போதும் எழுச்சியடைய அனுமதிக்காது, அவற்றை மெல்ல மெல்ல உலருமாறு உள்ளத்திலேயே வைத்திருந்து, கடைசியில் ஓங்கி எழும் ஞானத்தீயில் அவற்றை அவற்றின் மூல வேரான அகந்தை யோடு வெந்து சாம்பலாகுமாறு செய்வார். விஷயவாசனைகள் யாவையும் அழித்தொழிக்கும் இந்த அற்புதமான அதிநுட்ப கிரியை நம் உள்ளத்தில் இருப்பு மாத்திரமாய் இருந்து வரும் சற்குருவின் சந்நிதி விசேஷத்தினாலேயே நடந்தேறு கிறது. அதனால்தான் குருவுருவாய் ஒளிரும் இம் மலையைப் பார்த்து வியந்து, "அறிவறு கிரியென அமர்தரும்; அம்மா, அதிசயம் இதன் செயல் அறிவரிது ஆர்க்கும்!" என்று ஸ்ரீ பகவான் 'ஸ்ரீ அருணாசல அஷ்டகத்'தின் முதல் அடியில் பாடுகின்றனர்.

சற்குருவானவர் ஆன்மாவுக்கு வேறல்லாதவ ராதலாலேயே இந்த நுட்பமான கிரியையை அவர் செய்து முடிக்கும் வல்லவராவார். தன் தனிவியக்தித்துவம் அழியாத யாரொருவரும் ஞானகுருவா யிருந்து இக் கிரியையை செய்ய இயலாது; ஏனெனில், அத்தகையோரால் உள்ளத்தின் ஆழத்தில் வித்து வடிவில் புதைந்து கிடக்கும் வாசனைகளை அறியவோ அவற்றின் மீது ஆதிக்கம் கொள்ளவோ இயலாது. உண்மையில் ஆன்மாவேதான் குரு. அவ் வான்மா வெளியில் ஓர் உருக் கொண்டாலே நாம் அதனை குருவாக உணரலாம். குரு என்றுமே நம் உள்ளத்தில் 'நான்' என்ற அறிவொளி யாய் விளங்கிக் கொண்டிருந்தாலும், நாம் உண்முகப்பட்டு அவரின் மௌனோபதேசத்தைக் கேட்க போதிய அன்பு கொள்ளாததால் அவர் நம் மனத்தை உள்ளே திருப்ப வேண்டி வெளியில் ஒரு நாமரூபந் தாங்கி எழுந்தருளுவது அவசியமாகிறது.

"வெளியே குருவொருவன் வேண்டப் படுகை
களிசேருன் மத்தக் கருத்தால் — வெளிப்பாய்ந்து
சச்சித்தா மான்மா சதாவிதயத் தோதுமெய்யை
நச்சித்தாங் கேளாமை யால்."

— குருவாசகக் கோவை - 272

அதனால்தான் ஸ்ரீ பகவான் "குரு என்பது ஆத்மா. கடவுள் குருவுருக் கொண்டு பக்தனுக்குத் தோன்றி, சத்தியத்தைப் போதித்து, தன் ஸந்நிதானத்தால் அவன் சித்தத்தைச் சுத்தம் செய்கிறார். அதனால் பக்தன் மனம் பலமடைந்து அந்தர்முகப்படுகிறது. குரு வெளியு முள்ளார்; உள்ளு முள்ளார். வெளியிலிருந்து மனம் உண்முக மாகும் படித் தள்ளுகிறார்; உள்ளிலிருந்து மனத்தைத் தன்வச மிழுத்து, அதை அமைதியாக வைத்துக்கொள்ள உதவுகிறார். இதுதான் குரு கிருபை. தெய்வம், குரு, ஆத்மா இவை ஒன்றே. நீ தேடும் குரு உனக் கயலாயிருந்தால், அவர் மறைந்துவிடுவதும் நிச்சயம். அவ்வாறு தோன்றி மறையுங் குருவினால் பயனென்ன? நீ தனியென்றோ உடம்பென்றோ கருதுகிற வரையில் உனக்கு வெளி குருவும் தேவையே; அவர் உடம்புடன் காணப்படுவார். தன்னை உடம்பாகக் கருதும் பொய் தீர்ந்தால், குரு ஆத்மாவுக் கயலற்றுக் காணப்படுவார். உனக்கு உடம்பிருப்பதனால், அவருக்கும் உடம்பிருக்கிற தென்றும், உனக்கு அவர் ஏதோ பிரத்தியக்ஷ அனுகூலம் செய்வாரென்றும் நீ கருதுகிறாய். ஆனால் அவர் வேலை அந்தரங்கத்தில் ஆத்ம சம்பந்தமானது. குரு இருந்தபடி இருக்கிறார். அவரது மௌனமே அதி தீவிரமான கிரியை. அதனால் எல்லாரிடத்திலும் அருள் தாண்டவ மாடுகிறது. குரு உள்ளும் புறமு மிருப்பதால் நீ உண்முகப் பட அநுகூலமான ஸ்திதியை ஏற்படுத்தி, உன்னை மையத் துக்கு இழுக்க அவர் உண்முகத்தையும் தயார் செய்கிறார். இவ்வாறு நீ உள்ளத்தில் நன்கு நிலை நிற்கும் பொருட்டு அவர் வெளியிலிருந்து உன்னை உள்ளுக்குத் தள்ளி, உள் ளிலிருந்தும் இழுத்துக் கொள்கிறார். பரமாத்மாவாகிய ஈச்வரனே மனிதவுருத் தாங்கி வந்துள்ள குரு, உள்ளிலிருந்து பக்தன் வழிகளிற் பிழை காண உதவி, ஆத்மாவை அறியும் வரை சரியான மார்க்கத்தில் அவனை நடத்துகிறார்" என்று கூறினர்.*

குருவின் முக்கிய வேலை நம் உள்ளத்துக்குள்ளேதான் நடைபெறுகிறது. வெளியிலுள்ள குருவின் வேலை உள்ளத்தில் அவர் செய்யும் வேலைக்குத் துணை செய்வதேயாகும். வெளியில்

*'ஸ்ரீ மஹர்ஷி வாய்மொழி' பக்கங்கள் 35-38ஐக் காண்க.

தோற்றங்கொண்டுள்ள குருவிற்கு இருவித வேலைகள் உண்டு; அவையாவன, சொல்வடிவில் உபதேசங்களை அளிப்பதும், தன் திருவுருவுடன் சற்சங்கம் கொள்ள சந்தர்ப்பம் அளித்து சீடனின் உள்ளத்தைப் பக்குவப்படுத்துவது மாகும். ஸ்ரீ பகவானின் பக்தர்களுக்குத் தேவையான எல்லா உபதேசக் கருத்துக்களும் அவரே அருளியுள்ள நூல்களில் என்றும் கிடைக்கப் பெற்றுள்ளன. மேலும் அவர் தனது மனித திருவுருவை மறைத்துவிட்டாலும், அருணாசலம் என்னும் இம் மலையே குருவுருவாய் ஒளிர்ந்து வருவதையும், அதனால் அதன் அண்மையில் வசிப்பதன் மூலமோ சேய்மையில் அதனையே கருதுவதன் மூலமோ அதனுடன் சற்சங்கம் கொள்வது என்றுமே சாத்தியம் என்பதையும் அவர் நமக்கு உணர்த்தியுள்ளார்.

"ரமண திருவடிவம் நம்மையழ விட்டே
யிமையும் பிரிந்ததில்லை! என்றும் — ரமண
சரீரம் விரிந்தவர்கொள் சாசுவத விச்வ
சரீரம் அருணா சலம்."

— ஸ்ரீ அருணாசல வெண்பா - 29

'வாழ்ந்துகொண்டிருக்கும் குரு' (living guru) ஒருவர் அவசியம் என்று நினைப்பவர்கள், ஸ்ரீ அருணாசலரமணன் நம் உள்ளத்தில் என்றுமே வாழ்ந்துகொண்டிருக்கும் குருவாக ஒளிர்கின்றனர் என்ற உண்மையில் பேருறுதி கொள்ளலாம். மேலும் வெளியில் காணக்கூடிய தூல உருவிலுள்ள குரு ஒருவர் தேவை என்று நினைப்பவர்கள், ஸ்ரீ அருணாசல ரமணனே இந்த மலை வடிவில் இன்றும் என்றும் குருவுருவாய் ஒளிர்கின்றனர் என்பதில் அவ்வாறே பேருறுதி கொள்ளலாம். எனவே ஸ்ரீ பகவானின் ஆப்தவாக்கியங்களில் திட நம்பிக்கை கொண்ட உண்மையான முமுக்ஷுக்கள் இன்னும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாயினும் ஸ்ரீ அருணாசலரமணனைத் தவிர வேறெந்த ஒரு குருவையும் வெளியில் தேடிப்போகத் தேவையில்லை. வெளியிலுள்ள குருவுருவின் மூலம் ஒரு சீடனுக்குக் கிடைக்க வேண்டிய எல்லா சகாயங்களும் ஸ்ரீ ரமண பகவான் அருளியுள்ள உபதேச நூல்களின் மூலமும் இந்த அருணாசல மலையின் மூலமும் நமக்கு என்றென்றும் கிடைக்கப்பெற்றுள்ளன.

இனிமேல் நாம் செய்ய வேண்டியதெல்லாம் அவரது அருள் நம் மனத்தில் சுரந்து பெருகி நம் குற்றங்களை யெல்லாம் களைந்து நம்மைக் குணவாளுக்கி ஆள வேண்டும் என்ற உண்மையான ஆவல் கொள்ளல் என்பதே யாகும். இப்படிப் பட்ட ஆவல் கொள்வதேதான் நாம் நம் குருகாட்டிய வழிப்படி உண்மையாக நடப்பதாகும்.

**20. கூர்வாட் கண்ணியர் கொடுமையிற் படாதருள்
கூர்ந்தெனைச் சேர்ந்தரு ளருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கூர் வாள் கண்ணியர் கொடுமையில் படாது அருள் கூர்ந்து எனைச் சேர்ந்து அருள்.

**பொ-ரை:** அருணாசலா! கூரிய வாள் போன்ற கண்களை யுடையவர்களாகிய பெண்களின் மயக்கமாகிய கேட்டில் என் மனம் அகப்பட்டுவிடாதபடி, கருணை கூர்ந்து என்னைச் சேர்ந்து அருள்வாயாக.

**வி-ரை:** சென்ற பாடலின் விளக்கவுரையில் குறிப்பிட்டுள்ளவாறு எல்லாக் குற்றங்களின் ஆணிவேரானது தேகாத்ம புத்தியே யாகும். அகண்டமான தன் ஆன்ம இருப்பை ஓர் உடலளவாகக் குறுக்கி மதிக்கும் போது, குறுக்கப்படாத எஞ்சியுள்ள ஆன்மப் பகுதியே தனக்கு அன்னியமான பல ஜீவர்களாகவும் பல பொருள்களாகவும் காணப்படுவதால், தன்மீது இயல்பாகவே இருந்து வரும் ஸ்வாத்ம பிரியமே அவற்றின்மீது விருப்பு வெறுப்பு வடிவான ஆசையாக மின்னிப் பாய்கிறது. இவ்வாறு எழும் ஆசையே குரோத, லோப, மோக, மத, மாற்சரிய மாகிய மற்ற எல்லா விதமான குற்றங்களின் எழுச்சிக்கும் காரணமாகிறது.

ஒரு தேகத்தை 'நான்' என்று அபிமானிக்கும் போது எழுகின்ற எல்லா ஆசைகளுள்ளும், காமமே மிகவும் ஆழமாக வேரூன்றியதும் சக்தி வாய்ந்ததுமான ஒன்றாகும். தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள் முதலாகிய அனைத்து ஜீவராசிகளும் ஆண்-பெண் என்ற பேதத்தோடு படைக்கப் பட்டிருப்பதால், அவர்கள் யாவரும் காமத்தின் ஆட்சிக்கு அடிமைப்பட்டவரா யுள்ளனர். பிறவிதோறும் ஜீவனின் தேகாபிமானத்தைப் பலப்படுத்தி அவனை மேலும் மேலும்

பந்தத்தில் ஆழ்த்தும் விளையாட்டில் மாயை கையாளும் கருவிகளுள் காமம் ஒரு சக்தி மிக்க ஆயுதமாகும். நாம் ஓர் ஆண் தேகத்தை 'நான்' என்று அபிமானித்தால், நமக்கு ஒரு பெண் தேகத்தின்பால் கவர்ச்சி தோன்றுவது இயற்கையாகும்; இவ்வாறே நாம் ஒரு பெண் தேகத்தை 'நான்' என்று அபிமானித்தால், நமக்கு ஓர் ஆண் தேகத்தின் பால் கவர்ச்சி தோன்றுவதும் இயல்பாகும். ஆண்-பெண் தேகங்களிடையே பிறக்கும் கவர்ச்சியானது இரு காந்தங் களின் எதிர் துருவங்களுக்கிடையே உள்ள கவர்ச்சி போன்றதாகும். ஒரு காந்தத்தினுள் நட்ட நடுமையத்திற்கு வடபுறமோ தென்புறமோ உள்ள எந்த ஒரு பகுதியும் மற்றொரு காந்தத்தின் எதிரான துருவத்தால் கவரப்படாமல் இருக்க முடியாதது போலவே, பிரமாதத்தால் நம் இருப்பின் மையமான ஆன்மாவினின்றும் நழுவி ஓர் ஆண் தேகத்தை யோ பெண் தேகத்தையோ 'நான்' என்று அபிமானித்தால், எதிர் இனமான தேகத்தின் கவர்ச்சிக்கு ஆட்படாமல் நம்மால் இருக்க முடியாது. ஒரு காந்தத்தின் நடுமையமே மற்றொரு காந்தத்தின் எந்த துருவத்தின் கவர்ச்சிக்கும் ஆட்படாத ஒரே இடமாகும். அதுபோலவே, நாம் தேகாபி மானத்தை விடுத்து அணுவளவும் பிரமாதமின்றி ஆன்மாவில் ஸ்திரமாய் நிஷ்டையுற்றிருந்தால்தான், ஆண்-பெண் என்ற தேகக் கவர்ச்சியினின்றும் விடுபட்டு நிற்க முடியும்; ஏனெனில், இதயமாகிய ஆன்மா ஆணுமல்ல, பெண்ணுமல்ல. எனவே, ஆன்மாவை அறிந்து ஆன்மாவிலேயே நிஷ்டை யுற்று தேகாத்ம புத்தியை இழந்த ஒருவனையே காமத்தை உண்மையாகவே வென்றவனாவான் என்று சொல்லத்தகும். சிவபெருமான் காமனை தனது நெற்றிக்கண்ணினால் எரித்த கதையின் தத்துவமாவது ஞானக்கண் திறக்கப் பெற்ற ஒருவனாலேயே — அதாவது, குருவருளால் ஆன்ம சொரூபத்தை தரிசித்து தேகாபிமானம் என்னும் முடிச்சு அறுக்கப் பெற்ற ஒருவனாலேயே — காமத்தை வெல்ல முடியும் என்பதாகும்.

ஞானோதயத்தினால் தேகாபிமானம் என்னும் இச் சேர்க்கை இவ்வாறு அறுபடும்வரை, காமம் சூக்ஷ்ம வாசனை யாய் — ருசியாய் — இதயத்துள் வித்துபோல இருந்து கொண்டேயிருக்கும். அதனால்தான் ஸ்ரீ கண்ணபிரான்

"விஷயா வினிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின: ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் திருஷ்ட்வா நிவர்த்ததே" [ஐம்புலன்களை போஷிக்காமல் வைத்திருப்பவனுக்கு விஷயானுபவங்கள் அற்றுப்போய்விடுகின்றன; ஆனால் அவ் விஷயங்களின்மேல் அவனுக்கு உருசி (ஆசை) எஞ்சியிருக்கின்றது. பரம்பொருளை (ஆன்ம சொரூபத்தை)த் தரிசித்ததும், அவனுடைய அந்த உருசியும் அழிகின்றது] என்று கீதை 2.59ல் உபதேசிக்கின்றனர். ஆகையால் தேகாத்ம புத்தி அழியாதிருக்கும் வரை, மனோவாக்குகாயங்களால் எவ்வளவுதான் பரிசுத்தமான வாழ்க்கை வாழ்ந்தாலும், நம் உள்ளத்தினுள் காமத்தின் வித்து தங்கியிருந்து, சமயம் வாய்க்கும்போது உயிர்த்து எழும். ஓர் ஆண் தேகத்தை 'நான்' என அபிமானித்து வாழும் ஒருவன் விஷயத்தில் கொடிய கருத்தைக் கொண்ட ஒரு காமினியின் கண்கள் அக் காம வித்தைச் சுலபத்தில் உயிர்த்து எழச் செய்ய வல்லனவாகும். இது பெண்கள் விஷயத்தில் ஆண்களுக்கும் பொருந்தும்.

"தீண்டலால் ஒன்றோ செகுத்தலுயிர்? தேருங்கால்
காண்டலால் மற்றும் கருதலால்—மாண்டிடச்செய்;
ஐவாய வேட்கை அராப்போல யாம்காணோம்
பைவாய பாம்பில் பழுது."

— குருவாசகக் கோவை - 593

தேகத்தை 'நான்' என்று அபிமானிக்கும் ஜீவனின் அஞ்ஞான திருஷ்டியில் அவன் தேக வாழ்வில் அடையக் கூடிய புலன் இன்பங்களுள் காமவின்பமே மிக வலியது என்று தோன்றுகின்றது. ஆனால் காமவிஷயத்தில் கொஞ்சங் கூட சுகம் இல்லை என்பதே உண்மை யாகும். அக் காம விஷயத்தைப் பெற்று அனுபவிப்பதற்காக ஏற்படுகிற வேட்கையின் உக்கிரம் காரணமாகத்தான் அதிலே சுகம் உண்டு என்று தோன்றுகிறது.

"அயிராணி தன்பால் அடைமகவான் போகம்
மயர்சேர் *சுணங்கன் மனைமாட்(டு)—இயல்பாகத்
தான்மருவும் அஃ(து)என்றான் தத்தியங்கா
ஆன்மபர மாநுபவம் ஆர்ந்து." [தர்வணன்முன்

*சுணங்கன் - நாய்.

"கல்லும் உதரக் கடும்பசிக்குக் கஞ்சியொடு
புல்அரிசிக் கூழும்அரும் போனகமாம்; —
[தொல்லுலகில்
வேட்கும் விடயஇயல் மேற்றன்(று) அதனிடத்து
வேட்கையே இன்ப விளைவு."

— குருவாசகக் கோவை - 582, 583

காமம் மனதை வாட்டும் மிகக் கொடுமையான தீ யாகையால், இத் தீ காமச்சுவையின் அனுபவத்தால் தற்காலிகமாகத் தணியும்போது, காம வடிவில் எழுந்த கொடிய எண்ண அலைகள் குறைந்து மனத்தில் நிவர்த்தி சுகம் கணப்பொழுது ஏற்படுகிறது. எனவே காம எண்ணங்களின் ஓய்வில்தான் சுகம் கிட்டுகிறதே யொழிய, போகப் பொருளில் சுகம் உண்மையில் அடங்கியிருக்கவில்லை. ஆனாலும் வறண்டு போன எலும்பைக் கடித்துச் சுவைக்கும் நாய் தன் காயம் பட்ட வாயிலிருந்து வெளிவரும் இரத்தத்தை எலும்பிலிருந்து கிடைப்பதாக எண்ணி அதைச் சுவைத்து மகிழ்வது போலவே, மனமும் கொடிய காம வேட்கை தணியும்போது கிடைக்கும் நிவர்த்தி சுகமானது அந்தப் போகப் பொருளி லிருந்தே கிடைப்பதாகத் தவறாக எண்ணி, மேலும் மேலும் அப் போகப் பொருளின் மீது மோகங்கொண்டு அலையவே, காமத் தீ மேலும் மேலும் கொழுந்துவிட்டு எரிகிறது. எனவே தணிக்க முடியாத காமத்தீயைப் போன்ற கொடுமையான தீ வேறொன்றையும் காணமுடியாது. இத்தகைய கொடிய காமத் தீயாகிய விஷப் பாம்பு உள்ளத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் போதும், தீய எண்ணங்கொண்ட ஒரு காமினியின் மயக்கும் கண்பார்வை அதனைச் சீண்டி சீறிப் பாய்ந்து எழச் செய்ய வல்லதாகையால், இப் பாடலில் ஸ்ரீ பகவான் அத்தகைய காமினியின் வாள் போன்ற கூரிய கண்பார்வையால் தூண்டப்பட்ட காமத்தீயின் கொடுமையை "கூர்வாட் கண்ணியர் கொடுமை" என்று வர்ணிக்கின்றனர். இதே போன்று மாணிக்கவாசகரும் 'நீத்தல் விண்ணப்பம்' 44வது பாடலில் இக் கொடுமையை "முழுதயில் வேல் கண்ணியர் என்னும் மூரித்தழல்" (அதி கூர்மையான வேல் போன்ற கண்களையுடைய பெண்களாகிய வலிய நெருப்பு) என்று வர்ணித்துள்ளார்.

கொடிய குணமுடைய பெண்கள் தம் மோகக் குறிப்புகளை வாயாலன்றி கண்ணாலேயே அறிவிக்கிறார்கள் என்பது பற்றியே அவர்கள் 'கண்ணியர்' என்று வர்ணிக்கப்படுகிறார்கள். மேலும் 'கண்ணியர்' என்ற சொல்லை ஆண்பாலர் கொடிய பெண்களுக்கும், நற் பெண்மக்கள் துஷ்டர்களான ஆண்மக்களுக்கும் பொருத்திக் கொள்ளத் தக்கவாறு — இரு பாலருக்கும் பொருந்துமாறு — ஸ்ரீ பகவான் பாடியுள்ளார்.

வெளி விஷயங்களினின்றும் கவனத்தை மீட்டு அதனை அகமுகப்படுத்தும் சாதனையில் ஈடுபட்டுள்ள முமுக்ஷுவின் மனத்தில் காம, குரோத, லோப, மோக, மத, மாற்சரியங்கள் அவனது முயற்சிக்குத் தடை செய்யும் பகைகளாக எழுந்து அவனது கவனத்தை ஆன்மாவினின்றும் வெளியே வலிந்து இழுக்கின்றன. சுகம் வெளிவிஷயங்களில் உள்ளது என்ற தன் இயல்பான அவிவேகத்தின் காரணமாக பிரதிபலன ஒளியாகிய மனம் சுபாவமாகவே பலஹீனப்பட்டிருப்பதால், அது எளிதில் வலிமைமிக்க இப் பகைகளுக்கு ஆட்படுகிறது. சரியான விவேகத்தை அளிக்கக்கூடிய அறிவொளியாய் நம் உள்ளத்தில் விளங்கும் குருவருளின் துணையின்றி மனம் தன் சொந்த பலத்தினால் தன்னுள் எழும் இக் காமக் குரோதாதி உணர்ச்சிகளாகிய பகைகளை எதிர்த்து நிற்க இயலாது. எனவே வலிமை குன்றிய ஒருவன் வலிய பகைவனால் தாக்கப்படும்போது அவன் வலிமைமிக்க ஒரு நண்பனை அப் போரில் தனக்குத் துணையாக தன்னுடன் சேருமாறு அழைப்பது போன்று, ஸ்ரீ பகவான் இப் பாடலில் தீய பெண்களின் கொடிய பார்வைக்கு ஒருவனை இரையாக்கும் காம வாசனையை எதிர்த்து நடத்தும் போரில் தனக்குத் துணையாக விரைந்து வந்து தன்னைச் சேர்ந்து அருளுமாறு அருணாசலனை அழைக்கின்றார். மனத்தில் கொந்தளித்து எழுகின்ற விஷயவாசனைகளை எதிர்த்து நடக்கும் போரில் அருணாசலன் நம்மைச் சேர்ந்து உதவி அருளுவது எவ்வாறெனின், அவன் நம் உள்ளத்திலுள்ள அருளொளியாய் மேன்மேலும் கூர்ந்து பிரகாசிப்பதால் விஷய வாசனைகளைப் பின்தொடராத வைராக்கியத்தையும் ஆன்மாவை நாடி உறுதியாக நிற்கும் பக்தியையும் அளிக்கவல்ல விவேகபலத்தை தூண்டுவதாலாம். அதனால்தான் ஸ்ரீ பகவான்

"அருள் கூர்ந்து எனைச் சேர்ந்தருள் அருணசலா" என்று பிரார்த்திக்கின்றார். இவ்வாறு நம் உள்ளத்தில் தன் அருளொளி கூர்ந்து பிரகாசிப்பதன்மூலம் அருணசலன் நம்மைச் சேர்ந்தருளும்போது, கூர்வாட்கண்ணியரின் கொடுமைக்குரிய அவகாசமே — இடமே — அற்றுப்போய் விடும்.

இப் பாடலுக்கு மற்றொரு பொருளும் கொள்ளலாம். அதாவது, "உலக வழியில் மனத்தைப் பிடிப்பிக்கும் வலைகளையும் கெடுக்கும் கூரிய வாளையும் போன்ற குணமுடைய தீயோர்களின் மயக்கமாகிய கேட்டில் என் மனம் அகப்படாது கருணைகூர்ந்து என்னைச் சேர்ந்து அருள்வாயாக" என்பதாகும். வலை பல கண்களை யுடையதா யிருப்பதால், இங்கு 'கண்ணி' என்ற சொல்லுக்கு 'வலை' என்ற பொருள் கொள்ளப்படுவதும் தகும். சென்ற பாடலில் அருணசலன் குருவுருவாய் ஒளிர்கிறான் என்று தெரிவித்த ஸ்ரீ பகவான் இப் பாடலின் மூலம் வாயில்லாப் பிராணிகளைப் பிடிக்க வேடர்கள் பயன்படுத்தும் வலைகளைப் போன்ற நயமான மொழிகளாலும் மற்றும் பல தந்திரங்களாலும் ஆன்மீக வழியில் முன்னேற விரும்பும் அன்பர்களை வஞ்சித்து அகப்படுத்தும் போலி குருமார்களின் கொடிய பிடியில் விழும் அபாயங் குறித்து எச்சரிக்கின்றனர். விவரமறியா ஆன்மீக அன்பர்களை இவ்வாறு வஞ்சித்து அகப்படுத்திய பிறகு, அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்தி, பெயரும் புகழும் பெற்று பணம் சம்பாதித்து தங்களுடைய சுயநலத்திற்காக அவர்களை பயன்படுத்துவதால், அப் போலி குருமார்களின் தீய நோக்கங்களும் செயல்களும் சீடர்களுக்குக் கொடுமை செய்யும் கூரிய வாளை ஒத்தனவாயுள்ளன. சிறிய நீர்ப்பாம்பு ஒன்று பெரியதோர் தவளையைக் கௌவிக்கொண்டால், இரண்டுமே திண்டாடிச் சிரமமுறும்; ஏனெனில், தவளையாலும் விடுபட முடியாது; பாம்பாலும் விழுங்கமுடியாது. அது போலவே, போலி குருவின் பிடியில் அகப்பட்டுக்கொண்ட முமுக்ஷுவால் திருவருளின் உதவியின்றி அப் பிடியினின்றும் விடுபட முடியாது; போலி குருவால் தன் சீடனின் அகந்தையை அழித்து அவன் தேடிய பேரின்பத்தை அவனுக்குக் கூட்டுவிக்க இயலாது. இவ்வாறு குருவும் சீடனும் முடிவற்ற இன்னல்களுக்கு ஆளாகின்றனர். ஆகையால் பசுத்தோல்

போர்த்திய புலி போன்ற அப் போலி குருமார்கள் முதலிய தீய லௌகீகர்களின் கொடுமையான பிடியில் அகப்படாத வாறு தன்னை ஆட்கொள்ளுமாறு ஸ்ரீ பகவான் அருணுசல னிடம் பிரார்த்திக்கிருர்.

மேற்கண்ட இரு பொருள்களுள் 'கண்களையுடைய பெண்கள்' என்ற முதல் பொருளே எளிமையான, வெளிப் படையான பொருளாகும்; 'வலைகளைப் போன்ற குணமுடைய தீயோர்' என்ற இரண்டாம் பொருள் அவ்வளவு வெளிப் படையான பொருளாகத் தோன்ருவிடினும், அதுவும் பொருத் தமானதே. ஆயினும் ஸ்ரீ பகவானின் பக்தர்களுள் ஒரு சாரார் ஸ்ரீ பகவான் தம்மைத் தலைவியாகப் பாவித்து இந்த அக்ஷரமணமாலையைப் பாடியுள்ளார் என்றும், மேலும் பெண்கள்மீது வெறுப்பைக் காட்டுவது ஸ்ரீ பகவானின் இயல் பல்ல என்றும் இரு காரணங்களை எடுத்துக் காட்டி முதல் பொருள் பொருத்தமானதல்ல என்று கூறுகின்றனர். இதற்கு மாருக மற்ருெரு சாரார் இரண்டாம் பொருள் வலிந்து கொள்ளப்பட்ட பொருள் என்று கூறி இதனை ஆட்சேபிக் கின்றனர். ஆயினும் கீழ்க்கண்ட இரு நிகழ்ச்சிகளிலிருந்து இந்த இரண்டு பொருள்களும் ஸ்ரீ பகவானுக்கு உடன்பாடே என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

ஒரு நாள் ஸ்ரீ பகவானின் சந்நிதியில் ஒரு பக்தை அழுதுகொண்டு அமர்ந்திருந்தாள். அதனைக் கண்ணுற்ற ஸ்ரீ பகவான் அப் பெண்மணியைக் கருணையோடு நோக்கி அவள் அழுகைக்குக் காரணம் வினவவே, அவள் தலை குனிந்தவாறே "பகவானே! நான் இந்த தேகத்தில் தொடர்ந்து வாழ விரும்பவில்லை" என்று மிகுந்த விரக்தியோடு கூறியதும், ஸ்ரீ பகவான் "இவ்வாறு நீ திடீரென முடிவு செய்வதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார். "பகவானே! மாணிக்கவாசகர், பட்டினத்தார், அருணகிரியார் போன்ற பண்டைய மகான்கள்தாம் பெண்களை இழித்தும் பழித்தும் பாடியிருக்கின்றனர் என்ருலும், பகவானுவது எங்களை அவ்வாறு வெறுக்க மாட்டார் என்று கருதி வந்தேன். ஆனுல் இப்போது பகவானுங்கூட இத்தகைய வெறுப்பைக் காட்டி யுள்ளார் என்பதை அறிந்துகொண்டேன்" என்ருள் அப் பெண்மணி. இதனைக் கேட்டு வியந்த ஸ்ரீ பகவான் "என்ன?

நான் எப்போது பெண்களின்மேல் வெறுப்பைக் காட்டினேன்?'' என்று வினவவும், ''பகவானே! 'கூர்வாட் கண்ணியர் கொடுமை' என்று நீங்கள் பாடவில்லையா?'' என்று மீண்டும் அழுதுகொண்டே கேட்டாள் அப் பெண்மணி. ''ஏன் இச் சொற்கள் உன்னைக் குறிப்பிடுவதாக எடுத்துக் கொள்கிறாய்? இவை தீய பெண்களைத்தான் குறிப்பிடுகின்றன'' என்று சொல்லி அப் பெண்மணியைத் தேற்றி, மேலும் இச் சொற்கள் இவ் விடத்தில் நற்குணம் நிறைந்த பெண்களைக் கெடுக்க முயலும் தீய நடத்தையுடைய ஆண்களுக்கும் பொருந்தும் என்றும் கூறுவாரானார் ஸ்ரீ பகவான்.

அக்ஷரமணமாலைக்கு விருத்தியுரை எழுதத் தொடங்கிய ஸ்ரீ முருகனார் சுவாமிகள் தமது உரையை நாயக-நாயகி பாவத்தை அடிப்படையாகக் கொண்டே எழுதியதால், இப் பாடலுக்கு முதல் அர்த்தத்தை விட இரண்டாவது அர்த்தமே பொருத்தமானது என்று கொண்டு அவ்வாறே எழுதினார். இந்தப் பொருளை மிகவும் வலிந்து மேற்கொண்ட பொருள் என்று கருதிய சில அன்பர்கள் ஸ்ரீ பகவானிடமே தம்முடைய இக் கருத்தை வெளியிட்டு அவரது அபிப்பிராயத்தைக் கேட்டபோது, அவர் ''அப்படியும் பொருள் கொள்ளலாம்'' என்று விடையிறுத்தார்.

இவ் விரு பொருள்களும் ஸ்ரீ பகவானுக்கு உடன்பாடே என்பது மேற்கண்ட இரு நிகழ்ச்சிகளினின்றும் தெளிவாகிறதல்லவா? எனவே, பிரார்த்தனை வடிவிலுள்ள இந் நூலின் எந்த ஒரு குறிப்பிட்ட பாடலுக்கும் ஒரு அன்பர் கொள்ளும் பொருள் மற்றோர் அன்பருக்கு உகந்ததாயில்லாமல் இருக்கலாமாயினும், ஸ்ரீ பகவான் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொருவரும் தத்தமக்கு உகந்த வகையில் பொருளைக் கொள்வதற்குச் சுதந்திரம் கொடுத்துள்ளார் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

பல சமயங்களில் ஸ்ரீ லக்ஷ்மண சர்மாவும் மற்ற அன்பர்களும் ஸ்ரீ பகவானிடம் 'உபதேச உந்தியார்', 'உள்ளது நாற்பது' போன்ற அவரது உபதேச நூல்களுக்கு பொருள் விளக்கம் அளிக்குமாறு கேட்டபோது, ஸ்ரீ பகவான்

சிறிதும் தயக்கமின்றி அவற்றை விரிவாக விளக்கியது மட்டுமன்றி, அவற்றை எவ்விதமெல்லாம் தவருகப் புரிந்து கொள்ளக் கூடாது என்பதையும் எடுத்துக் காட்டியிருக்கிருர். ஆனல் அக்ஷரமணமாலைக்குப் பொருள் விளக்கம் கேட்டபோதெல்லாம் அவர் தட்டிக் கழித்தே வந்தார்; யாரொருவர் கொள்ளும் எந்த ஒரு பொருளையும் மறுத்து அவர் பேசியதில்லை. ஒரு கிராமத்திலிருந்து வந்த சில அன்பர்கள் அக்ஷரமணமாலைக்குப் பொருள் விளக்கம் கேட்டபோது, "இந் நூலைப் பாராயணம் செய்து வந்தாலே போதும்; அதுவே அதன் பொருள்" என்று ஸ்ரீ பகவான் பதிலளித்தார். பல அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ முருகனர் விருத்தியுரையை எழுதத் தொடங்கிய போது பல பாடல்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் கொள்ளத் தக்கனவாயிருந்ததைக் கண்டதும், ஸ்ரீ பகவானை அணுகி அப் பாடல்களுக்குச் சரியான பொருளை விளக்கி யருளுமாறு வேண்டவே, ஸ்ரீ பகவான் "பாடியவன் எவனே! அவன் எங்கு போனனே! அவனைக் கேளுங்கள். என்னைக் கேட்டால் என்ன செய்வது? நானும் உங்களைப் போல் மண்டையை உடைத்துக் கொண்டுதான் ஏதாவது பொருள் கூற வேடுண்ம். அத்தகைய சிரமத்தை நீங்களே பட்டுக்கொண்டு ஏதாவதொரு பொருள் காணுங்கள்" என்று பதிலிறுத்து ஸ்ரீ முருகனருக்குப் பூரண உரையுரிமை அளித்தார்.

'உள்ளது நாற்பது', 'உபதேச உந்தியார்' போன்ற சாஸ்திர நூல்களுக்கு ஒவ்வொரு செய்யுளுக்கும் வரையறுத்த பொருளைக் கூறி மற்ற பொருள்கள் பொருந்தாது என்றும் திட்டவட்டமாகக் கூறலாம். ஆனல் 'அக்ஷரமணமாலை' ஒரு ஸ்தோத்திர நூலாதலின், அதற்கு இவ்வாறு எந்த ஒரு பொருளையும் அறுதியிட்டுக் கூற முடியாது. நமது பாவத்திற்குத் தக்கவாறு ஒரு சமயம் ஒரு பொருளும் பிறிதொரு சமயம் வேருெரு பொருளும் நம் மனத்தில் தோன்றுவது சாத்தியமே. மேலும் ஒரு அன்பருக்கு ஒரு பொருளும் மற்ருெரு அன்பருக்கு வேறு ஒரு பொருளும் மிகப் பொருத்தமானதாய்த் தோன்றலாம். ஸ்ரீ பகவானே இப் பாடல்களுக்குப் பொருள் வழங்கியிருப்பாரேயானல், அது இச் செய்யுள்களின் பொருளை ஓர் எல்லைக்குட்படுத்தி வரையறுத்து, அதனல் அன்பர்கள் தங்கள் பாவத்திற்குத்

தக்கவாறு வேறு பொருள் எதனையும் கொள்வதற்குத் தடையாக இருந்திருக்கும். எனவே மனமுயற்சி அற்பமுமின்றி ஒரு பரவச உணர்வில் உள்ளத்தின் அடித் தளத்தினின்றும் ஆழங்காண முடியாத பொருளோடும் அற்புத அழகோடும் ஊற்றெடுத்துப் பெருகி வெளிவந்த இந்த அரிய ஸ்தோத்திர ரத்தினங்களுக்கு இதுதான் பொருள் என்று வரையறுத்துக் கூற ஸ்ரீ பகவான் இடமளிக்கவே இல்லை.

தலைவி கூற்றாக அமைந்துள்ள இவ் வக்ஷரமணமாலையின் பாவத்திற்கு முதல் பொருள் பொருந்தாது என்று சில அன்பர்களால் பொதுவாக எழுப்பப்படும் ஆட்சேபத்திற்கு டாக்டர் சீனிவாசராவ் அவர்களால் தக்க விடையளிக்கப்பட்டிருப்பதை ஸ்ரீ முருகனாரின் விருத்தியுரையின் அனுபந்தத்தில் காணலாம். ஸ்ரீ முருகனார் எடுத்து எழுதியுள்ள இவ் விசேஷவுரையின் சாராம்சமாவது: ஸ்ரீ அருணாசலன் ஒருவனே உண்மையான சத்புருஷன் என்பதும், அதனால் ஜீவர்கள் யாவரும் அவனை அணைந்தே பேரின்பம் அடையக்கூடிய ஸ்திரீகளாகவே கருதத் தக்கவர்கள் என்பதும் உண்மையாயினும், பிரமாதத்தினால் இவ் வுண்மையை மறந்தவர்களாய் தேகபாவத்தின் காரணமாய் நம்மை ஆண் மக்களாகக் கருதிக்கொள்கிறோம். அதனால் இப் பாடலில் தலைவனான அருணாசலனிடம் தலைவியான ஸ்ரீ பகவான் ''என்னுடைய பெண்மையை மறந்து ஆண் தேகத்தை 'நான்' என பாவித்து மற்ற பெண்களின்பால் மயங்கும் கொடிய மோகத்தில் நான் அகப்படாதவாறு கருணை கூர்ந்து என்னைக் கலந்தருள்வாயாக'' என்று பிரார்த்திக்கின்றார்.

மூன்றாவதாக ஒரு புதிய பொருளை ஸ்ரீ செங்கல்வராய பிள்ளை அவர்கள் கூறியுள்ளதை ஸ்ரீ முருகனார் எழுதி தமது விருத்தியுரையின் அனுபந்தத்தில் சேர்த்துள்ளதையும் அன்பர்கள் காணலாம். அதன் சாராம்சமாவது: தலைவனிடமிருந்து பிரிந்து வாழ்கின்ற தலைவி தாளாத தாபத்தால் வாடுகிறாள். இதனை அறிந்து இதமான வார்த்தைகளால் அவளுக்கு ஆறுதல் சொல்வதை விடுத்து வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது போன்று பொல்லாங்கு கூறி அவள் வேதனையை அதிகரிப்பது சில பெண்களின் வழக்கம்.

எனவே தலைவி "பிற பெண்களின் சுடு சொற்கள் விளைவிக்கும் கொடுமைக்கு நான் ஆளாகாதவாறு கருணை கூர்ந்து வந்து என்னைச் சேர்ந்தருள்வாயாக" என்று தன் தலைவனை ஸ்ரீ அருணாசலனிடம் வேண்டுகிறாள். கண்களுக்கு அழகு சேர்க்கும் ஆபரணம் பிறர் படும் துயரைக் கண்டு விடும் கண்ணீர் முத்துக்களே யாகும். பிறர் துயரைக் கண்டு களித்து பொல்லாங்கு பேசும் பெண்கள் இத்தகைய கண்ணோட்டமற்றவராதலின், அவர்கள் 'கூர்வாட் கண்ணியர்' என்று கூறப்பட்டனர்.

**21. கெஞ்சியும் வஞ்சியாய்க் கொஞ்சமு மிரங்கிலை**
**யஞ்சலென் றேயரு ளருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கெஞ்சியும் வஞ்சியாய் கொஞ்சமும் இரங்கிலை; 'அஞ்சல்' என்றே அருள்.

**பொ-ரை:** அருணாசலா! நான் உன்னை எவ்வளவோ கெஞ்சிப் பிரார்த்தித்தும், நீ ஒரு வஞ்சகனைப் போல சிறிதும் இரங்காமல் இருக்கின்றாயே! இனியாவது எனக்கு 'அஞ்சாதே' என்று அபயம் கொடுத்தருள்க.

**வி-ரை:** 'வஞ்சியாய்' என்ற சொல்லுக்கு மூன்று விதமாகப் பொருள் கொள்ளலாம். 'வஞ்சி' என்ற சொல்லுக்கு 'வஞ்சகன்' என்ற பொருள் கொண்டால், "வஞ்சியாய்க் கொஞ்சமும் இரங்கிலை" என்ற சொற்றொடருக்கு 'நீ ஒரு வஞ்சகனைப் போல சிறிதளவும் இரக்கப்படவில்லையே' என்பது பொருளாகும். 'வஞ்சியாய்' என்ற சொல்லை விளிச் சொல்லாகக் கொண்டால், அதற்கு 'வஞ்சியாதவனே' என்பது பொருளாகும். 'வஞ்சி' என்ற சொல்லுக்கு 'பெண்' அல்லது 'வஞ்சிக் கொடி' என்றும் பொருளுண்டு; அதன்படி "வஞ்சியாய்க் கெஞ்சியும்" என்ற சொற்களுக்கு 'நான் வஞ்சிக்கொடி போன்ற ஒரு பெண்ணாக நின்று கெஞ்சிக் கேட்டும்' என்பது பொருளாகும். அதாவது, "வஞ்சிக்காதவனாகிய அருணாசலனே! நான் ஒரு பெண்ணாக நின்று உன்னைக் கெஞ்சிப் பிரார்த்திக்கின்றேன். பெண்ணென்றால் பேயும் இரங்குமல்லவா? ஆனால் நீயோ ஒரு வஞ்சகன் போல் என்பால் கொஞ்சமும் இரங்காமல் இருக்கின்றாயே! நீ உண்மையில் வஞ்சிக்காதவனாய் இருக்க, ஏன்

இவ்வாறு வஞ்சகன் போல் இருக்கின்றாய்?'' என்று ஸ்ரீ பகவான் அருணாசலனைக் குற்றஞ்சாட்டுகின்றார்.

அருணாசலன்பால் கவர்ச்சியும் அவனருளை வேண்டும் விருப்பமும் அவனாலன்றோ தூண்டப்பட்டது? இவ்வாறு ஸ்ரீ பகவானின் உள்ளத்தில் வேட்கையைத் தூண்டிவிட்ட பிறகு, அருணாசலன் இப்போது பாராமுகமாயிருந்து ஒரு வஞ்சகனைப் போல் அவரது பிரார்த்தனைக்குச் செவிசாய்க் காது அவரை ஏமாற்றலாமா? அதனால்தான் ஸ்ரீ பகவான் பின்வரும் ஒரு பாடலில் ''நேசமில் எனக்கு உன் ஆசையைக் காட்டி நீ மோசம் செயாதருள் அருணாசலா'' எனப் பிரார்த்திக்கின்றார். அருணாசலத்தின்மீது ஆருக் காதலுற்று, உள்ளிருந்து எழுந்து தன் மனத்தை ஆன்ம சொரூபமாகிய அருணாசலனினின்றும் பெயர்த்து அன்னியப் பொருள்களின்பால் இழுத்துச் செல்லும் கொடிய விஷய வாசனைகளின் வேகத்தைக் கண்டு அஞ்சி, ஸ்ரீ பகவான் அருணாசலன் தன்னைக் காந்தம் இரும்பு போல் கவர்ந் திழுத்து, அருள் பாலித்து, தன் கீழ்மையைப் பாழ்செய்து, விஷயவாசனைகளை வேரோடு களைந்து, சத்வாசனையைஓங்கச் செய்து, தன்னை அவனுக்கே முழுதும் ஆளாக்கிக்கொண்டு, வெளிவிஷயங்களின்மேல் ஆசையாகிய கொடுமையில் தான் அகப்படாது தன்னைச் சேர்ந்து காப்பாற்றுமாறு அவனைக் கெஞ்சிப் பிரார்த்தித்துக்கொள்கின்றனர். இவ்வாறு கெஞ்சிப் பிரார்த்தித்தும் கிருபைக் கடலாகிய அருணாசலன் சிறிதும் இரங்கி தனக்கு உதவாதது கண்டு, ஸ்ரீ பகவான் இப் பாடலில் தலைவியாகிய தன்னுள்அவனே மூட்டுவித்த காதலை ஏற்காது தன்னை ஏமாற்றும் ஒரு வஞ்சகனைப் போல் நடந்து கொள்வதாக அவனைக் குற்றஞ்சாட்டி, ''உள்ளிருந்து எழும் பும் வாசனைகளின் கொடிய வேகத்தைக் கண்டு அஞ்சாதே; அவ் வாசனைகளை யெல்லாம் அவற்றின் வேராகிய அகந்தை யோடு அழித்து உன்னைக் காக்கவே நான் உள்ளேன்; கைவிடேன்'' என்று கூறித் தனக்கு அபயம் அளித்தருளு மாறு இறைஞ்சுகின்றனர்.

அருணாசலன் உண்மையில் கேளாதளிக்கும் கிருபைக் கடலே யாயினும், அன்பர்களின் உருக்கமான இறைஞ்சு தல்களை அசட்டை செய்பவனாய் வஞ்சகனைப் போல்

நடந்துகொள்வது ஏன்? வெளிப்பார்வைக்கு அருணாசலன் இவ்வாறு பாராமுகமாய் இருப்பதாலேயே பக்தனின் உள்ளத்தில் அருள்தாகம் மேலும் மேலும் ஓங்கி எழுமாறு செய்கிறான். பக்தன் இவ்வாறு அருள்தாகத்தால் ஏங்கி ஏங்கி அவனது உள்ளம் நெக்கு நெக்குருகி மேலும் மேலும் பரிசுத்தமடைகிறது. உள்ளம் உருகி ஏக்கம் மிகுவதால் பெருகும் கண்ணீரினால் விஷயவாசனைகள் வடிவில் மனத்தில் மண்டிக் கிடக்கும் மாசுகள் அடித்துச் செல்லப்பட்டு, அருணாசலத்தின் இருப்பில் கரைந்து உருவழியக் கொள்ளும் காதலாகிய சத்வாசனை என்னும் கனல் கொழுந்துவிட்டு ஓங்கவே, பக்தன் முயற்சியின்றி இயல்பாகவே ஆன்மாவில் கரைந்து அழியப் பக்குவம் பெறுகிறான்.

"அழுதழுது நீள வருட்பதத்தை யுள்ளித்
தொழுதெழுநெஞ் சங்கரைந்து தூய்தாய்ப் —
[பழுதறுஞா
னன்ம விசார மடைந்துசொரூ பானுபவந்
தான்மருவும் மிக்கெளிதிற் றான்."

— ஸ்ரீ ரமண ஞான போதம் - 7.1286

அருணாசலன் இவ்வாறு தன்னைக் கருணையற்றவன் போல் காட்டிக் கொள்ளும் செயலானது உண்மையில் பக்தனின் மனத்தைத் தூய்மைப்படுத்தி, நீரில் கரையும் பனிக்கட்டிபோல அன்புருவாகிய தன்னில் அன்பாய்க் கரையுமாறு பக்குவப்படுத்தும் மறக்கருணையே யாகும். அதனால் தான் அருணாசலனிடம் பூரணமாகச் சரணுற்று அவனில் கரைந்து உருவழியும் பரிபக்குவம் பக்தன் அடையும்வரை, அருணாசலன் அப் பக்தனின் கோரிக்கைக்கு இரங்கி அருள் செய்யாத வஞ்சகனைப் போல வெளிப்பார்வைக்கு இருந்து வருவான். இதே உண்மையை ஸ்ரீ பகவான் 77வது பாடலில் "மானங் கொண்டுறுபவர் மானத்தை அழித்து அபிமான மில்லாது ஒளிர் அருணாசலா" என்று வலியுறுத்துகின்றனர். தேகாபிமான அழிவிற்காகத் தன்னை நாடிவரும் பக்தர்களிடம் அருணாசலன் அபிமானமில்லாதவன் போல் வெளிமுகத்தில் தோன்றினாலும், உண்மையில் அவன் அவ்வபிமானம் அழியுமாறு அவர்களது உள்ளத்தில் தவறாது செயல்படுகிறான்.

**22. கேளா தளிக்குமுன் கேடில் புகழைக்**
**கேடுசெய் யாதரு ளருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கேளாது அளிக்கும் உன் கேடு இல் புகழைக் கேடு செய்யாது அருள்.

**பொ-ரை:** அருணாசலா! உன் அடியார்கள் உன்னிடம் கேட்பதற்கு முன்பே அவர்களது தேவையை அறிந்து கொடுத்தருளி வருவதால் இதுவரை நீ பெற்றிருக்கும் அழிவற்ற பெரும் புகழை (இன்று நான் கெஞ்சிக் கேட்டுங்கூட கொடாதிருப்பதால்) நீ வீணே அழித்துக் கொள்ளாமல் எனக்கு அருள் புரிவாயாக.

**வி-ரை:** இறைவனை அருணாசலன் என்றும் எங்கும் உள்ளவனும் கருணைக் கடலானவனு மாகையால், அவன் தன் பக்தர்களின் முக்காலத் தேவைகளையும் அறிந்தவனாய், அவைகளை அவர்கள் தன்பால் கேட்டு யாசிக்கும் முன்பே கொடுத்தருளச் செய்பவனாக இருக்கிறான். ஸ்ரீ பகவானது வாழ்க்கையில் அவர் கேளாமலேயே எத்தனையோ நிகழ்ச்சிகள் அருணாசலனின் அருளால் நடந்தன. 'அருணாசலம்' என்பது திருவண்ணாமலை என்று உறவினர் ஒருவர் மூலம் தெரிந்ததும், மரண பீதி வந்ததும், தந்தையின் உத்தரவு என்றுணரும்படி கூப்பிடப்பட்டதும், திருவண்ணாமலைக்கு யாரும் அறியாமல் புறப்பட எத்தனித்தவுடன் பணம் ரூபாய் ஐந்து கொடுக்கப் பெற்றதும், வழியில் மௌல்வி ஒருவர் வழி காட்டியதும், திருவண்ணாமலை அடைந்து அருணாசலேசுவரர் ஆலயத்துள் சென்றபோது மூலஸ்தானத்தின் கதவுகள் திறந்திருந்ததும், மொட்டையடிக்க யாரோ ஒருவர் அழைத்ததும், சன்னியாச தீக்ஷை தர விரும்பியவருக்கு "யோஜனத்ரய மாத்ரே..." என்ற பதில் பாட்டு* அளித்ததும் ஆகிய நிகழ்ச்சிகள் இதற்கு சில உதாரணங்கள் ஆகும். இது போலவே, தமக்கு என்ன தேவை என்று தாம் எண்ண வாயிலாக அறியுமுன்பே அருணாசலன் அதனை அறிபவனும் அளிப்பவனும் ஆவன்

---

*இவ் வடமொழிப் பாட்டின் தமிழ் மொழிபெயர்ப்பைப் பக்கம் 15ல் காண்க.

என்பதே மெய்யடியவர்கள் யாவரும் தம் வாழ்வில் அனுபவமாகக் கண்டறிந்த உண்மையாகும். எனவே அவ் வடியவர்கள் அனைவரும் ஒரே விதமாக 'அருணாசலன் கேளாமுன் அளிக்கும் கிருபையன்' என்று துதித்துப் புகழ்ந்துள்ளனர். இதே காரணத்தால்தான் 'ஸ்ரீ அருணாசல மகாத்மியத்'தில் (பூர்வ பாகம், 9வது அத்தியாயம், 6வது சுலோகத்தில்) "ஆஹூயைச்வர்யதாதா" (அழைத்து ஐசுவரியம் அளிப்போன்) என்பது அருணாசலேசனுக்கு வழங்கப்படும் பெயர்களுள் ஒன்றாகச் சொல்லப்பட்டுள்ளது.

இவ்விதம் எண்ணற்ற பக்தர்களால் போற்றப் பெற்ற பெரும் புகழ் இதுவரை யாரிடத்தும் கேடாக்கப்படவில்லை. இவ்வாறு கேடுறாத பெரும் புகழ் படைத்த அருணாசலேசன் இன்று ஸ்ரீ ரமண பகவான் அவன்பால் "என் கீழ்மையைப் பாழ்செய்" என்றும், "குற்றமுற்றறுத்து எனைக் குணமாய்ப் பணித்தாள்" என்றும், "கூர்வாட் கண்ணியர் கொடுமையிற் படாதருள் கூர்ந்து எனைச் சேர்ந்தருள்" என்றும், "அஞ்சல் என்றே யருள்" என்றும் இன்னும் பலவிதமாகவும் கெஞ்சிக் கேட்ட பின்னும் இரங்கி அருளாதிருப்பானாயின், இத்தனை காலமாய் அன்பர்கள்பால் பெற்ற புகழை வீணே அழித்துக் கொண்டவனாவனன்றோ? அவனது இயல்பின்படி ஸ்ரீ ரமண பிரான் கேட்குமுன்பே அருள வேண்டிய பெருமான் அவர் கேட்டும் கொடாதிருப்பானாயின், அது தன் புகழைத் தானே கேடு செய்ததே யாகும். ஆதலின் அவ்விதம் அவ் வழியாப் புகழுக்கு அழிவு நேராதபடி தன்பாலும் இரங்கி அருள் செய்யுமாறு ஸ்ரீ பகவான் பிரார்த்திக்கின்றார்.

"ஆருக்கா எனை ஆண்டனை? உனை ஏன் நினைப்பித்தாய்? அகற்றிடில் அகிலம் பழித்திடும்; இப் பழி தப்புக" என்று ஸ்ரீ பகவான் இதற்கு முன் அருணாசலனிடம் பிரார்த்தித்ததும் இப் பொருளையே வலியுறுத்துகிறது. அருணாசலன் தன் அவ்வியாஜ கருணையினால் ஸ்ரீ பகவானின் சிந்தையுள் நின்று அவரது உள்ளத்தை ஆட்கொண்டு, அதனால் தன்னையே நினைந்து தன் அருளை நாடி நிற்குமாறு செய்துள்ளான். இப்போது ஒரு வஞ்சகனைப் போல் இரக்கமின்றி ஸ்ரீ பகவானுக்கு அருளின் பூரணத்துவமான

ஆன்ம சித்தியை அளிக்காது கைவிடுவானாயின், உலகம் அவனைப் பழிக்கும். இப் பழியினின்று தப்புவதற்கும் தன் கேடில் புகழைக் காத்துக் கொள்வதற்கும் அருணாசலன் இப்போதே தன் சொரூப நிலையை ஸ்ரீ பகவானுக்கு வழங்கியாக வேண்டும்.

தனது அற்ப ஜீவ வலிமையினாலல்லாது சர்வ சக்தி வாய்ந்த அருணாசலனின் அருளாலேயே ஸ்ரீ பகவான் அவனை நினைந்து அவனருளை வேண்டி நிற்கின்றாராதலால், வேண்டுதலாகிய அச் செயலும் அவனது அருட் செயலே யன்றி தன்னுடைய செயலாகுமோ?

"கேளா தளிக்கும் கிருபைக் கிழுக்கென்னால்
மூளாத வாறு முடித்தருள்க — கேளாநின்
றிவ்வா றெனைப்பாட்டு வித்தவனும் நீயதனால்
எவ்வாறு நான்கேட்ட தாம்?"

— ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் - 998

ஆகையால் அருணாசலனே ஸ்ரீ பகவானை வேண்டிப் பாடுமாறு செய்ததால், அவ்வாறு வேண்டிய பிறகே இப்போது அருள் வழங்கப்பட்டாலும், தன் கேளாது அளிக்கும் கிருபைக்கு இன்றும் என்றும் இழுக்கில்லை.

**23. கையினிற் கனியுன் மெய்ரசங் கொண்டுவ
கைவெறி கொளவரு ளருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கையினில் கனி உன் மெய் ரசம் கொண்டு உவகை வெறி கொள அருள்.

**பொ-ரை:** அருணாசலா! என் கையினிற் கிடைத்த (திராக்ஷைக்) கனியான உன் நிஜ சொரூபானந்த ரச மதுவை நான் அருந்தி, அதனால் பேரின்ப வெறி கொண்டு கிடக்க எனக்கு அருள்வாய்.

**வி-ரை:** ஸ்ரீ ரமண பகவான் தம் ஊர், வீடு, உற்றார், படிப்பு, உடைமை யாவும் துறந்து அருணாசலமே கதியாய் வந்து சேர்ந்த பின் ஸ்ரீ அருணாசலன் என்னும் கடவுட் கனி அவர் கையிற் கிடைத்துவிட்ட பொருளே யாயிற் றன்றோ? அதில் சிறிதும் சந்தேகம் இல்லை. அவ்வாறு

தனக்குக் கிடைத்த அருணாசலக் கனியைப் பிழிந்து அதனுள்ளிருந்து பெருகும் மெய்யான பேரின்ப ரசத்தைப் பருக விரும்புகிறார் ஸ்ரீ பகவான். அந்தக் கனியின் ரசம் எப்படிப்பட்ட தென்றால், 'மெய் ரசம்' என்றார். 'மெய்' என்பது சத்தாக உள்ளது; சத்துப் பொருளான அருணா சலனின் பரமாத்ம சொரூபானுபவமே மெய் ரசமாகும். அவ் வகண்ட பரமானந்த நிஜ சொரூபானந்தத்தை அருந்தி அதனால் பேரின்ப வெறி கொண்டு கிடக்க அருணாசலன் அருள் செய்ய வேண்டுமென்று ஸ்ரீ பகவான் பிரார்த்திக் கின்றார்.

'கையினில் கனி' என்பது அடையப்பட்டதா தலாலும் தெளிவுடைத்தாதலாலும் பிரசித்தமாக நெல்லிக் கனியையே குறிப்பதாயினும், மதுவாகி உண்டால் உவகை வெறி அளிக்க வல்லது துவர்ப்பான நெல்லிக் கனியினும் இனிமையான திராக்ஷையே யாதலின், இங்கு கையில் திராக்ஷைக் கனி எனக் கொள்வது மிகவும் பொருத்தமாகும். ஆயினும் நெல்லிக் கனி அருமந்த கற்பம் எனப்படுவதால், அடையப்பட்ட அருணாசலனின் அருள் கையிலடைந்த ஆமலகக் கனி என்பதும் பொருந்துவதே யாம். மேலும் அருணாசலன் எப்போதும் நம் உள்ளத்தில் 'நான் இருக்கிறேன்' என்ற வடிவில் தெள்ளத் தெளிவாக விளங்குவது யாவருடைய அனுபவமாதலால், அவ் விளக்கம் உள்ளங்கை நெல்லிக்கனி போன்ற பிரத்தியக்ஷ உண்மை யாகும்.

கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் வீணாகக்கூடாது என்பதால், அருணாசலேசனே தன்னை இங்கு வரவழைத்து அருளையும் வழங்கியுள்ளானாதலின், அவ் வருள் ரசத்தை அருந்திப் பேரின்ப வெறி கொள்ளுமாறு அவனே செய்வித் தருள வேண்டும் என இறைஞ்சுகிறார் ஸ்ரீ பகவான். ஏனெனில், "மை இலங்கும் நற்கண்ணி பங்கனே! வந்து எனைப் பணிகொண்ட பின், மழக் கை இலங்கு பொற் கிண்ணம் என்றலால் அரியை யென்று உனைக் கருது கின்றிலேன்" (திருவாசகம், திருச்சதகம் – 92) என்றவாறு தன் கையில் கிடைத்த பொற்கிண்ணத்தின் அருமை அறியாத மழலை போன்றும், "தற்பர! நாளும் தாளினில்

தங்கித் தண்டலர் மண்டுக மானேன்" என்றவாறு தாமரை மலரது தண்டின் அடியில் தங்கி வாழும் தவளை போன்றும், பொற்கிண்ணத்தின் அருமை பெருமையை அறிந்து அதனைப் பயன்படுத்தி இன்பம் அடையாமலும், தாமரையின் மணத்தை நுகர்ந்தும் தேனை அருந்தியும் மகிழாமலும், பொற்கிண்ணமும் தாமரையின் நறுந்தேனும் பயனின்றி வீணுவது போன்று தனக்கு வலிய கிட்டிய அருள் வீணுகத் தகுவதோ? "சிற்பத நற்றேன் உண் மலரளியாச் செய்திடில் உய்தியுண்டு" என்றபடி அருணசலனின் அருளமுதாகிய ரசத்தை உண்டு உய்வடைய வல்லவனுக அருளை வழங்கிய அவனே அதனையும் செய்ய வேண்டுமென வேண்டுகின்றனர்.

"உன் மெய்ரசம் கொண்டு" என்பது 'அதனை உட்கொண்டு' — அதாவது, 'உன் நிஜ சொரூபத்தோடு அனன்னியமாக ரமித்துக் கொண்டு' — என்று பொருள் படும். "உவகை வெறி கொள அருள்" என்பது 'ஆனந்த லஹரி அடைய அருள்வாய்' என்று பொருள்படும். இவ் வானந்த லஹரியையே தாயுமானவர்

"அதுவென்ருல் எதுவெனவொன் றடுக்குஞ் சங்கை;
ஆதலினுல் அதுவெனலும் அறவே விட்டு,
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக ஞதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தார் என்றும்,
பதியிந்த நிலையெனவும் என்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தால் பரமா னந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூர்; இந்தக்
கதியன்றி யுறங்கேன்;மேற் கருமம் பாரேன்"

(ஆகாரபுவனம் — சிதம்பர ரகசியம் - 23) என்றும், மணிவாசகரும்

"எனைநானென்ப தறியேன்;பகல் இரவாவதும் அறியேன்;
மனவாசகம் கடந்தான்எனை மத்தோன்மத்த ஞக்கிச்
சினமால்விடை உடையான்மன்னு திருப்பெருந்துறை [உறையும்
பனவன்எனைச் செய்தபடி(று) அறியேன்பரஞ் சுடரே."

(உயிருண்ணிப் பத்து - 3) என்றும் வருணித்துள்ளனர்.

'நான் இருக்கிறேன்' என்று விளங்கிக் கொண்டிருக்கும் ஆன்ம சொரூபமாகிய அருணாசலன் என்றுமே கையிற் கனியாகக் கிடைக்கப் பெற்றிருந்தும் நாம் பிரமாதத்திற்கு இடந் தந்து அவனைப் பிரிவுற்றதாலே 'நீ' என்றும் 'நான்' என்றும், 'அது' வென்றும் 'இது' வென்றும், பகலென்றும் இரவென்றும், நினைப்பென்றும் மறப்பென்றும் விளைந்த பேதங்கள் யாவையும் அவன் நம் உள்ளத்தில் இடைவிடாமல் ஸ்புரிப்பதால் அழித்து, நம்மை 'நீ-நான்' அறப் புல்லி நிதங்களிமயமாச் செய்து தன்மயானந்தக் கடலில் அழுத்தி இருத்தி வைத்தலே, அவ் வான்மக் கனி வீணாகாதவண்ணம் நாம் அதன் மெய் ரசத்தை மாந்தி மகிழ்வுறுமாறு அவன் அருளுவதாகும்.

**24. கொடியிட் டடியரைக் கொல்லுனைக் கட்டிக்**
**கொண்டெங்ஙன் வாழ்வே னருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கொடி இட்டு அடியரைக் கொல் உனைக் கட்டிக்கொண்டு, எங்ஙன் வாழ்வேன்?

**பொ-ரை:** அருணாசலா! அதற்கென்றே கொடி கட்டினாற் போல (சபதம் செய்திருப்பதைப் போல) முனைந்து நின்று உன் அடியார்களைக் கொல்லாது கொல்லுகின்ற (ஜீவபோத அகந்தையை அழிக்கின்ற) உன்னை நானே இஷ்டப்பட்டு வந்து கட்டிக்கொண்டேனே! நான் (என்ற ஜீவபோதம்) இனி எப்படி உயிர் பெற்றிருக்க முடியும்? (முடியாது என்றவாறு.)

**வி-ரை:** அருணாசலேசன் தனக்கு ஆளான அடியவர்களை அவர்களுக்குத் தனியாக ஒரு ஜீவத்துவ இருப்பென்பது இல்லாதபடி அழித்து தன்னில் தன்மயமாகவே இருத்திவிடுவதால், பிறகு அவ் வடியர் யாரும் அருணாசலனுக்கு அன்னியமாக ஓர் இருப்புக் கொள்ள முடியாது போகின்றது. இவ்வாறு பல ஜன்மங்களாக வாழ்ந்திருந்து ஜீவத்துவ வாழ்வு அருணாசலனின் சம்பந்தத்தால் அழிக்கப்பட்டு சிவத்துவமாகி விடுவதால், இதனைக் 'கொல்லுதல்' என்று ஸ்ரீ பகவான் குறிப்பிட்டனர். இக் கொல்லுதல் 'கொல்லாமற் கொல்லல்' — அதாவது, உடலைக் கொல்லாமல்

உயிரைக் கொல்லல் — என்பதாகும். இவ்வாறு கொல்லுதல் அருணாசலனின் இயல்பு. அதனால்தான் ஸ்ரீ பகவான் "அருணாசலம் என அகமே நினைப்பவர் அகத்தை வேரறுப் பாய்" என்றும், "தெய்வம் என்று உன்னைச் சாரவே என்னைச் சேர ஒழித்தாய்" என்றும், "லட்சியம் வைத்து அருளஸ்திரம் விட்டு எனைப் பட்சித்தாய் பிராணனோடு" என்றும், "சிந்தித்து அருட்பட சிலந்தி போல் கட்டிச் சிறை யிட்டு உண்டனை" என்றும், "... அவ் வின்னுயிர் பலி கொளும் .. இவ் வுயிர்க் கொலி அருணமாகிரியே" என்றும் பாடியுள்ளார். இவ்வாறு தன்னை நாடி வரும் அடியாரின் அகந்தையைக் கொல்லுவதே அருணாசலனின் இயல்பாகை யால், அவன் 'என்னையே நாடி வருவோரைக் கொல்வேன் நான்' என்பதைப் பறைசாற்றி அறிவிப்பதற்காகவே தன் சபதக் கொடியை ஏற்றி வைத்துள்ளான் என்று ஸ்ரீ பகவான் இப் பாடலில் குறிப்பிட்டுள்ளார். அத்தகையோனை ஸ்ரீ பகவான் தானே தேடி வந்து அடைந்ததால் — தானே வலிய அப் பெருமானை மனத்தால் கட்டிக்கொண்டதால் — தன் தனியிருப்பு என்னும் ஜீவ வாழ்வு சிவமயமாகாமல் வேறு எப்படி இனி தப்பிப் பிழைக்க முடியும் என்று நிந்தாஸ்துதி வடிவில் தன் ஜீவபர ஐக்கியத்தின் நிச்சயத் தைத் தெளிவுறுத்துகின்றனர்.

"அருணாசலன் கருணைக் கடல் என்றும், அவன் நம்மைக் காத்து கடைத்தேற்றுவான் என்றும் நம்பியன்றோ அவனிடம் வந்தோம்? ஆனால் அவன் தன்னை நாடி வருவோ ரைக் கொல்லுபவன் என்றால், அவனை வந்தடைந்ததால் நாம் அடையப்போவது யாது?" என்று பக்தர்கள் அச்சங் கொள்ளத் தேவையில்லை. உண்மை யாதெனின், அவன் அழிக்கப் போவது நம் அகந்தையையேதான். அகந்தையை அழித்தலே ஆன்மாவை அளித்தலாம். பிரம்ம ஹத்தியினால் ஜீவனாகப் பிறந்தோம்; ஜீவஹத்தியினால் பிரம்மமாக உயிர்த் தெழுவோம்.

'கொடி' என்ற பதத்திற்கு துவஜம் என்றும், பின்னிக் கொள்ளும் தாவரமான கொடி என்றும் இரு வகையாகப் பொருள் கொள்ளலா மாகையால், "வலை போலக் கொடி களாற் பின்னி சிக்க வைத்து உன் அடியவர்களைத் தப்பி

யோட முடியாதபடி பிடித்துக் கொல்ல நிற்கின்ற உன்னை நானே வலுவில் வந்து இறுகப் பிடித்துக் கொண்டபின், இனி எவ்வாறு உயிர் தப்ப முடியும்?'' என்றவாறு மற்றொரு பொருளும் ஏற்படுகின்றது. கொலையையே தொழிலாகக் கொண்ட வேடனின் குடிலுள் தானே விரைந்து புகுந்த புரு எவ்வாறு உயிர் தப்ப முடியும்?

தலைவியாகிய பக்தை தலைவனை அருணாசலனை நோக்கி, "அந்தோ! கொலைகாரனாகிய உன்னை மணந்து வாழ்க்கைப்பட்டவளான பேதையேன் எப்படி மற்ற பெண்களைப் போல சுகமாய் வாழமுடியும்?'' என்று விளையாட்டாக அங்கலாய்த்து மகிழ்கிறாள் என்பது இப் பாடலில் அடங்கியுள்ள அகத்திணைப் பொருளாகும்.

எத்தகையோரை அருணாசலன் கொல்கின்றான்? தன்னைத் தவிர வேறு கருதாத உத்தம ஏக பக்தியுள்ளவர்களையே! அத்தகைய ஏக பக்தி உள்ளவர்களே இப் பாடலில் குறிப்பிட்டுள்ள அடியராவர்.

> "அன்னியம் எண்ணாத அன்பினால் என்னைஎவர்
> உன்னிடுவார் அன்னவர்க்கே உத்தமனே—என்னை
> வாறாக மெய்யாய் அறியத் தரிசிக்கப் [இவ்
> பேறாக்கத் தக்கோன்யான் பின்''

என்று 'பகவத்கீதாசாரத்'தின் 16வது பாடலில் கூறியபடி, தன்னைத் தவிர அன்னிய தெய்வத்தையோ அன்னியப் பொருளையோ ஆகிய எதையுமே எண்ணாத உத்தம ஏக பக்தியுள்ள அடியார்களையே அருணாசலன் கொல்லாமல் கொல்லுவதற்குக் குறிவைக்கின்றான்.

**25. கோபமில் குணத்தோய் குறியா யெனைக்கொளக்
குறையென் செய்தே னருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கோபம் இல் குணத்தோய்! குறியாய் எனைக் கொளக் குறை என் செய்தேன்?

**பொ-ரை:** அருணாசலா! நீதான் கோபமற்ற சாந்த குண முடையவனாயிற்றே! எனினும் (பல கோடி உலக மக்களுள்) என் ஒருவனையே அகந்தை யழிக்கும் உனது

அஸ்திரத்துக்கு இலக்காக்கினாயே (குறிவைத்தாயே)! இவ்வாறு என்னைத் தேர்ந்து குறிவைக்க நான் உனக்கு என்ன குறையை (தவத்தை)ச் செய்தேன்? (சொல்க)

வி-ரை: ஆசை தடைபடும்போதுதான் கோபம் எழுவதாலும், அன்பு சொரூபமான அருணாசலன் நிராசை இயல்பினன் ஆனதாலும், அவன் என்றும் கோபமேயற்ற சாந்த சுபாவனவன். "இவ்வாறு நீ இயல்பாகவே கோபமற்ற குணத்தோனாயினும், என்னை உனது கோபத்திற்கு இலக்காக்கிக் கொல்லத் துணிந்தனையே" என்கிறார் ஸ்ரீ பகவான். யாரொருவரிடமும் எதன் பொருட்டு அருணாசலன் இவ்வாறு கோபம் கொள்கிறான்? "குறியாய் எனைக் கொள" என்ற சொற்றொடரில் உள்ள 'எனை' என்னும் சொல் நமது உண்மை சொரூபத்தை மறைத்து அதனால் நமது பூரணானந்த நிலையை அழித்து எழுந்த போலித் தன்மையுணர்வாகிய அகந்தையைக் குறிப்பதாகும். நம்முடைய உண்மையான ஆனந்தத்தின் எதிரியான இந்த அகந்தையையே தனது கோபத்திற்கு இலக்காக்கிக் கொண்டு அதனைக் கொன்றழிக்கக் குறிவைக்கின்றான் அருணாசலன். எனவே இந்த அகந்தையின்பால் அவன் கொள்ளும் கோபமானது அவன் நம்மிடம் காட்டும் தனிப்பெருங்கருணையேயாகும்.

"உனது இந்த தனிப்பெருங்கருணைக்குப் பாத்திரமாவதற்கு நான் என்ன 'குறை' செய்தேன்?" என வினவுகின்றார் ஸ்ரீ பகவான். இங்கு 'குறை' என்று சொல்லப்பட்டது தவக்குறையை — விட்டகுறை-தொட்டகுறையை — குறிப்பதாகக் கொள்ளலாம். அதாவது, ஆத்மசாதனை பற்றி யாதொன்றும் அறியாத பதினாறு வயது பள்ளிச்சிறுவனாக இருந்தபோதே தன் மனத்தில் மரண பீதியை உண்டாக்கி அதன்மூலம் ஓர் இமைப் பொழுதில் தன் அகந்தையை அழித்து அருணாசலன் அவனது யதார்த்த சொரூபநிலையைத் தனக்கு வழங்கிய அவனது அருட்செயலை நினைவுகூர்வது போன்று, ஸ்ரீ பகவான் "இந்தப் பிறவியில் உனது அருள் மழைக்கு ஆளாக நான் தவம் ஒன்றும் செய்தறியேன்; இப்போது என்மீது அருள் பொழிந்து அகந்தையை அழிக்க நீயாகவே முன்வந்ததற்கு நான் முற்பிறவியில் தொடங்கி

பூர்த்தி செய்யாது குறையாக விட்ட என்ன தவமோ சாதனையோ காரணமாயிற்று?" என்று வியப்புடன் வினவுகிறார்.

மேலும் "குறை என் செய்தேன்?" என்ற சொற்களுக்குச் சற்று மாறுதலான பொருளையும் கொள்ளலாம். அதாவது, தனது தகுதியை மறுத்து, அருணாசலனின் பெருங்கருணைத் திறத்தைப் போற்றி, "உனது அருளஸ்திரத்திற்கு இலக்காக நான் என்ன தகுதி பெற்றுள்ளேன்? இப்பிறவியிலோ முற்பிறவிகளிலோ நான் என்ன தவம் செய்துவிட்டேன்? ஒன்றும் இல்லையே! உனது அவ்வியாஜ கருணை யொன்றினாலன்றோ என்னைத் தேர்ந்தெடுத்து என் அகந்தையை அழிக்கத் தீர்மானித்துள்ளாய்?" என்று ஸ்ரீ பகவான் புகழ்ந்து பாடுகிறார்.

இவ்வாறு முந்தைய பாடலில் தொனிக்கும் நிந்தா ஸ்துதி பாவத்தின் தொடர்ச்சியாக இப் பாடலிலும் ஸ்ரீ பகவான் வஞ்சப் புகழ்ச்சியாக அருணாசலனின் புகழ் பாடுகின்றார். அவரது அன்புச் சொற்கள் எவ்வளவு அற்புதமானவை! சென்ற பாடலில் ஈன்றிடும் அன்னையில் பெரிதருள் புரியும் அருணாசலனைக் கொலையாளி என்று வருணித்தது போன்று, இப் பாடலில் தன் தலைவனின் அதிகருணையை அவன் கொண்ட கோபமாகவும், தன் உன்னத தகுதியைக் குறையாகவும் குறிப்பிடும் அழகு ரசித்து மகிழத் தக்கதாகும்.*

வேறொரு பாவத்துடன் நோக்கினால் இப் பாடலுக்கு மற்றொரு பொருள் காணலாம். அதாவது, ஸ்ரீ பகவான் அருணாசலனை நோக்கி "நீ 'என்னை நாடிவரும் பக்தர்களைக் கொல்லுவேன் நான்' எனக் கொடிகட்டியுள்ளாய். ஆயினும் உனது அடியார்களுள் என் ஒருவனை மட்டுமே வெறுப்பாகிய உன் அஸ்திரத்துக்குக் குறிவைத்து என் ஜீவ போதத்தை அழிக்காமலிருக்கிறாயே! இவ்வாறு கைவிடுவதற்

---

*இப் பாடலுக்கும் சென்ற பாடலுக்கும் மேலும் விரிவான விளக்கத்தை முன்னுரையில் (பக்கம் 19-23) காணலாம்.

கென்றே என்னைத் தேர்ந்து குறிவைக்க நான் உனக்கு என்ன பாவம் செய்தேன்?" என்று கெஞ்சு மொழியில் பாடுகின்றார். இதே கருத்தை 'ஸ்ரீ அருணாசல பதிகம்' மூன்றாவது பாடலிலும் வெளிப்படுத்தியுள்ளார் ஸ்ரீ பகவான்:

"இறைஉனை நினையும் எண்ணமே நண்ணா
எனைஉன தருட்கயிற் றால்ஈர்த்(து)
இறைஉயிர் இன்றிக் கொன்றிட நின்றாய்;
என்குறை இயற்றினன் ஏழை?
இறைஇனிக் குறைஎன்? குற்றுயிர் ஆக்கி
எனைவதைத் திடல்எதற்(கு) இங்ஙன்?
இறைவனும் அருணா சல!எணம் முடித்தே
ஏகனா வாழிநீ டூழி."

'இறை-உயிர்' என்ற பேதமின்றி தன் அடியவரை முற்றிலும் கொன்று அழிக்கும் தன் எண்ணத்தைப் பூர்த்தி செய்திட அருணாசலன் தன் கருணாகடாக்ஷத்தால் அவனை விழுங்க வேண்டும். எனவே அடுத்த பாடலில் ஸ்ரீ பகவான் அருணாசலனின் கடாக்ஷத்தைப் பிரார்த்திக்கின்றார்.

**26. கௌதமர் போற்றுங் கருணைமா மலையே**
**கடைக்கணித் தாள்வா யருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! கௌதமர் போற்றும் கருணை மா மலையே! கடைக்கணித்து ஆள்வாய்.

**பொ-ரை:** அருணாசலா! கௌதம முனிவரால் போற்றப்பட்டப் பெருங் கருணை மலையோனே! எனக்கு உன் அருட்கடாக்ஷம் தந்து ஆண்டு கொள்வாயாக.

**வி-ரை:** ஸப்தரிஷிகளுள் ஒருவரான கௌதமர் திருவண்ணாமலையின் ஸ்தலமகரிஷி யாவார். அன்றியும், ஸ்ரீ பகவான் பிறந்த ஸ்தலமாகிய திருச்சுழிக்கும் அவரே ஸ்தலமகரிஷி யாவார். இதிலிருந்து பண்டைய காலந் தொட்டே இவ் விரு ஸ்தலங்களினிடையேயும் தெய்வீகத் தொடர்பு இருந்து வந்திருப்பது புலப்படும்.

கௌதம மாமுனிவரின் தனிச் சிறப்பு என்னவென்றால், சிவபிரான் தன்னோடு உமாதேவி கொண்டிருந்த சுபாவ

ஐக்கிய நிலையை அவள் இழந்ததால் அந் நிலையை மீண்டும் அடைய வேண்டி தவமியற்றுவதற்காக திருவண்ணாமலைக் குச் செல்லுமாறு அவளைப் பணித்தபோது, அவ் வைக்கிய நிலையை அடைவிக்கக்கூடிய சாதனையை உபதேசிக்கத் தகுந்த சற்குரு கௌதமரே என்று சொல்லி சிவபிரானாலேயே அவள் கௌதமரிடம் அனுப்பப்பட்டாள் என்பதாகும். தேவி கௌதமரைச் சந்தித்ததும் முதலாவதாக அருணாசலத்தின் மகாத்மியத்தைத் தனக்கு விளக்கியருளுமாறு கேட்டாள். அதற்கு கௌதமர் அருணாசலம் என்னும் இம் மாமலையானது பிரம்ம விஷ்ணுக்களின் அகந்தையை அடக்குவதற்காக இவ் வுலகில் எழுந்தருளிய கருணை சொரூபமே யாகும் என்ற உண்மையை தேவிக்குத் தெரிவித்து இம் மலையின் அருட் பெருமையைப் போற்றினார். அசலமாக அக்கினி ஸ்தம்பமாய் ஓங்கி எழுந்து நின்ற மாத்திரத்தாலேயே அவ் விரு பெரும் தேவர்களாக எழுந்த மிகச் சக்திவாய்ந்த அகந்தையெழுச்சிகளையும் அன்று அருணாசலன் அடக்கிய அருள் வல்லவனென்றால், அவன் இன்று ஜீவனின் அற்ப அகந்தையெழுச்சியைத் தனது கடைக்கண் மாத்திரத்தாலேயே அடக்கக்கூடியவன் என்பதில் ஐயமென்ன? அதனால்தான் ஸ்ரீ பகவான் "இப்படிப் பட்ட கருணைமாமலையே என்று கௌதமரால் போற்றப்பட்ட அருணாசலனே! எனது அற்ப அகந்தையெழுச்சியையும் உனது சர்வ வல்லமை வாய்ந்த அருட்கடாக்ஷத்தால் அழிப்பாயாக" என்று பிரார்த்திக்கின்றார்.

'கருணை' என்பது ஆன்ம விளக்கத்தை நன்கு தெளிவுபடுத்துவதன் மூலம் அகந்தையை யடங்க வைப்பதே யாகும். அருணாசலன் இப்படிப்பட்ட கருணையின் — அதி கருணையின் — அவ்வியாஜ கருணையின் — சொரூபமே யாதலால், ஸ்ரீ பகவான் அவனைக் 'கருணைமாமலையே' என்று அழைக்கின்றனர்.

ஆளுதலாவது கருணைக்குப் பாத்திரமாக்குதல், அடிமை உரிமை பெற வைத்தல், பிரதிநிதித்துவ அதிகாரம் உடைத்ததாக்குதல், காப்பாற்றப்படல், எக்காலும் கைவிடப் படாத திண்ணம் உற வைத்தல் ஆகிய யாவுமாம். இவை யாவும் அகந்தை யழிக்கப்பட்டால்தான் உண்மையாகவும்

பூரணமாகவும் அடையக் கூடியனவாம். இவ் வகந்தை நாசம் அருணாசலனின் அருட்பார்வையால்தான் நிகழக் கூடிய தாகையால், ''கடைக்கணித் தாள்வாய்'' என்று பிரார்த்திக்கின்றார் ஸ்ரீ பகவான்.

'கடைக்கணித்தல்' என்பதன் பொருள் 'பாராது பார்த்தல்', 'பிறரறியாது பார்த்தல்' அல்லது 'அன்பின்மை போல் காட்டி இலேசாகப் பார்த்தல்' ஆகிய யாவுமாம். 'கடைக்கண்', 'கருணாகடாக்ஷம்', 'அருட்பார்வை' என் பவையெல்லாம் மறைபடாது தடைபடாது பூரணத் தெளி வுடன் 'நான்–நான்' என்று ஸ்புரிப்பதாகிய அருணாசல னின் அருட்செயலையே குறிப்பனவாகும். அவன் இவ்வாறு ஸ்புரிப்பதால்தான் அகந்தையாகிய ஜீவன் மீண்டும் எழாதவாறு தன் முனைப்பு அழிந்து அவனுக்கே ஆட்படு கிறது. அதனால்தான் 14வது பாடலில் ''எனை ஆளுவது உன் கடன் அருணாசலா'' என்று பாடிய பிறகு அடுத்த பாடலில் ''பார் அருணாசலா'' எனப் பிரார்த்திக்கின்றார் ஸ்ரீ பகவான். அவ்வாறே இப் பாடலிலும் ''கடைக்கணித்து ஆள்வாய் அருணாசலா'' என்று இரு பிரார்த்தனைகளையும் ஒருங்கே சேர்த்துப் பாடியுள்ளார். ஏனெனில், ஆண்டான் கடைக்கண்ணினால்தான் ஆளுதல் நிகழ வேண்டியது.

''பார்த்தருள் மாலற'' என்று ஸ்ரீ பகவான் 65வது பாடலில் கூறியபடி, அருணாசலனின் கருணாகடாக்ஷம் அகந்தையாகிய அஞ்ஞான இருளை அழிக்கும் பேரொளி யாகும். உலகம் என்னும் பேதக் காட்சி அவ் வஞ்ஞான இருளில்தான் தோன்றுமாதலால், அவனது கடாக்ஷமாகிய கதிரொளியால் அவ் விருள் அழியும்போது இப் பேதக் காட்சி சகலமும் அவ் வொளியால் விழுங்கப்படுகிறது.

**27. சகலமும் விழுங்குங் கதிரொளி யினமன**
**சலச மலர்த்தியி டருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! சகலமும் விழுங்கும் கதிர் ஒளி இன! மன சலசம் அலர்த்தியிடு.

**பொ-ரை:** அருணாசலா! எல்லாவற்றையும் தன் அருள்ஞானக் கிரணங்களால் கவர்ந்து விழுங்கும் ஞான

சூரியனே!-(மொட்டாக விருக்கும்) என் மனத் தாமரை மலரை நன்ருக மலர்த்தி யருள்வாயாக.

**வி—ரை:** அருணாசலனும் ஆன்மப் பேரொளி பிரபஞ்ச மனைத்தையும் விழுங்குவதாவது எங்ஙனம்? ஒரு சினிமாக் கொட்டகையில் பகலில் படக்காட்சி நடைபெறுவதாக வைத்துக் கொள்வோம். சினிமா இயந்திரத்திலுள்ள பிரகாசமான விளக்கொளி திரையின்மேல் படவே, கொட்டகையினுள் செயற்கையாக உண்டாக்கப்பட்டுள்ள இருளை ஆதாரமாகக் கொண்டு திரையின்மேல் படங்கள் தெரிகின் றன. ஒரு பெருங்காற்ருல் கொட்டகையின் கூரை பெயர்த் தெறியப்பட்டால், சூரியனின் பேரொளி உள்ளே புகுந்து விடும். அப்போது கொட்டகையினுள் உண்டாக்கப்பட் டிருந்த ஆதார இருள் அகற்றப்படவே, உள்ளே புகுந்த சூரியனின் பேரொளியால் திரையின்மேல் தெரிந்து கொண் டிருந்த படங்கள் விழுங்கப்பட்டனவாய் மறைகின்றன வன்ருே? அவ்வாறே, ஆன்மாவின் பிரதிபிம்பமான அற்ப மனவொளியில்தான் இவ் வுலகத் தோற்றமான காட்சி தெரிந்து கொண்டிருக்கிறது. இவ் வுலகக் காட்சிக்கு ஆதாரமாய் இருப்பது தன்னை யறியாத அஞ்ஞானமாகிய இருளே. இவ் விருள் இருப்பதாலேயே பிரபஞ்சச் சித்திரம் பார்வைக்குப் புலனுகின்றது. அருணாசலனும் ஆன்மப் பேரறிவொளி உதித்ததும், ஆதார அஞ்ஞான இருள் அழிவதால் பிரபஞ்சச் சித்திரங்கள் மறைந்து போகின்றன. இதுவே இனனுடைய கதிரொளி சகலமும் விழுங்குதலாம்.

இங்கு சூரியன் என்பது அருணாசலனும் ஆன்மப் பேரறிவொளியாகும்; கொட்டகையினுள் இருந்த இருள் என்பது தன்னை அறியாத அஞ்ஞானமாகும்; சினிமா யந்திரத்தின் விளக்கொளி என்பது பிரதிபிம்ப வொளியாகிய மன அறிவாகும்; சினிமாப் படங்களாவது நாமரூபப் பிரபஞ்சக் காட்சியாகும்.

இந் நாமரூபப் பிரபஞ்சக் காட்சி யனைத்தும் மன வொளியில்தான் — மனமாகிய சிதாபாசனுக்கேதான் — தோன்றுகின்றது. அதனுல்தான் மனத்திற்கு ஒளி வராத உறக்கம், மரணம் ஆகிய நிலைகளிலும், மனவொளியே

மங்கி மறையும் ஞான நிலையிலும் இப் பிரபஞ்சக் காட்சி தோன்றுவதில்லை. எவ்வாறு சினிமா யந்திரத்திலிருந்து வெளிவரும் குறுகிய விளக்கொளியில்தான் சினிமாப்படம் தெரியுமே தவிர முழு இருட்டிலோ அல்லது முழு சூரியப் பிரகாசத்திலோ சினிமாக் காட்சி தெரியாதோ, எவ்வாறு அந்தி வேளையின் மங்கிய ஒளியில்தான் கயிறு பாம்பாகத் தெரியுமே தவிர இரவின் முழு இருட்டிலோ அல்லது பகலின் முழு வெளிச்சத்திலோ தெரியாதோ, அவ்வாறே இந்த உலகக் காட்சியும் அற்ப மனவொளியில்தான் தெரியுமே தவிர நித்திரையாகிய முழு இருட்டிலோ அல்லது ஆன்ம ஞானமாகிய பேரொளியிலோ தெரியாது. உலகக் காட்சி உறக்கத்தில் இருளால் விழுங்கப்படுகிறது; ஞான நிலையில் ஒளியால் விழுங்கப்படுகிறது. ஆகையால் சினிமாப் படமானது இருளும் ஒளியும் கலந்த வெறும் நிழற்கூட்டமே போன்று, இப் பிரபஞ்சக் காட்சியும் ஆன்மாவாகிய ஒளியும் வாசனைகளாகிய இருளும் சேர்ந்த கலவையான வெறும் நிழற்கூட்டமாக எழுகின்ற பொய்த் தோற்றமே யாகும்.

இந்த துவிதக் காட்சி யனைத்தும் உண்மையற்ற நிழற் கூட்டமே யாயினும், அது எவ்வாறு ஜீவதிருஷ்டியில் உண்மையாகவே இருப்பதாகத் தோன்றுகின்றது? தன் அகண்ட ஏக சத் இயல்பை மறக்கும் மறதியால் ஜீவன் தன்னுல் காணப்படும் துவிதக் காட்சியாய் தோன்றுகின்ற நிழற் கூட்டத்திலுள்ள பலவற்றுள் ஒன்ருன ஒரு தேகத்தை ‘நான்’ என்று அபிமானித்து மயங்குகிருன். இவ்வாறு நிழற் கூட்டத்திலுள்ள ஒன்றை ‘நான்’ என்று அபிமானித்து மயங்குவதால், அவன் அந்த நிழற்கூட்டம் முழுவதையும் உண்மையான இருப்புள்ளதாகத்தான் அனுபவிக்க முடியும். அதாவது, ‘நான்’ என்று அபிமானிக்கப்படும் தேகத்தின் சத் தன்மையும் இத் துவிதக் காட்சியின் சத் தன்மையும் சமசத்தை யுடையனவாக (ஒரேவித அளவு உண்மை உள்ளவையாக) அமைந்தனவாகையால், தேகான்ம புத்தி யுள்ளவனுக்கு — மனத்துக்கு — அவனுல் காணப்படும் சகலமும் உண்மைபோல் தோன்றுகின்றது. இச் சகலமும் அவனுக்கு சமசத்தாக இல்லாவிட்டால், அது அவனுல் காணப்பட முடியாது.

எவ்வாறு விழிப்பின் தெளிவால் உறக்கத்தின் இருள் கலைந்ததும் கனவில் காணப்படும் பொய் உலகக் காட்சி மறைகிறதோ, அவ்வாறே ஆன்ம ஞானப் பிரகாசத்தால் தன்மறதியாகிய அஞ்ஞான நித்திரை கலைந்ததும் நம்மால் இப்போது காணப்படும் உலகக் காட்சி யனைத்தும் அப் பிரகாசத்தால் விழுங்கப்பட்டு என்றுமே உண்மை யிருப் பற்றதாக மறையும்.

இச் சகலமும் உண்மை இருப்புடையதாகக் காண் கின்ற மனமானது 'நான் இத் தேகம்' என்ற வடிவில் எழுகின்ற வெறும் பொய்யறிவே யாகையால், இச் சகலமும் மெய்யறிவு சொரூபமான அருணாசலனின் திருஷ்டியில் முற்றும் இல்லாதனவே யாகும். ஆனால் அருணாசலனின் திருஷ்டியில் இச் சகலமும் இவ்வாறு என்றுமே இருப்பற்ற தாயினும், இதனைஇருப்பதாகக் காணும் ஜீவனின் அஞ்ஞான திருஷ்டிக்கு ஏற்ப ஸ்ரீ பகவான் இதனை அருணாசலன் தனது கதிரொளியால் விழுங்குவதாகக் கூறுகிறார். இங்கு 'விழுங்குதல்' என்ற சொல்லுக்கு 'இல்லாது மறையும்படிச் செய்தல்' — 'இல்லாததாக உணர வைத்தல்' — என்பது பொருளாகும். சகலத்தையும் விழுங்கும் அருணாசலனின் கதிரொளியாவது அவனது பிரஞ்ஞை ஒளியே — 'நான்-நான்' என்னும் ஆன்ம ஸ்புரிப்பே — தன்னுணர்வின் தெளிவே — யாகும்.

கதிரோன் ஒளியின்றி கமலம் மலராதன்றோ? அவ் வாறே ஆன்ம வொளியாம் அருணாசலனன்றி மனமாகிய தாமரை மலராது. அருணாசலன் தன் அறிவுக்கதிரொளி யால் இப் பிரபஞ்சம் அனைத்தையும் விழுங்கக் கூடிய அவ்வளவு சக்தி மிக்க ஞானசூரியனா யிருக்க, அவன் பக்தனின் மனத் தாமரை மொட்டை எளிதில் பக்குவப் படுத்தி மலர்த்திட மாட்டானா? ஆகையால் ஸ்ரீ பகவான் "மன சலசம் அலர்த்தியிடு அருணாசலா" என்று பிரார்த் திக்கின்றார்.

இப் பாடல் முழுவதும் உருவக அணியாகும். அருணாசலன் கதிரவனாகவும், அவனது ஆன்ம ஞானப் பேரொளி சூரியனின் கதிரொளியாகவும், மனம் தாமரை

மொட்டாகவும் உருவகப்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் இரு விதத்தில் இப் பாடல் ஏகதேச உருவகமாகும். சூரியனின் ஒளிக் கதிர்களால் விழுங்கப்படுவது நிழல் என்பதால், இங்கு சகலமும் என்பது வெறும் நிழற்கூட்டமே என்று நாம் தெரிந்துகொள்ள வேண்டும். நிழலாகிய உபமானத்தைக் கூறாமல் 'சகலமும்' என்னும் உபமேயத்தை மட்டுமே கூறியுள்ளார் ஸ்ரீ பகவான். இது முதலாவது ஏகதேச உருவகம். இரண்டாவது ஏகதேச உருவகமாவது 'அலர்த்தியிடுதல்' என்ற உபமானத்தை மட்டுமே கூறிவிட்டு இதன் உபமேயத்தைக் கூறாது விட்டுவிட்டார்.

''மன சலசம் அலர்த்தியிடு'' என்று பிரார்த்திப்பதன் மூலம் ஸ்ரீ பகவான் உண்மையில் வேண்டுவது யாது? 'மன ஜலஜம்' என்பதாவது சித்சொரூபமான ஆன்மாவையும் ஜடரூபமான தேகத்தையும் ஒன்றாய்ப் பிணைத்து 'உடலே நான்' என்னும் பொய்யறிவாக விளங்கும் இதயக் கிரந்தியே யாகும். ஆன்மஞானமாகிய அறிவொளி உதிப்பதால் மட்டுமே நடைபெறும் இந்த சித்சடக்கிரந்தி சிதைவே இங்கு 'மன சலசம் அலர்த்தியிடுதல்' என்று குறிப்பிடுவதாகும். அதாவது, உலகமாகிய நிழற் சித்திரத்தைத் தன் ஒளியால் விழுங்கும் கதிரவனாக அருணாசலனைச் சித்திரித்ததற்கு ஏற்ப, ஸ்ரீ பகவான் தான் பிரார்த்திக்கும் இதயக் கிரந்தி பேதத்தையும் ஞான சூரியனாகிய அருணாசலனின் சக்தியால் மலர்விக்கப்படும் மனத் தாமரையின் மலர்ச்சியாக உருவகப்படுத்திப் பாடியுள்ளார். இதே பிரார்த்தனையை இதே உருவக அணியாக 'ஸ்ரீ அருணாசல பஞ்சரத்னத்'தின் முதற் பாடலில் ஸ்ரீ பகவான் செய்துள்ளார்:

''அருள்நிறை வான அமுதக் கடலே
விரிகதிரால் யாவும் விழுங்கும் — அருண
கிரிபரமான் மாவே கிளருளப்பூ நன்றாய்
விரிபரிதி யாக விளங்கு.''

அருணாசலனின் அருளால் கிரந்தி பேதம் நடைபெறும் வரையில் மனத்தாமரை மொட்டாகக் குவிந்து கிடக்கும். அந்த மன மொட்டுள் கப்பிக்கிடக்கும் அஞ்ஞான இருளில் வாசனைகள் மண்டிக் கிடக்கும். அம் மொட்டு

அருணாசலனின் அறிவொளியால் விரியும்போது அது அகண்ட ஞான வெட்ட வெளியாய் மலர்வதால், அவ் வஞ்ஞான இருள் இருக்க இடமின்றிப் போய் எல்லா வாசனைகளும் அக் கதிரொளியால் விழுங்கப்படுகின்றன. அதாவது, அஞ்ஞான இருள் அகன்ற நிலையில் வாசனைகள் இருக்க முடியாது. வாசனைகள் இடம் பெற்றிருந்து சேஷ்டை புரிவது என்பது மனத்தாமரையானது மலராது மொட்டாக இருக்கும் இருள் நிலையில்தான் சாத்தியமே யொழிய, விரிந்த இதயத்தின் வெட்ட வெளியில் சாத்திய மல்ல. ஆகையால், ஜீவனின் குற்றம் அனைத்தும் குவிந் துள்ள மனமாகிய மொட்டில் வித்து வடிவில் வாசனை களாகத் தங்கியிருப்பதால், "சகலமும் விழுங்கும் கதிரொளி இன" என்னும் சொற்களுக்கு 'என் குற்றமனைத்தையும் தனது ஒளிக் கதிரால் விழுங்கும் கதிரவனே' எனவும் பொருள் கொள்ளலாம். மனத்தின் வாசனைகள் யாவையும் அழிப்பதானது சினிமா இயந்திரத்திலுள்ள படச்சுருள்கள் முழுவதையும் அழிப்பது போன்றதால், மனத்தாமரை மலர்ந்து விரிந்த பிறகு உலகமாகிய நிழற்படக் காட்சி அகண்ட ஆன்மாவாகிய திரையில் இனி ஒரு போதும் தோற்றுவிக்கப்பட முடியாது. எனவே தனது அருட் பிரகாசத்தால் எல்லாவற்றையும் விழுங்கி விட்டு எல்லை யற்ற அகண்ட சிதாகாசமாக அருணாசலன் மட்டுமே தனித்து விளங்கும் நிலையாகிய வாசனாக்ஷயத்தையே — மனோநாசத்தையே — பிரார்த்திப்பதாகும் இப் பாடல்.

**28. சாப்பா டுன்னைச் சார்ந்துண வாயான்**
**சாந்தமாய்ப் போவ னருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! உன்னை யான் சார்ந்து சாந்த மாய்ப் போவன் சாப்பாடு உணவா?

**பொ-ரை:** அருணாசலா! உன்னை நான் அடுத்து சாதுவாக வந்தது வெறும் வயிற்றுப் பிழைப்பான சாப்பாடு பெற்றுண்பதற்குத் தானா? (உன்னை அடைந்து ஆன்மபசி தீருவதற்கல்லவா?)

**வி-ரை:** பிக்ஷை யெடுக்க வெளியில் செல்லும் போது பாடுவதற்கு ஏற்ற ஒரு ஸ்தோத்திரப் பாடலைப் புனைந்து

தருமாறு கேட்டுக் கொண்ட சாது அன்பர்களின் வேண்டு தலுக் கிணங்கவே ஸ்ரீ பகவான் 'அக்ஷரமணமாலை' என்னும் இவ் வற்புதப் படைப்பைப் பாடத் தொடங்கினார். இவ்வாறு வெளிமுகத்திலிருந்துதான் முதலில் தூண்டுதல் வந்த தாயினும், ஸ்ரீ பகவான் இந்த ஸ்தோத்திரப் பாடலைப் பாடத் தொடங்கியதும் பரபக்தியின் ஆவேச வசப்படவே, அவரது உள்ளத்தின் அடித்தளத்தினின்று பாடல்கள் அணிஅணி யாய்ப் பொங்கி வெளிவரத் தொடங்கின. எனவே இப் பாடலில், 'சா' என்னும் எழுத்து வரிசைக்கு வந்ததும் சாது அன்பர்களின் கோரிக்கையின் நோக்கம் நினைவுக்கு வந்தது போன்று, ஸ்ரீ பகவான் "தன்னையே தரும் உன்னை நான் சாந்த விருத்தியுடையவனாய் — சாதுவாய் — வந்து அணுகியது சாப்பாடாகிய வயிறு வளர்ப்பு மாத்திர லாபத் திற்காகவா? அல்ல, அல்ல. நெருப்புப் போல எரிந்து கொண்டிருக்கும் எனது திருவருட்பசி தீருவதற்காகவே நான் ஞானமுதமாகிய உன்னை வந்தடைந்தேன்!" என்று பாடுகிறார். இவ்வாறு இப் பாடலின் மூலம் அந்தச் சாது அன்பர்களுக்கும் ஆன்மீக வழியில் செல்ல விழையும் நம் அனைவருக்கும் நம் உலக வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதற்கு முக்கியத்துவம் அளிக்காமல் அதனைக் கடவுளின் பொறுப்பில் விட்டுவிட்டு, உண்மையான இன் பத்தை அடைய விழையும் நம் ஆன்மப் பசியைத் தீர்க்க வல்ல திருவருளையே நாடி அடைய வேண்டும் என்று மறைமுகமாக உபதேசிக்கின்றார் ஸ்ரீ பகவான்.

இப் பாடலில் உள்ள 'உணவா' என்ற சொல்லை மூன்று விதமாகப் பிரித்து பொருள் கொள்ளலாம். மேற் கண்ட பொருளில் அது 'உண்ண + ஆ?' (உண்பதற்குத் தானா?) என்று பிரிக்கப்பட்டது. மேலும் அதனை 'உண்ண + வா' (உண்பதற்காக வந்தருள்வாய்) என்றும், 'உணவு + ஆய்' (சாப்பாடாகி) என்றும் பிரிக்கலாம். 'உண்ண + வா' என்று பிரித்தால் இருவிதத்தில் பொருள்படும். அதாவது, "அருணாசலனே! நீ என் ஆவிக்கு (ஆன்மப் பசிக்கு) உணவாகியவன்! நான் உன்னைப் பெற்று சாப்பிடுவதற்கு (அனுபவிப்பதற்கு) நீ எழுந்தருள்வாயாக (என் உள்ளத்தில் ஸ்புரித்தருள்வாயாக). அப்போது நான் உன்னைப் பெற்றுப் பரமசாந்தி யுறுவேன்" என்றோ, "அருணாசலனே! 'நான்

உனக்கு ஊணாகட்டும்' என்று எண்ணி நான் உன்னை வந்தடைந்தேன். இப்போது என்னைச் சாப்பிடுவதற்காக நீ எழுந்தருள்வாயாக. அப்போதுதான் நான் உனக்கு ஊணாகி பரமசாந்தி பெறுவேன்'' என்றே பொருள் கொள்ளலாம்.

மேற்கண்ட மூன்று பொருள்களும் பிரார்த்தனை களாகும். ஆனால் 'உணவா' என்ற சொல்லை 'உணவு+ ஆய்' என்று பொருள் கொண்டால், இப் பாடல் அடைவு கூறலாகும். அதாவது, ஸ்ரீ பகவான் ''அருணாசலனே! நான் உன்னை என் ஆவிக்கு உணவாக அருந்தக் கருதி வந்து நெருங்கவே, அதற்கு மாறாக நானே உனக்கு உணவாகி பரமசாந்தி யடைந்தேன்'' என்று வியந்து மகிழ்ந்து பாடு கின்றார். ஸ்ரீ பகவானின் இதே அனுபவம் 48வது பாடலி லும் ''தெய்வம் என்று உன்னைச் சாரவே, என்னைச் சேர ஒழித்தாய் அருணாசலா'' என்று வெளியாகியிருக்கிறது. இங்கு ''சாப்பாடு உன்னைச் சார்ந்து'' என்ற சொற்களுக்கு 'உன்னை அனுபவிக்கக் கூடிய பொருளாக எண்ணி நான் வந்து நெருங்கி' என்பது பொருளாகிறது. ஆன்மசொரூப மாகிய அருணாசலனின் உண்மை இயல்பை அனுபவிக்க எண்ணி அவனை நெருங்கும்போது பக்தன் முடிவில் அடைவது யாது? அவன் அருணாசலனுக்கே ஊணாகி ஒழி கிறான். அதனால்தான் ஸ்ரீ பகவான் 'உள்ளது நாற்பது' 21வது பாடலில் ''தலைவன் காணல் எவன்? ஊணாதல் காண்'' (கடவுளை அனுபவிப்பது எப்படி முடியும்? அவனுக்கு உணவாகிவிடுவதே அவனை அனுபவித்தலாகும்) என்கிறார். 'நான்' என்று ஒரு வியக்தி எண்ணம் இருக்கும்வரை கடவுளை அனுபவிக்க — உணர — இயலாது. ஆன்மவிசாரம், ஆன்மசமர்ப்பணம் ஆகியவற்றின் உண்மையான பலன் இவ்வாறு கடவுளுக்கு ஊணாவதே யாகும். இத் தன்னிழப்பே பரமமங்களகரமான அனந்த வாழ்வு.

இங்கு 'சாப்பாடு' என்னும் சொல்லை 'மரண அனுபவம்' (சா + பாடு) என்ற பொருளிலும் எடுத்துக்கொள் ளலாம். அதாவது, ஆன்ம சொரூபமாகிய அருணாசலன் உண்மையான மரணானுபவம் — அகந்தையின் மரணத்தால் உதிக்கும் மெய்ஞ்ஞானானுபவம் — ஆகும். அருணாசலனைச்

சாப்பாடாக உட்கொள்ள ஸ்ரீ பகவான் அவனை வந்தடைந்ததும், அவரே அவனுக்கு ஊணாகி மரணானுபவம் எய்தி அவன்மயமாகி விட்டார்.

'சாந்தம்' என்னும் சொல்லை 'ச + அந்தம்' (அந்தத்தோடு கூடியது) என்று பிரித்தால் "சாந்தமாய்ப் போவன்" என்ற சொற்களுக்கு 'முடிவடைந்து ஒழிந்தேன்' என்ற பொருள் வரும். அதாவது, அகந்தை அருணாசலனுக்கு ஊணாகி உண்மையான மரணானுபவத்தை அடைந்த பிறகு அது மீண்டும் எழ இயலாதவாறு — பிறக்க இயலாதவாறு — முடிவான நிலையாகிய பேரொழிவில் ஒடுங்குகிறது. இந்தப் பேரொழிவு நிலையே முடிவான பூரண சாந்தியாதலால், "சாந்தமாய்ப் போவன்" என்ற சொற்களுக்குப் 'பரமசாந்தியடைந்தேன்' என்றும் பொருள் கொள்வது பொருத்தமுடைத்ததே.

இப் பாடலில் உள்ள சொற்களுக்கு இவ்வாறாகக் கிடைக்கும் பல்வேறு பொருள்களையும் ஆராயுமிடத்து, அவையாவும் ஆன்மீகப் பாதையில் நாம் படும்பாடு அனைத்தின் முடிவான குறிக்கோளானது அகந்தைஅருணாசலனுக்கு உணவாகி மரணானுபவம் எய்தி முடிவுற்ற நிலையே யாகும் என்பது ஸ்ரீ பகவானின் அனுபவமாகும் என்னும் ஒரே பொது உண்மையைக் காட்டுகின்றதல்லவா? அகந்தை முடிவாக தன் வியக்தித்துவத்தை (தனியிருப்பை) இழந்து கடவுளுக்கு ஊணாகிறது என்ற ஸ்ரீ பகவானின் அனுபவமானது 92வது பாடலிலும் "லட்சியம் வைத்து அருளஸ்திரம் விட்டு எனைப் பட்சித்தாய் பிராணனோடு அருணாசலா" என்றும், 103வது பாடலிலும் "சிந்தித்து அருள்படச் சிலந்தி போல் கட்டிச் சிறையிட்டு உண்டனை அருணாசலா" என்றும் வெளியாகியிருக்கிறது. மெய்ந்நிலையுற்ற முக்த புருஷனுக்கு வியக்தித்துவம் சற்றும் கிடையாது என்ற உண்மையை இப் பாடல்கள் யாவும் புலப்படுத்துகின்றன அல்லவா? ஸ்ரீ பகவானைப் போன்ற ஞானிகள் தனிவியக்தி யுடையவர்கள் போல் அஞ்ஞானிகளின் திருஷ்டியில் காணப்பட்டாலும், அவ் வியக்தி காண்போரது வியக்தியின் பிரதிபிம்பமே தவிர வேறல்ல என்று நாம் உணர வேண்டும். இதையே ஸ்ரீ பகவான்

"மெய்யுறுமுத் தர்க்கு வியக்தியுள தாமென்னல்
பொய்யுறுபெத் தப்புலவோர் புல்லறிவே — [பொய்யறுமெய்
ஆய வியோமத் தவர்வியக்தி யவ்வியக்தி
நேயர் வியக்தி நிழல்."

என்று 'குருவாசகக்கோவை' 119வது பாடலில் கூறியுள்ளார். வியக்தித்துவம் முற்றும் ஒழிந்த இதே அனுபவத்தை மணிவாசகரும் திருத்தெள்ளேணத்தில்

"கயல்மாண்ட கண்ணிதன்
பங்கன்எனைக் கலந்தாண்டலுமே
அயல்மாண்(டு) அருவினைச்
சுற்றமும்மாண்(டு) அவனியின்மேல்
மயல்மாண்டு மற்றுள்ள
வாசகம்மாண்(டு) என்னுடைய
செயல்மாண்ட வாபாடித்
தெள்ளேணங் கொட்டாமோ." (11)

"வான்கெட்டு மாருதம்
மாய்ந்(து)அழல்நீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச்
சலிப்பறியாத் தன்மையனுக்(கு)
ஊன்கெட்(டு) உயிர்கெட்(டு)
உணர்வுகெட்(டு)என் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித்
தெள்ளேணங் கொட்டாமோ." (18)

என்றும், நம்மாழ்வாரும் திருவாய்மொழியில்

"நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்(து)என்னை
ஈர்மைசெய்(து) என்னுயி ராய்என் உயிருண்டான்..."
(9. 6. 3.)

"திருவருள் செய்பவன் போலஎன் னுள்புகுந்(து)
உருவமும் ஆருயி ரும்உட னேயுண்டான்..." (9.6.5.)

"கோளுண்டான் அன்றிவந்(து) என்னுயிர் தானுண்டான்
நாளுநாள் வந்(து)என்னை முற்றவும் தானுண்டான்..."
(9.6.8.)

"வாரிக்கொண்(டு) உன்னே விழுங்குவன் காணிலென்(று)
ஆர்வுற்ற என்னே யொழிய,என் னின்முன்னம்
பாரித்துத் தானென்னே முற்றப் பருகினுன்;
காரொக்கும் காட்கரை யப்பன் கடியனே." (9.6.10)

"தானே யாகி நிறைந்(து)எல்லா
உலகும் உயிரும் தானேயாய்
தானே யானென் பானுகித்
தன்னேத் தானே துதித்(து)எனக்குத்
தேனே பாலே கன்னலே
அமுதே திருமால் இருஞ்சோலேக்
கோனே யாகி நின்றெழிந்தான்
என்னே முற்றும் உயிருண்டே." (10.7.2)

என்றும் வெளியிட்டுள்ளனர். இவ்வாறு வியக்தித்துவம் ஆண்டவனுல் முற்றும் புசிக்கப்பட்டபின் எஞ்சியிருப்பது 'நான்' என்று கடவுள் மட்டுமே தனித்து விளங்கும் அத்துவித அனுபவமே யாகும். இந்த அத்துவித அனுபவம் பல பாடல்களில் நம்மாழ்வாரால் தெளிவாகப் பாடப்பட்டுள்ளது. உதாரணமாக, "அவன் என்னுகி ஒழிந்தான்" (5.1.2) என்றும், "தானே இன்னருள் செய்து என்னே முற்றவும் தானுனுன்" (5.1.10) என்றும், "என்னேத் தன்னுக்கி" (7.9.1,5,8,9) என்றும், "தன்னே என்னுக்கி" (7.9.7) என்றும், "யானும் தானுய் ஒழிந்தானே" (8.8.3) என்றும், "யானே நீயாகி என்னே அளித்தானே" (10.7.10) என்றும், "யானே என்னே அறியகிலாதே, யானே என்றனதே என்றிருந்தேன்; யானே நீ, என் உடைமையும் நீயே, வானே ஏத்தும் எம்வானவரேறே" (2.9.9) என்றும், "மனமும் வாசகமும் செய்கையும் யானும் நீ தானே" (8.1.8) என்றும், "என் நெஞ்சும் உயிரும் அவை உண்டு, தானே யாகி நிறைந்தானே" (10.7.1) என்றும், "என்னே முற்றும் உயிர் உண்டு, என் மாய ஆக்கை இதனுள் புக்கு, என்னே முற்றும் தானேயாய் நின்ற மாய அம்மான்" (10.7.3) என்றும், "என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை உணர்ந்தேனே" (8.8.4) என்றும், "சென்று

சென்று பரம்பரமாய் யாதுமின்றித் தேய்ந்தற்று* நன்று தீது என்று அறிவரிதாய் நன்றாய் ஞானங் கடந்ததே" (8.8.5) என்றும், "நன்றாய் ஞானங் கடந்துபோய், நல் இந்திரியம் எல்லாம் ஈர்த்து, ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ் உழப்பில் அதனை உணர்ந்து உணர்ந்து சென்று, ஆங்கு இன்ப துன்பங்கள் செற்றுக் களைந்து, பசை அற்றால், அன்றே அப்போதே வீடும்; அதுவே வீடும் வீடாமே"† (8.8.6) என்றும் பாடியுள்ளார். வைஷ்ணவம் உயர்சக்தி உடைத்ததாயிருப்பது அத்துவிதத்தை உடையதாதலாலே யன்றி, துவித சம்பிரதாயத்தால் அல்ல என்பது இங்கு குறிப்பாய் உணரத்தக்க உண்மையாகும்.

ஒருவன் கடவுளை எப்பெயரிட்டு எவ்வுருவில் ஏத்தினும், அவன் அத் தெய்வத்துக்கு ஊனாகி தனது தனி வியக்தித்துவத்தை முற்றும் இழந்தாலன்றி அவனது பக்தியானது பூரணத்துவம் அடையாது என்ற உண்மையையே மேற்கண்ட பாடல்களில் வெளியிட்ட இம் மகான்களின் அனுபவமும் தெளிவுபடுத்துகின்றதல்லவா? தன்னிழப் பாகிய அந் நிலையில்தான் கடவுளின் உண்மை சொரூபத்தை உள்ளவாறு உணர்ந்து அன்பு செய்ய இயலும்.

"எப்பெயரிட்(டு) எவ்வுருவில் ஏத்தினும்ஆர் பேர்உருவில்
அப்பொருளைக் காண்வழிஅ(து); ஆயினும்அம் — [மெய்ப்பொருளின்
உண்மையில்தன் உண்மையினை ஓர்ந்தொடுங்கி [ஒன்றுதலே
உண்மையில் காணல் உணர்."

— உள்ளது நாற்பது-8

---

*"சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்" என்று மணிவாசகர் 'கோயில் திருப்பதிகம்' 7வது பாடலில் கூறிய அனுபவம் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

†ஞானம் = புலனறிவு (relative knowledge); இந்திரியம் = புல இச்சைகளால் ஓடல்; பாழ் = சூன்ய இருள் (அகண்டமானது, ஏகமானது); பசை = வாசனை (tastes); அதுவே வீடும் வீடாமே = அதுவே விடுதலை செய்யும் மோக்ஷ நிலையாகும்.

ஆகையால் கடவுளின் உண்மையான அருட்செயலானது தன் பக்தனின் அகந்தையை அழிப்பதே யாகும். அதனால்தான் "அருணாசலம் என அகமே நினைப்பவர் அகத்தை வேரறுப்பாய் அருணாசலா" என்று அருணாசலனின் அருட்திறமையைப் போற்றி இவ் வக்ஷரமண மாலையைத் தொடங்குகிறார் ஸ்ரீ பகவான்.

மேற்கண்டவாறு இப் பாடலை ஒரு பிரார்த்தனை யாகவோ அடைவு கூறலாகவோ எடுத்துக் கொள்வது பொருந்தும். இப் பாடலை மேற்கண்ட எவ்வொரு வகையில் பொருள் கொண்டாலும் அது உன்னதமான கருத்துடைய தாகவும் ஆழமான பொருள் பொதிந்ததாகவும் காணப் படினும், இப் பாடலுக்கு முந்தைய இரு பாடல்களும் இதற்கு அடுத்துவரும் ஏழு பாடல்களும் பிரார்த்தனை வடி விலேயே அமைந்திருப்பதால், அதே பாவத்தையும் பொரு ளின் தொடர்ச்சியையும் அனுசரிப்பதற்காகவே இவ் விளக்க வுரையில் பிரார்த்தனை வடிவான மூன்று விதப் பொருள்கள் முதலில் விளக்கப்பட்டுள்ளன. மேற்கண்ட முதல் பொரு ளின்படி ஸ்ரீ பகவான் தான் அருணாசலனிடம் சாதுவாக வந்தது தனது வயிற்றுப் பசியைத் தீர்க்கும் சாதாரண உணவை வேண்டிப் பெறுவதற்காக அல்ல வென்றும், கொழுந்துவிட்டு எரியும் தனது ஞானப் பசியைத் தீர்க்கக் கூடிய ஆன்மஞான அமுதை வேண்டிப் பெறுவதற்காகவே தான் வந்திருப்பதாகவும் உணர்த்தியிருப்பதால், அடுத்த பாடலில் தன் சித்தத்தில் மூண்டு எழுந்து எரிந்து கொண்டிருக்கும் ஞானப்பசியாகிய தீயை ஞானமுதம் அளித்துத் தணிக்குமாறு வேண்டுகிறார்.

**29. சித்தங் குளிரக்கதி ரத்தம்வைத் தமுதவா**
**யைத்திற வருண்மதி யருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! அருள் மதி! சித்தம் குளிரக் கதிர் அத்தம் வைத்து அமுத வாயைத் திற.

**பொ-ரை:** அருணாசலா! அருட் சந்திரனே! (ஆசைத் தாபத்தால் வறண்ட) என் சித்தம் குளிரும்படியாக உன் குளிர்ந்த அருட்கிரணங்களாகிய கைகளை என்மீது வைத்து அமுத (மோக்ஷ) வாயிலைத் திறந்தருள்வாயாக.

**வி-ரை:** நாம் ஒரு தனி ஜீவ வியக்தியாக எழும் பொழுது, பேரின்பக் கடலாகிய ஆன்ம சொரூபமான அருணாசலனிடமிருந்து பிரிந்து அப் பேரின்பத்தை நமக்கு வேறாக உணர்கிறோம். ஆகையால் மீண்டும் அருணாசல னோடு ஐக்கியமாகும் வரை நாம் இழந்த பூரண இன்ப நிலையை மீண்டும் அடைய முயலாமல் நம்மால் ஒரு கணமும் சும்மா இருக்க முடியாது. ஆனால் நம்மை ஓர் அற்ப ஜீவனாகக் குறுக்கிக்கொண்டதால், நமது உண்மை சொரூபத்தின் குறுக்கப்படாத மீதி பகுதியைப் பல பொருள் கள் அடங்கிய உலகமாகவும் அவ் வுலகை ஆள்கின்ற ஈசுவரனாகவும் கண்டு, நமக்கு அன்னியமாகத் தோன்றும் அப் பொருள்களில்தான் இன்பம் அடங்கியுள்ளது என்று நினைத்து பிரமை கொள்கிறோம். இந்தப் பிரமையினால் அப் பொருள்கள்மீது ஆசை கொண்டு, அவ் வாசையை நிறைவேற்றிக் கொள்ள பல கருமங்களில் ஈடுபடுகிறோம். நாம் இவ்வாறு செய்யும் கருமங்களின் விளைவாக இன்ப துன்ப அனுபவங்களைப் பெற்று, அவ் வனுபவங்களின் விளைவாய் புறப்பொருள்களின் மீது கொள்ளும் விருப்பு-வெறுப்பு வடிவில் ஆசைகள் பெருகுகின்றன. இவ்வாறு நம் உள்ளமானது வாசனைகளாகக் குவிந்து கொண்டுள்ள விருப்பு-வெறுப்புகளின் களஞ்சியமாகிறது. இக் களஞ்சியமே 'சித்தம்' எனப்படுவதாகும்.

மனம் என்பது ஒன்றே யாயினும், ஒரே மனிதன் சமூகத்தில் மேற்கொள்ளும் வெவ்வேறு கடமைகளுக்கேற்ப மனிதன், மகன், கணவன், தந்தை, எழுத்தன், இந்து என்றவாறு வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்படுவது போன்று, அவ் வொரே மனம் அது மேற்கொள்ளும் வெவ் வேறு தொழிற்களுக்கேற்ப மனமென்றும், புத்தியென்றும், சித்தமென்றும், அகங்காரமென்றும் பெயர் பெறுகிறது. சச்சித்தானந்த சொரூபமான ஆன்மாவின் பிரதிபிம்பமான 'நான்' என்னும் ஜீவபோதம் ஆன்மாவினின்றும் எழும் போது, அது சத் அம்சத்தின் பிரதிபிம்பமான அளவுக்குட் பட்டதோர் கிரியா சக்தியையும், சித் அம்சத்தின் பிரதி பிம்பமான அளவுக்குட்பட்டதோர் ஞான சக்தியையும், ஆனந்த அம்சத்தின் பிரதிபிம்பமான அளவுக்குட்பட்ட தோர் இச்சா சக்தியையும் தன்னகத்தே கொண்டு எழு

கிறது. கிரியா சக்தி நினைக்கும் தொழிலுடைய மனம் (மனோமயகோசம்) ஆகவும், ஞான சக்தி விவேகிக்கும் தொழிலுடைய புத்தி (விஞ்ஞானமயகோசம்) ஆகவும், இச்சா சக்தி சங்கற்பிக்கும் தொழிலுடைய சித்தம் (ஆனந்த மயகோசம்) ஆகவும் செயல்படுகிறது. 'நான் நினைக்கிறேன், நான் விவேகிக்கிறேன், நான் விரும்புகிறேன்' என்றவாறு இம் மூன்று சக்திகளாகச் செயல்படும் 'நான்' என்னும் ஒரே தற்போத உணர்வுதான் அகங்காரம் எனப்படுவதாகும். இந்த ஒரே அகங்காரம் நினைக்கும் தொழிலைச் செய்யுங்கால் மனம் என்றும், விவேகிக்கும் தொழிலைச் செய்யுங்கால் புத்தி என்றும், சங்கற்பிக்கும் தொழிலைச் செய்யுங்கால் சித்தம் என்றும் அழைக்கப்படுகிறது. எனவே 'சித்தம்' என்னும் சொல் பொதுவாக மனத்தைக் குறித்தாலும், அது குறிப்பாக விருப்பு-வெறுப்பு வடிவில் எழுந்து கொண்டிருக்கும் வாசனைக் கூட்டமாகிய மனத்தின் இச்சை அம்சத்தையே குறிப்பதாகும்.

நாம் உண்மையில் சித்சொரூபமாகிய ஆன்மாவேயாயினும், ஐம்புல விஷயங்களின் பொய்ச் சேர்க்கையால் இப்போது 'சித்தம்' என்பதாய் விளங்குகிறோம். எனவே 'சித்தம்' என்னும் சொல்லிலுள்ள 'தம்' என்னும் பகுதி இப் பொய்ச் சேர்க்கைக்குக் காரணமான மாயையைக் குறிக்கிறது. நிறமற்ற ஒரு பளிங்குக்கண்ணாடி ஒரு செந்நிற மலரின் அணுக்கத்தால் சிகப்பு நிறமாகத் தோன்றினும், அம் மலரின் சேர்க்கையால் அது உண்மையில் எந்த விதமான மாற்றமும் தாக்கமுமின்றியே உள்ளது. அது போலவே, மாயையின் சேர்க்கையால் ஆன்மா சித்தமாக மாறியது போன்று தோன்றினும், அது உண்மையில் அம் மாயையால் தாக்கமும் மாற்றமுமின்றியே உள்ளது. இதையே ஸ்ரீ பகவான்

> "பளிங்கின்கண் ணேசெம் பரத்தநிறம் போல
> விளங்கத்தி யாச விடயக் — களங்காம்
> தகரமறு சித்தம் தனிப்பரசச் சித்தாம்
> தகரமா யாவா சகம்."

என்று 'குருவாசகக் கோவை' 244வது பாடலில் கூறியுள்ளார்.

மேற்கண்டவாறு போலி உபாதியான இச் சித்தம் விருப்பு-வெறுப்புகளாகிய வாசனைகளின் கூட்டமே யாகையால், வெளிப் பொருள்களின் மீதுள்ள ஆசையாகிய கனலால் மிக நொந்து சதா சலித்துக் கொண்டிருப்பதே இதன் இயல்பாகிறது. ஆயினும், இந்த ஆசைத் தீயினால் மிக வேதனைப்பட்டும் கணக்கற்ற பல பிறவிகள் தோறும் அது திருவருளால் சுத்தமடைந்து பக்குவம் எய்துகிறது. இவ்வாறு அது மேன்மேலும் சுத்தி பெறவே — அதாவது, அதன் விஷயவாசனைகள் மேன்மேலும் பலகீனப்படவே —, ''தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி'' (போற்றித் திருவகவல்-42) என்று மாணிக்கவாசகர் கூறியபடி, புறப் பொருள்களின் மீதுள்ள அதன் ஆசையானது மடைமாற்ற மடைந்து உலகை ஆளும் பரமசக்தியாகிய ஈசுவரனின் பால் நாட்டம் கொள்கிறது. ஆனால், எவ்வாறு புறப் பொருள்களின் மீதுள்ள சித்தத்தின் ஆசைத் தீயானது இன்ப நுகர்ச்சியினால் என்றுமே தணிக்கப்பட முடியாதோ, அவ்வாறே கடவுளின்பால் கொள்ளும் ஆசையானது — பக்தியானது — கடவுளைத் தனக்கு அன்னியமாகக் கருதி அனுபவிக்கும் வரை திருப்தியடைந்து தணிக்கப்பட முடியாது. ஆகையால் சித்தமானது உருக்கொண்டு தோன்றிய முதல் உருவழிந்து ஆன்மாவில் ஒடுங்கி அழிவுறும் வரை தனது தணிக்கமுடியாத ஆசைகளால் வெந்து சீரழிகிறது. அதனால்தான் இப் பாடலில் ஸ்ரீ பகவான் ஆசைத் தீயினால் வெந்து கொண்டிருக்கும் தனது சித்தத்தைக் குளிர்விக்குமாறு அருணாசலனிடம் பிரார்த்திக்கின்றார்.

கடவுள் தனக்கு அன்னியமின்றி விளங்குகிறான் என்னும் மெய்ஞ்ஞானானுபவம் அவனருளாலேயே ஏற்படும் வரை, அவன் மீதுள்ள ஆசைக்கனல் ஒரு போதும் முற்றும் தணியாது. அதனால்தான் ஸ்ரீ பகவான் 40வது பாடலில் ''ஞானமில்லாது உன் ஆசையால் தளர்வு அற ஞானம் தெரித்தருள் அருணாசலா'' என்றும், 55வது பாடலில் ''நின் எரி எரித்து எனை நீறாக்கிடும் முன், நின் அருள் மழை பொழி அருணாசலா'' என்றும், 66வது பாடலில் ''பித்து விட்டு உனை நேர் பித்தன் ஆக்கினை; பித்தம் தெளி மருந்து அருள் அருணாசலா'' என்றும் பிரார்த்திக்கின்றார். ''பற்றுக பற்றற்றான் பற்றினை; அப் பற்றைப்

பற்றுக பற்று விடற்கு'' (திருக்குறள்–350) என்று திருவள்ளுவர் கூறியபடி, வெளிப்பொருள்களின் மீதுள்ள எல்லா ஆசைகளையும் விடுவதற்கு முதலில் கடவுளின் மீது ஆசை தேவையேயாயினும், ''ஆசை அறுமின்கள், ஆசை அறுமின்கள், ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்'' (திருமந்திரம் –2615) என்று திருமூலர் கூறியபடி, சித்தம் ஆன்மாவில் மூழ்கி உருவழிந்த பேரின்ப நிலையை அடைவதற்கு அக்கடவுளாசையும் முடிவில் விடப்பட வேண்டியதாகும். கடவுள் எப்போதும் 'நான்' என்ற வடிவில்தான் இருந்து விளங்குகிறார் என்ற அனுபவ ஞானமே கடவுள் மீதுற்ற பித்தைத் தெளிவிக்கும் மருந்தாகும். இந்த அனுபவஞானம் கடவுள் தனது அவ்வியாஜ கருணையினால் நம் உள்ளத்தில் 'நான்–நான்' என்று ஸ்புரிக்கும்போதுதான் ஏற்படுகின்றதாதலால், இப் பாடலில் ஸ்ரீ பகவான் ''உன்மீது கொண்ட ஆசைத் தீயால் கொதித்து உன் அருளுக்காக ஏங்கி தினமும் உன்னிடம் கதறி அழுது உருகி வருந்திக் கொண்டிருக்கும் என் சித்தத்தைக் குளிரவைக்க என்மீது உன் கதிரத்தம் வைத்து அருள்வாயாக'' என்று பிரார்த்திக்கின்றார். இங்கே ''கதிர் அத்தம்'' (கதிரான ஹஸ்தம்) என்பது ஆசைத் தீயைத் தணித்து சித்தத்தைக் குளிர்விக்கவல்ல தன்னுணர்வின் தெளிவையும், ''கதிர் அத்தம் வைத்தல்'' என்பது அந்தத் தன்னுணர்வின் தெளிவாய் உள்ளத்தில் ஸ்புரித்துக் காட்டும் அருணாசலனின் அருட் செயலையும் குறிப்பனவாம்.

சுகத்தைத் தேடி புறமுகப்படும் நாட்டத்தை எல்லாம் விட்டுவிட்டு அகமுகப்பட்டு 'நான்' என்று விளங்கும் அறிவின் உண்மையை நாடி ஆன்மாவில் மூழ்கி ஐக்கியமாகும்போதுதான் சித்தம் சாந்தி பெறுவது சாத்தியமாகும். மனம் இவ்வாறு தன் கவன சக்தியை உண்முகமாகத் திருப்ப முயலும் போது அதன் முயற்சி ரூபம் அழிந்து ஒடுங்க ஆரம்பிக்கிறது. எனவே அது தனது சொந்த முயற்சியினால் ஓரளவுதான் உள்ளே செல்லமுடியும். அருணாசலன் உள்ளத்தில் 'நான்-நான்' என்று ஸ்புரித்துத் தன்னை விளக்கிக் காட்டும்போதுதான் மனம் தன்னுணர்வின் பூரணத் தெளிவை அடைந்து ஆன்மாவில் மூழ்கி ஒன்றாகிவிடும். அருணாசலனின் கதிரொளியாகிய இந்த

ஸ்புரிப்பே அருளின் உண்மை வடிவமாதலாலும், இதனாலேயே சித்தத்தைக் குளிர்விக்க முடியுமாதலாலும், இப் பாடலில் ஸ்ரீ பகவான் அருணாசலனை "அருள்மதி" என்று அழைக்கின்றார்.

சித்தத்திலுள்ள 'சித்' என்ற பகுதியே இங்கு 'அமுத வாய்' என்று குறிப்பிடப்படுகிறது. நமது சித்சொரூபம் 'தம்' என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ள மாயையால் மூடப்பட்டிருக்கும்வரை, அமுதவாய் என்பது மூடப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இப் பாடலில் ஆம்பற் பூ என்று நேரிடையாகக் குறிப்பிடப்படாவிட்டாலும், அருணாசலன் சந்திரனுக்கு ஒப்பிடப்பட்டிருப்பதால், குளிர்ந்த நிலவொளியில் மட்டுமே மலரும் இறுகக் குவிந்த ஆம்பற் பூவின் மொட்டுக்கு சித்தம் மறைமுகமாக ஒப்பிடப்பட்டிருப்பதாக நாம் அறிந்துகொள்ள வேண்டும். அருண்மதியான அருணாசலன் தனது குளிர்ந்த அருள்ஞானக் கிரணங்களாகிய கைகளால் சித்தமாகிய ஆம்பல் மொட்டைத் தொடும்போது, அக் குளிர்ச்சியால் அந்த ஆம்பற் பூ மலர்ந்து அதனுள்ளே இதுவரை மூடிக்கிடந்த அமுதவாய் திறக்கிறது. இங்கு சித்தமாகிய ஆம்பல் மொட்டின் மலர்ச்சி சித்ஜடக்கிரந்தி பேதத்தையே குறிக்கிறது. இக் கிரந்திபேதம் நிகழும்போது, 'தம்' என்ற சொற்பகுதியால் குறிக்கப்பட்டுள்ள மாயா உபாதியான ஜடதேகம் கழன்று சித்தம் அதன் இயல்பான நிலையாகிய குளிர்ந்த சிதாகாசமாக ஒளிர்கிறது. சித்தாகிய இந்த வெட்டவெளியே — பரவெளியே — இங்கே திறந்த அமுதவாயாக உருவகப் படுத்தப்பட்டுள்ளது.

'அமுதம்' (அ + ம்ருதம்) என்ற சொல்லின் பொருள் 'இறப்பற்றது' என்பதாகும். கிரந்திபேதத்தின் விளைவாக சாவுக்குரிய தேகத்திற்கு வேறான சித்சொரூபமே நாம் என்னும் அறிவு அபரோக்ஷமாக உணரப்படுவதால், அப் போது மிஞ்சியிருக்கும் நிலை சாவற்ற பதமே யாகும். எனவே "அமுத வாயைத் திற" என்ற சொற்களுக்கு 'மரணமற்ற நிலையாகிய மோக்ஷத்தின் வாயிலை (அனுபவத்தை)த் திறந்தருள்வாய்' என்றும் பொருள் கொள்ளலாம்.

'அமுதம்' என்ற சொல்லுக்கு 'இனிமையானது' அல்லது 'இன்பமானது' என்பதும் பொருளாகும். உண்மையான இன்பம் நம் உள்ளத்திலேதான் உள்ளது. சித்தமானது இன்பத்தை வெளியே தேடும்வரை அது உண்மையான பூரண இன்பத்தை ஒருபோதும் அடையப் போவதில்லை. அருணாசலன் நம் உள்ளத்தில் 'நான்–நான்' என்று ஸ்புரிப்பதன் மூலம் நம் கவனத்தை உள்ளே கவர்ந்திழுக்கும் போதுதான் நம்மால் பேரின்பத்தை அனுபவிக்க இயலுமாதலால், அவன் இவ்வாறு ஸ்புரிப்பதே சித்தத்திலுள்ளஅமுதம் பெருக்கும் வாயைத் திறப்பதாகும். ஆகையால் இப் பாடலில் ஸ்ரீ பகவான் "என் சித்தமாகிய ஆம்பற் பூவினுள்ளே ஊறுவதாகிய பேரின்பமான அமுதத்தைப் பெறுவதற்காக 'நான்–நான்' என்று தொட்டுக் காட்டி — ஸ்புரித்து — மூடிய இதழ்க் கட்டுகளை (இதயக் கிரந்தியை)ப் பேதித்தருள்வாயாக" என்று பிரார்த்திக்கின்றார்.

சித்தத்தை ஓர் ஆம்பற் பூவின் மொட்டுக்கு ஒப்பிட்டுப் பேசும் யோகசாஸ்திரங்களில் அந்த ஆம்பற் பூ அதோமுகமாகவும் (கீழ் நோக்கிய முகமாகவும்) மூடிக் கிடப்பதாகவும் சொல்லப்பட்டுள்ளது. ஆம்பற் பூ அதோமுகமாய் இருப்பதாகச் சொல்லப்படுவதின் தாற்பரியமாவது சித்தத்தின் கவனம் வெளியேயுள்ள உலகப் பொருள்களின் மீதே எப்போதும் திரும்பியுள்ளது என்பதும், அது மூடிக் கிடக்கிறது என்று சொல்லப்படுவதின் தாற்பரியமாவது அமுதவாய் எனப்படும் பேரின்ப ஊற்று சித்தத்திலே அடைபட்டுக் கிடக்கிறது என்பதுமாகும். சந்திரனின் கிரணங்கள் ஆம்பற் பூவின்மீது படும்போது அது ஊர்த்துவ முகமாகி (மேல் நோக்கிய முகமாகி) மலரும். இதன் தாற்பரியமாவது அருட்சந்திரனை கடவுளின் குளிர்ந்த அருளொளியாகிய தன்னுணர்வின் தெளிவு உள்ளத்தில் ஸ்புரிக்கும்போது சித்தம் அகமுகமாகி இதயாகாசமாய் மலரும் என்பதாகும். சித்தம் இவ்வாறு மலரும்போது, அதில் அடைபட்டுக் கிடக்கும் அமுதவாய் திறந்து கொள்ளவே அதனின்றும் பேரின்பம் ஊற்றெடுத்துப் பெருகுகிறது. அகமுகப்படுவதால் ஏற்படும் இந்தப் பேரின்ப அனுபவத்திற்காகத்தான் ஸ்ரீ பகவான் இப் பாடலில் பிரார்த்திக்கின்றார்.

27வது பாடலைப் போலவே இப் பாடலும் கிரந்தி பேதத்திற்கான பிரார்த்தனை யாகும். அந்தப் பாடலில் இதயக்கிரந்தியும் அதனை பேதிக்கும் அருணாசலனும் முறையே தாமரை மொட்டாகவும் அதனை மலர்த்தும் சூரியனாகவும் உருவகப்படுத்தப்பட்டிருப்பதற்கு மாறாக, இப் பாடலில் அவை ஆம்பற் பூ மொட்டாகவும் அதனை மலர்த்தும் சந்திரனாகவும் உருவகப்படுத்தப்பட்டுள்ளன. இவ் விரு பாடல்களிலும் இரு வேறான மாறுபட்ட உருவகங்களை ஸ்ரீ பகவான் கையாண்டிருப்பது ஏன்? 27வது பாடலில் ஆவரண சக்தியின் காரணமாக எழும் அஞ்ஞான இருளின் நீக்கத்திற்காக ஸ்ரீ பகவான் பிரார்த்திப்பதால், அங்கு அருணாசலனை இருளைப் போக்கும் சூரியனுக்கு ஒப்பிட்டும், இப் பாடலில் விக்ஷேப சக்தியின் காரணமாக விளையும் ஆசைத்தீயின் வெப்பம் தணிவதற்காக அவர் பிரார்த்திப்பதால், இங்கு அருணாசலனை வெப்பத்தைத் தணிக்கும் குளிர்ந்த கிரணங்களைக் கொண்ட சந்திரனுக்கு ஒப்பிட்டும் பாடியுள்ளார். மாயையின் இவ் விரு சக்திகளுள் ஆவரணமே விக்ஷேப சக்திக்கும் காரணமான மூல சக்தி. நனவு, கனவு, சுழுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளிலும் ஆவரண சக்தி ஆன்ம உணர்வின் முழுப் பிரகாசத்தைத் தடுத்தும் மறைத்தும் செயல்படுகிறது ஆனால் சுழுப்தியிலன்றி நனவிலும் கனவிலும்மட்டுமே விக்ஷேப சக்தி நானாவிதக் காட்சியைத் தோற்றுவித்து செயல்படினும், துயிலிலுங்கூட அது வித்து வடிவில் இருந்தே வருகிறது. ஆகையால் மூலமான ஆவரண சக்தி அழிக்கப்படும்வரை, விக்ஷேப சக்தியானது தற்காலிகமாக ஒடுங்கியிருக்குமே யன்றி முற்றிலும் அழிபடாது; ஆனால் ஆவரண சக்தி அழிபட்டதும் விக்ஷேப சக்தியானது ஒரு கணமும் உயிர்த்திருக்க முடியாது. மாயையின் இவ் விரு சக்திகளின் அழிவும் ஏக காலத்தில் நிகழ்வது. அதுவும் பிரகாசமும் குளிர்ச்சியுமான ஞானவொளியாகிய அருணாசலன் உள்ளத்தில் ஸ்புரித்து சித்சடக்கிரந்தியை அழிப்பதாலேயே நிகழக் கூடியதாகும். இருளை நீக்கும் கதிரவனின் தன்மையையும் வெப்பத்தைத் தணிக்கும் சந்திரனின் தன்மையையும் கொண்டதாக அருணாசலனின் அருளொளி விளங்குவதால், அவன் ஞான சூரியனாகவும் அருள் மதியாகவும்

பொருத்தமாக வர்ணிக்கப்பட்டுள்ளான். இதே போன்று, இதயத்தில் 'நான்' என்ற பிரஜ்ஞையாய் ஸ்புரித்து தன்னை விளக்கிக் காட்டும் அருணாசலனின் அருட்செயலானது 27வது பாடலில் சூரியனின் ஒளிக்கதிர்களுக்கும், இப் பாடலில் சந்திரனின் குளிர்ந்த கிரணங்களுக்கும் பொருத் தமாக உவமித்துக் காட்டப்பட்டுள்ளது.

சில யோக சாஸ்திர நூல்கள் ஸஹஸ்ராரத்தின் கண்ணே மூடப்பட்டுள்ள ஓர் அமிர்த துவாரம் உள்ள தாகவும், சமாதி நிலையில் அது திறந்து அதனின்றும் அமிர்த தாரை கீழ் நோக்கி வழிவதாகவும் பேசுகின்றன. சிலர் இப் பாடலில் சொல்லப்பட்டுள்ள அமுத வாயானது ஸஹஸ்ராரத்திலுள்ள அவ் வமுத துவாரத்தையே குறிப்பிடு வதாகக் கொள்வாருமுண்டு. ஆனால் இது சரியன்று; ஏனெனில், யோகிகளால் அனுபவிக்கப்படும் இந்த அமிர்த தாரையானது ஸ்ரீ பகவானால் இப் பாடலில் வேண்டப்படும் உண்மையான அமுத அனுபவம் — அழிவற்ற நிலையின் அனுபவம் — அல்ல. யோகியானவன் பிராணாயாமம், தனக்கு அன்னியமான ஒரு லட்சியத்தின்மீது ஏகாக்கிர தியானம் முதலிய யாதொரு உபாயத்தாலும் குண்டலினி சக்தியை — உடல் முழுவதும் பரவிக் கிடக்கும் 'நான்' என்னும் உணர்வை — மனத்தை — ஸஹஸ்ராரத்தை நோக்கி இழுத்துக் கொள்ளும் போது, அவன் ஐம்புல அறிவைக் கடந்து சமாதியில் ஆழ்கிறான். அவனது மனம் அப்போது பற்றுவதற்கு யாதொரு அன்னியப் பொருளும் இல்லாததால், ஸஹஸ்ராரத்தினின்றும் கீழிறங்கி அமிர்த நாடி வழியே இதயத்தை அடைகிறது. மனம் இவ்வாறு கீழிறங்கிய போது, ஸஹஸ்ராரத்திலும் அமிர்த நாடியிலும் ஒரு வெற்றிடம் ஏற்படுகிறது. இதயத்தில் ஆழும் மனத்தினால் காலியாக விடப்படும் இவ் வெற்றிடம் மூளையினின்றும் கீழ்நோக்கி இறங்கும் இன்ப உணர்வாக யோகிகளால் அனுபவிக்கப்படுகிறதாகையால், இது கீழ்நோக்கி வழியும் அமிர்த தாரையாக யோகசாஸ்திரங்களில் வர்ணிக்கப்படு கிறது. ஆனாலும் யோக சாதனைகளால் வலிந்து கொணரப் படும் இச் சமாதிநிலையில் யோகியின் மனமானது தூக்கத் தில் ஒடுங்குவது போல் தன்னுணர்வின் தெளிவின்றி இதயத்தில் ஒடுங்குவதால், கீழ்நோக்கி வழியும் அமிர்த

தாரை அனுபவமானது தற்காலிக மனோலயமே யன்றி உண்மையான ஆன்ம ஞானானுபவமாகாது. அதாவது, இந்த அமிர்த தாரை அனுபவமானது நாடீ பந்தக் கிரந்தி தற்காலிகமாக விடுபடுவதால்உண்டாவதாயிருக்க, உண்மையான அமுத அனுபவமாகிய ஆன்மஞானமோ அபிமானக் கிரந்தியின் நிரந்தரமான பேதமாகிய மனோநாசத்தால் தோன்றுகிறது*. நித்திரை, மரணம், யோகசமாதி ஆகிய விக்ஷேப சக்தி தொழிற்படாத நிலைகளில் நாடீ பந்தக் கிரந்தி தற்காலிகமாக விடுபடுகிறது. ஆனால் அபிமானக் கிரந்தி முழுதும் பேதிக்கப்படுவது ஆன்மஞானப் பேரொளியினால் விக்ஷேப சக்தி ஆவரண சக்தியோடு ஒருங்கே அழிபடும் நிலையில்தான். எனவே, ஸஹஸ்ராரத்திலிருந்து இறங்குவதாக யோகிகளால் அனுபவிக்கப்படும் அமிர்த தாரை அனுபவம் உண்மையான நித்திய பூர்ண பேரின்ப அனுபவமாகாது. மேல்-கீழ், ஏறுவது-இறங்குவது ஆகிய எந்த பேதத் தோற்றத்திற்கும் இடமேயில்லாத உண்மையான பேரின்ப அனுபவமானது மனம் தன்னுணர்வின் பூரணத் தெளிவோடு இதயத்தில் மூழ்கும் போதுதான் கிட்டுகிறது. ஆகையால் உண்மையான அமுத நிலையம் இதயமே யன்றி ஸஹஸ்ராரமல்ல.

சித்தத்தில் கனன்றுகொண்டிருக்கும் ஆசைத் தீயானது நித்திரை, லயம் ஆகிய நிலைகளில் தற்காலிகமாகத் தணிந்து அடங்கியிருந்தாலும், அது முற்றும் அணைந்து போகாமல் உயிர்த்திருந்துகொண்டு நித்திரையோ லயமோ முடிவுற்றதும் மீண்டும் எழுந்து கொழுந்துவிட்டு எரிய ஆரம்பிக்கும். ஆகையால் சித்தம் என்று இதுகாறும் தோன்றி வந்தது உண்மையில் உபாதிகளற்ற சிதாகாசமே என்ற தெளிந்த அறிவு விளங்கும் மனோநாச நிலையில்தான் ஆசைத் தீ முற்றும் அணைந்து சித்தம் உண்மையாகவே குளிர்கின்றது. எனவே அமுத அனுபவமாகிய இந்த மனோநாச நிலையைத்தான் இப் பாடலில் ஸ்ரீ பகவான் வேண்டுகின்றார்.

---

*நாடீ பந்தக் கிரந்தி, அபிமானக் கிரந்தி ஆகியவற்றின் விளக்கத்தை 'ஸ்ரீ ரமண வழி' முதற் பாகம் 8வது அத்தியாயத்தில் காணலாம்.

இப் பாடலுக்கு மற்ருெரு பொருளாவது "என் சித்தம் குளிரும்படியாக உன் அருட்கிரணங்களாகிய ஹஸ்தங்களை என் சிரத்தின்மீது வைத்து உன் அமிர்த வசனங்களால் உபதேசித்தருள்வாயாக" என்பதாகும். அதாவது, பல சம்பிரதாயங்களில் குருவானவர் தமது சீடனின் சிரசின்மீது தமது கரத்தை வைத்து அவனது செவியில் அமுதம் போன்ற தமது உபதேச வசனங்களை உச்சரித்து தீட்சை அளிப்பது மரபாகும். இந்த ஹஸ்த தீட்சையினுல் குருவானவர் சீடனின் சித்தத்தின் செயற் பாடுகளைத் தணிவித்து, அதன்மூலம் தமது உபதேச மொழிகளின் உட்பொருளை உணரக் கூடிய தெளிவை அவனது உள்ளத்தில் தூண்டுகிருர் என்று நூல்கள் சொல் வதுண்டு. இந்த மரபே இப் பாடலில் குறிப்பாகக் காட்டப் பட்டுள்ளது. ஆனுல் மனித உருவிலன்றி இம் மலைவடிவிலே அருணுசலன் அசல மோன குருவாக விளங்குவதால், அவனது ஹஸ்த தீட்சை மனித கரத்தினுல் சீடனின் தலை மீது வைக்கக் கூடிய ஸ்தூல ஹஸ்த தீட்சையாக இருக்க முடியாது; அது போன்றே, அவனது உபதேசமும் வாய் மொழியாக இருக்க முடியாது. மாருக, அவனது ஹஸ்த தீட்சையானது 'நான்–நான்' என ஸ்புரித்து விளங்குவதால் சீடனின் உள்ளத்தை ஸ்பரிசித்தருளுவதும், அவனது உபதேசமானது அசல மோன வடிவில் சீடனின் உள்ளத்தில் ஆன்ம விளக்கமாக விளங்குவதுமே யாகும். தொட்டுக் காட்டுதலாகிய 'நான்–நான்' என்ற ஸ்புரிப்பினுல் சீடனின் கவனம் ஆன்மாபிமுகமாக்கப்பட்டு அவனது சித்தத்தின் சலனம் தணிக்கப்படுகிறது. சித்தம் இவ்வாறு உண்முகப்பட்டு நிச்சலமாய் நிற்கும்போதுதான், 'நான்–நானே' என்ற விளக்க வடிவில் உள்ளத்தில் சதா நிகழ்ந்து கொண்டிருக்கும் மௌனோபதேசத்தை உணரக் கூடிய தெளிவை யடையும். இந்த மௌனோபதேசத்தை உணர் வதே ஆன்மஞான சித்தியாகிய அமுத அனுபவமாகும். எனவே இவ் விரண்டாவது பொருளின் உட்கிடக்கை முதலாவது பொருளின் உட்கிடக்கையினின்றும் மாறுபட்ட தன்று.

30. **சீரை யழித்துநிர் வாணமாச் செய்தருட்**
**சீரை யளித்தரு ளருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! சீரை அழித்து, நிர்வாணமாச் செய்து, அருள் சீரை அளித்து அருள்.

**பொ-ரை:** அருணாசலா! லௌகீக சீர்மைகளை யெல்லாம் என்னிடம் சேராதபடி நீ அவற்றை விலக்கி, என் நிஜசொரூபமாகிற பரிநிர்வாண நிலையில் என்னை நிறுத்தி, உன் அருட் சீர்மையை எனக்கு அளித்தருள்வாயாக.

**வி-ரை:** 'சீரை' என்னும் சொல்லை 'சீர்' (சிறப்பு) என்னும் சொல்லின் இரண்டாம் வேற்றுமையாகவோ, அல்லது 'சீரை' (ஆடை) என்னும் சொல்லின் முதல் வேற்றுமை இரண்டாம் வேற்றுமையாகக் கையாளப்பட்டுள்ளதாகவோ கொண்டு இரு விதத்தில் பொருள் காணலாம். இச் சொல்லை இரண்டாம் வேற்றுமையாகக் கொண்டு பொருள் கண்டால், 'சீரை அழித்து' என்ற சொற்கள் குலச் சிறப்பு, பெற்றோர் வழிச் சிறப்பு, பிதிரார்ச்சிதப் பொருட் சிறப்பு, சுயார்ச்சித உடைமைச் சிறப்பு, பந்த பாசச் சிறப்பு, தேக வலிமைச் சிறப்பு, உடலழகுச் சிறப்பு, ஆரோக்கியச் சிறப்பு, கல்விச் சிறப்பு, பதவிச் சிறப்பு, பட்டங்களின் சிறப்பு, நற்குணச் சிறப்பு, துறவுச் சிறப்பு, பெயர்-புகழ்ச் சிறப்பு, அஷ்ட சித்தி அடைவுச் சிறப்பு முதலிய அகந்தைச் சிறப்புக்கள் யாவற்றையும் அழித்தலைக் குறிக்கும். இத்தகைய போலிச் சிறப்புக்களை ஆசிரயித்தே 'நான் இன்னார்' என்ற வடிவில் எழுகின்ற அகந்தையுணர்வு ஓங்கி வலுப்பெறுகிறது. மாறாக, 'சீரை' என்ற சொல்லுக்கு 'ஆடை' என்று பொருள் கொண்டால், 'சீரை அழித்து' என்ற சொற்கள் நாம் போர்த்தியுள்ள பஞ்ச கோசங்களாகிய ஆடையைக் களைதலைக் குறிக்கும். மேலே குறிப்பிட்ட அகந்தைச் சிறப்புக்களும் பஞ்ச கோசங்களும் நம் நிஜ சொரூபத்தை மூடி மறைக்கின்ற உபாதிகளாகையால், 'சீரை' என்னும் சொல்லை எவ்வகையில் பொருள் கொண்டாலும், இப் பாடல் உபாதிகளின் அழிவுக்கான பிரார்த்தனையே என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

உபாதிகளின் அழிவு என்பது அவ் வுபாதிகளின் மீது நமக்குள்ள அபிமானத்தின் அழிவே யாகும். மற்ற எல்லா உபாதிகளின் மீதான அபிமானம் தேகாபிமானத்திலேயே வேரூன்றியுள்ளதால், இங்கு 'சீரை அழித்தல்' என்ற சொற்களுக்கு தேகாபிமான அழிவுதான் பொருளாகும் என்பதை நாம் உணரவேண்டும். ஆகையால் 27 மற்றும் 29வது பாடல்களைப் போலவே இப் பாடலும் கிரந்திபேதப் பிரார்த்தனையே யாகும். தேகாதி உபாதிகள் யாவும் நீங்கு வதால் இதயக் கிரந்தி பேதிக்கப்படும்போது, ஜீவ வியக்தித் துவம் இருப்பற்று முற்றும் அழிகிறது. ஜீவ வியக்தித்துவம் முற்றும் அழிந்த இந் நிலையே 'நிர்வாணம்' எனப்படு வதாம். அன்னியத் தோற்றம் எதுவும் காணப்படாத வெற்றுவெளியாகிய இந் நிர்வாண நிலையில் தனித்து விளங்கும் உபாதிகளற்ற சச்சிதானந்த இயல்பையே இப் பாடலில் ஸ்ரீ பகவான் அருணாசலனின் அருட்சீர் என்று வர்ணிக்கின்றார். எனவே, அகந்தைச் சீரை அழித்தலும், நிர்வாணமாச் செய்தலும், அருட்சீரை அளித்தலும் உண்மையில் முவ்வேறு தனித்தனி செயல்களல்ல; இவை மூன்றும் ஒன்றே யாகும்.

திட வைராக்கியத்துடனும் ஆராக் காதலுடனும் ஆன்மாவை நாடி அறியும் முயற்சியில் ஈடுபடும் சாதகன் ஒருவன் தன் மனத்தை உண்முகப்படுத்த முயலும்போது, அவன் உடலாதி உபாதிகளின் நழுவுதலை அனுபவித்து, அதனால் தான் இதுகாறும் 'நான்' என்று அபிமானித்து வந்த உபாதிகள் அனைத்தும் நழுவிய பின் மிஞ்சும் நிலையை 'பாழ்' என்று உணருகிறான். அதனால்தான் பௌத்தர் போன்ற சில மதவாதிகள் நிர்வாண நிலையானது மகாசூன்யம் என்று சொல்கின்றனர். ஆனால் அவர்கள் சாதனையின் முடிவாக அனுபவிக்கும் நிலை சூன்யமாக உணரப்படும்வரை, அது பாரமார்த்திக நிலையாகாது. "அறிதற்கு அறிவித்தற்கு அன்னியம் இன்றாய் அவிர்வதால், தான் அறிவு ஆகும்; பாழ் அன்று; அறி" என்று ஸ்ரீ பகவான் 'உள்ளது நாற்பது' 12வது பாடலில் கூறியபடி, ஆன்மாவாகிய பாரமார்த்திக நிலை பரிபூரண அறிவே யன்றி சூனியமல்ல. ஆகையால் பக்தன் ஒருவன் உபாதிகளின் இழப்பால் உண்டாக்கப்படும் சூன்யம் போன்ற நிலையை

அனுபவிக்கத் தொடங்கிய வுடனேயே, அவனது இதயத்தில் இதயமாகவே விளங்கும் ஞானசற்குருவாகிய அருணாசலன் "அவ் வுபாதிகளின் அழிவு ஒரு நஷ்டமாகுமா? அவை முன்பு இருந்த நிலையை மட்டுமன்றி அவை இப்போது அழிந்த சூன்ய நிலையையும் நீ அறிகின்றாயல்லவா? எனவே இச் சூனியத்தையும் அறியும் நீயே அறிவாகும்; பாழன்று; அறி" என்று ஓர் இமைப்பொழுதில் பளிச்சென்று விளங்குகின்ற தன்னிருப்பறிவுப் பிரகாசமாய் — அனன்னிய மாய் — 'நான்-நானே' என்று தன்மயமாய் — அத்துவித பரிபூரண வஸ்துவாய் — ஸ்புரித்துக் காட்டுகின்றான். எல்லா உபாதிகளின் அழிவும் அதனால் ஏற்படும் சூனியம் போன்ற நிலையும் "சீரை அழித்து நிர்வாணமாச் செய்தல்" என்றும், அருணாசலன் பரிபூரண தன்னறிவாய் ஸ்புரித்துக் காட்டும் அருட் செயலானது "அருட் சீரை அளித்தருளுதல்" என்றும் இப் பாடலில் ஸ்ரீ பகவானால் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயினும், உபாதிகளின் அழிவால் ஏற்படும் நிர்வாண நிலையானது பாழ் நிலையாகவே உணரப்படுவது தன் மனத்தை ஆன்மாபால் திருப்பத் தன்னுடைய சொந்த முயற்சியின் பலத்தையே நம்பிச் சார்ந்திருக்கும் சாதக னுக்கே ஏற்படக் கூடியது; மாறாக, தன் மனத்தை ஆன்மா பால் கவர்ந்திழுத்து இதயத்தில் மூழ்கவைக்க அருணா சலனின் அருள் ஒன்றையே முழுதும் நம்பிச் சார்ந் திருக்கும் பக்தன் ஒருவனின் விஷயத்தில் எல்லா உபாதி களின் அழிவும், அதனால் ஏற்படும் நிர்வாண நிலையும், பரிபூரணத் தன்னறிவின் ஸ்புரிப்பும் ஏக காலத்தில் ஒரே செயலாக அருணாசலனின் அருளால் நடந்தேறுகிற தாகையால், நிர்வாண நிலையை வெறும் பாழாக அவன் ஒருபோதும் உணருவதில்லை. ஆகையால் சீரை யழித்தல், நிர்வாணமாச் செய்தல் ஆகிய செயல்கள் உண்மையாகவும் பூரணமாகவும் நிறைவேறுவது அருணாசலன் தனது அருட் சீரை யளிக்கும் போதுதான் சாத்தியமாகுமாதலால், ஸ்ரீ பகவான் இப் பாடலில் இம் மூன்று செயல்களையும் ஒருங்கே நிகழ்த்தியருள அருணாசலனிடம் பிரார்த்திக்கின்றார்.

உலகத் தோற்றம் முழுதும் அதைக் காணும் ஜீவனும் நிர்வாண நிலையில் பரிபூரண ஆன்மஞானப் பிரகாசத்தால் விழுங்கப்பட்டு ஒருங்கே மறைவதாக, இந்த ஆன்மஞானப்

பிரகாசம் உலகத் தோற்றத்தையும் ஜீவனையும் மறைக்கும் ஆச்சாதனமாக — ஆடையாக — உருவக அணியாக வர்ணிக்கப்படுகிறது.

"ஆன்ம சொரூபத்தை ஆச்சா தனம்செய்து
தோன்றும் உலகுகனுத் தோற்றமே;—தோன்றும்உல(கு)
ஆன்ம சொரூபத்தால் ஆச்சா தனம்எய்தின்
ஆன்ம சொரூபமே யாம்."

— குருவாசகக் கோவை - 47

எனவே இந்த ஆன்ம சொரூப வடிவான ஆடையே இப் பாடலில் 'அருட்சீரை' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. எல்லாவற்றையும் மறையச் செய்யும் ஆன்ம ஞானப் பிரகாசத்தை 'அருட்சீரை' என்பதாக ஸ்ரீ பகவான் வர்ணித்துள்ளதால், இத் துவிதக் காட்சியின் தோற்றத்திற்குக் காரணமான ஜீவோபாதிதான் ஸ்ரீ பகவான் பிரார்த்தித்துள்ளபடி அருணாசலன் அழிக்கவேண்டிய 'மருட்சீரை' — மாயை வடிவான மறைப்பு — என்று நாம் அறியவேண்டும்.

'நிர்வாணம்' என்ற சொல் 'அமணம்' என்றும் பொருள்படும். அதாவது, நம் தேகாபிமான வடிவான மருட்சீரை நீக்கப்பட்டதும், நமது உண்மை இயல்பு உபாதிமறைப்பற்று அமணமாய் ஒளிர்கிறது. "இருக்கும் இயற்கையால் ஈச சீவர்கள் ஒரு பொருளே யாவர் உந்தீபற; உபாதி யுணர்வே வேறு உந்தீபற" என்றும், "தன்னை உபாதிவிட்டு ஓர்வதுதான் ஈசன்தன்னை உணர்வதாம் உந்தீபற, தானாய் ஒளிர்வதால் உந்தீபற" என்றும் ஸ்ரீ பகவான் கூறியபடி, நம் உண்மை யியல்பு நிர்வாணமாய் விளங்கும் அந் நிலையே அருணாசலன் மஹாநிர்வாணியாய் — நாமரூப உபாதிகளால் மறைவற்றவனாய் — விளங்கும் நிலையுமாகும். இந்த நிலையே 59வது பாடலில் "நக்கனா நின்றனை அருணாசலா" என்று ஸ்ரீ பகவானால் குறிப்பிடப் படுகின்றது. அருணாசலன் நமது உண்மை யியல்பான ஆன்ம சொரூபமாக அமணமாய் வெளிப்பட்டு ஸ்புரிப்பது 'அருட்சீரை அளித்தல்' என்று இப் பாடலில் குறிப்பிடப் படும் அருட்செயலே யாகும்.

ஆடைகள் உடலை மூடி மறைப்பது போன்றே, உடலாதி உபாதிகள் உண்மையான சுக நிலையாகிய நமது ஸ்வஸ்வரூபத்தை மூடி மறைக்கும் ஆடைகளாகின்றன. நாம் நமது உண்மையான சொரூபானந்தத்தை அனுபவிக்க வேண்டுமாயின், இவ் வாடைகள் — மறைப்புக்கள் — அகற்றப்பட வேண்டும்.

"ஞானவா னும்ஆன்ம நாதன்அருட் பேருய
மோனவா னந்தம் முழுதெய்த — மானம்
தருகோசம் ஐந்தும் தணத்தலே சீவ
நிருவாணம் என்னும் நிலை."

— குருவாசகக் கோவை - 442

அதாவது, ஜீவனாகிய பெண் சிதாகாச வடிவான ஆன்ம நாதனின் இன்பத்தை — அவனது அருட்செல்வ மாகிய மோனானந்தத்தை — முழுவதும் பெற வேண்டு மாயின், அவள் ஐங்கோச வடிவாய் தான் போர்த்தியுள்ள தேகாபிமானத்தை நீக்கி நிர்வாணமாய் — அமணமாய் — ஆகவேண்டும். எனவே, தலைவியான ஸ்ரீ பகவான் "ஜீவ போதமாகிய என் மருள் ஆடையைக் களைந்து என்னை நிர்வாணமா யாக்கி, பின் அந் நிர்வாணத்தை (எல்லா உபாதிகளற்றுச் சூனியம் போல் தோன்றும் அந் நிலையை) நீக்கச் சிவபோதமாகிய உன் அருள் ஆடையை எனக்கு அளித்தருள்வாயாக" என்று அருணாசலனிடம் பிரார்த்திக் கின்றார்.

உபாதிகளின் மீதான நமது அபிமானம் அழிவதால் விளையும் அருணாசலனின் அருட்சீரான மோனானந்த அனுபவமே அடுத்த பாடலில் வாக்கு மனம் அடங்கு வதால் விளையும் சுகக் கடல் பொங்குவதாக வர்ணிக்கப் படுவதாகும்.

**31. சுகக்கடல் பொங்கச் சொல்லுணர் வடங்கச்**
**சும்மா பொருந்திடங் கருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! சுகக் கடல் பொங்க, சொல் உணர்வு அடங்க, அங்கு சும்மா பொருந்திடு.

**பொ—ரை:** அருணாசலா! என்னுள் பேரின்பக் கடல் பொங்கவும், வாக்கும் மனமும் ஒருங்காக உள்ளடங்கவும், நீ அங்கு நிச்சலனாய் என்னோடு பொருந்தி இருப்பாயாக.

**வி—ரை:** 'சுகம்' என்பது நம் உண்மை சொரூபமே யாகும். அது பொங்கி விளங்காமல் தடுப்பது வாக்கு மனத்தின் எழுச்சியே. எனவே மனமும் வாக்கும் அடங்கினால், நம் இயல்பான சுகம் பொங்கி வெளிப்படும். இதை ஸ்ரீ பகவான்

"சொல்மா னததனுவின் கன்மா திசிறிதின்றிச்
சும்மா அமர்ந்திருக்க, அம்மா, அகத்தில்ஆன்ம—
சோதியே; நிதானு பூதியே; இராது பீதியே;
இன்பஅம் போதியே."

என்று 'ஆன்மவித்தைக் கீர்த்தனத்'தின் 4வது சரணத்தில் பாடியுள்ளார்.

சுகத்தை நாடியே மனமும் வாக்கும் எழுந்து பற்பல கர்மங்களில் ஈடுபடுகின்றன. எனவே அவை அச் சுகத்தை முழுதும் அனுபவிக்கும்போதுதான் அடங்குகின்றன. பரிபூரண சுகத்தைப் பெற்றாலொழிய மனம் ஒருபோதும் அடங்காது. ஆகையால், மனம் அடங்கும்போதுதான் சுகம் வெளிப்படுவதாலும், சுகம் வெளிப்படும்போதுதான் மனம் அடங்குவதாலும், சுகக் கடல் பொங்குவதும் சொல் உணர்வு அடங்குவதும் இரு வேறு செயல்களன்றி, அவை ஒன்றே என்பதை நாம் அறிய வேண்டும்.

மனம், வாக்கு, காயம் ஆகியவைகளின் செயல்களால் முயற்சி வடிவில் நாம் வெளியே சுகத்தை நாடும் வரையில், நம்மால் ஒருபோதும் துக்கக் கலப்பற்ற உண்மை இன்பத்தை அனுபவிக்க இயலாது. பகிர்முக பிரவிருத்திகள் அனைத்தையும் விடுத்து மனம் உண்முகப்பட்டு ஆன்மாவை நாடும்போதுதான், அது அடங்கி ஆன்ம இன்பத்தைச் சுவைக்கிறது. ஆனால் மனம் தன் சொந்த முயற்சியினாலேயே முழுதும் ஒடுங்கமுடியாது. ஆன்ம சொரூபமாகிய அருணாசலன் உள்ளேயிருந்து ஸ்புரித்து தன்னைப் பூரண சுகக் கடலாக விளக்கிக் காட்டும்போது தான், மனம் ஆன்மாவில் முழுதும் ஒடுங்கமுடியும். எனவே

அருணாசலன் தன் உள்ளத்தில் ஸ்புரித்து விளங்குவதாகிய இவ் வருட்செயலையே வேண்டி "அங்கு சும்மா பொருந்திடு அருணாசலா" என்று ஸ்ரீ பகவான் பாடுகின்றார்.

இப் பாடலில் 'அங்கு' என்று குறிப்பிடப்பட்டிருப்பது 'என் இதயத்தில்' என்பதாகும். "என் இதயத்தில் சுகக் கடல் பொங்க, அங்கு சொல் உணர்வு அடங்க, அங்கு சும்மா பொருந்திடு" என்றவாறு மூன்று இடத்திலும் 'அங்கு' என்ற சொல்லைச் சேர்த்து பொருள் கொள்வதே தக்கது. 'சும்மா' என்பது 'அமைதியாக', 'வெறுமனே', 'செய்கை சிறிதுமின்றி' அல்லது 'நீ உள்ளவாறே' என்று பொருள் படும். 'பொருந்திடுதல்' என்றால் 'அமைதல்' அல்லது 'கலத்தல்' என்பது பொருள். 'கலத்தல்' என்னும் அருணா சலனின் அருட்செயலாவது அவன் 'நான் நானே' என்ற வாறு நம் உள்ளத்தில் ஸ்புரித்து தன்னை நம் உண்மை சொரூபமாக விளக்கிக் காட்டுவதே யாகும். எனவே, 'அருணாசலன் அங்கு சும்மா பொருந்திடுதல்' என்பது அவன் மன வாக்கு அடங்கிய இடமாகிய இதயத்தில் இதயமாய், நிஷ்கிரியனாய், உள்ளது உள்ளபடியாய், 'நான் இருக்கிறேன்' என்ற பிரஜ்ஞை வடிவாய் விளங்கி நம்மோடு ஐக்கியமுற்று இருத்தலே யாகும்.

'பொருந்திடுதல்' என்ற சொல்லுக்கு 'இசைபட இருத்தல்' அல்லது 'தகுதியாதல்' என்பதும் பொருளாகும். பொருந்தாது திரிவது நம் பகிர்முக திருஷ்டி வடிவான மனமேதான். அது அகமுகமாகி ஆன்மாவோடு பொருந்து தல் அருணாசலனுடைய அருள்லீலையின் வடிவாகும். அதாவது, நம் மனம் அன்னியத்தை நாடித் திரியாது உள்ளத்தில் அடங்கி 'இருக்கிறேன்' என்ற இருப்புணர் வாய் விளங்கும் அருணாசலனோடு இசைபடவேண்டுமானால், சும்மா அருணாசலன் அங்கு பொருந்தியிருத்தலே போதும். இதே கருத்தை "உனை ஏமாற்றி ஓடாது உளத்தின்மேல் உறுதியாய் இருப்பாய் அருணாசலா" என்று வரும் 7வது பாடலில் காணலாம். அருணாசலன் இவ்வாறு நம் உள்ளத்தினுள் நிச்சலனமாய்ப் பொருந்தியிருத்தலாலேயே மற்றவை யெல்லாம் தானே அடங்குவதால், அப்போது சுகக்கடல் அங்கே பொங்கி விளங்கும்.

இப் பாடலின் மூலம் ஸ்ரீ பகவான் எல்லா ஆன்ம சாதகர்களுக்கும் ஒரு முக்கிய எச்சரிக்கையை விடுக்கிறார். அதாவது, மனமும் வாக்கும் அடங்கும்போதுதான் உண்மையான சுகம் அனுபவப்படும் என்று அவர் தெரிவிப்பதால், நமக்கு முதலாவதாக வேண்டுவது நம் மனத்தை வீண் விவாதங்களில் ஈடுபடுத்தி நம் வாக்கால் சொற்பித்தலாட்டச் சுவை காணும் போக்கை விடவேண்டுவது தான் என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். "சண்டையிடல் மாயைச் சழக்கு" என்று ஸ்ரீ பகவான் 'உள்ளது நாற்பது' 34வது பாடலில் கூறியபடி, தத்துவார்த்த சர்ச்சைகளிலும் விவாதங்களிலும் ஈடுபாடு கொள்ளும் போக்கு மாயையால் ஏற்படும் மயக்கமாகும். உண்மைகூறின், மனோவாக்குகாயங்களால் எழுச்சியுற்று செயல் புரிய கொள்ளும் எந்த ஒரு விருப்பமும் மாயையின் விளையாட்டே யாகும். ஆகையால் ஸ்ரீ பகவான் அடுத்த பாடலில் அருணாசலன் சுகக்கடலாகிய அவனுடைய ஜோதியுருவைத் தனக்கு விளக்கிக் காட்டி, அதன் மூலம் அச் சிதானந்தத்தைச் சுவைத்ததால், தன் மனம் மாயையின் சூதுவசப்பட்டு எழுச்சியடைந்து உலகை நோக்கி புறமுகப்பட அதற்குள்ள சுவையை விடுத்து உள்ளடங்கி அவனோடு பொருந்துமாறு அருள்புரிய வேண்டுமென்று பிரார்த்திக்கின்றார்.

## 32 சூதுசெய் தென்னைச் சோதியா தினியுன் சோதி யுருக்காட் டருணாசலா.

அ-ம்: அருணாசலா! இனி என்னைச் சூது செய்து சோதியாது உன் சோதி உருக் காட்டு.

பொ-ரை: அருணாசலா! நீ இனியும் என்னைச் சூது செய்து சோதிக்காமல் உன் அருட் ஜோதி வடிவை இப்போதே எனக்குக் காட்டியருள்வாயாக.

வி-ரை: அருணாசலன் நம் உள்ளத்தில் சுகக்கடலாக விளங்கி வந்தாலும், நம் மனம் எழுந்து ஐம்புல விஷய வடிவாகிய உலகத் தோற்றத்தைக் காணும்போது சுகம் அவ்வெளி விஷயங்களில் தான் அடங்கியுள்ளது என்று பிரமை கொள்வதால்

அப் பொருள்களிலிருந்து பெறுவதற்காக கர்மப் பிரவிருத்தியில் இறங்குகிறது. "ஒருவனும் உன்னை யொளித்து எவர் வருவர்? உன் சூதே இது அருணாசலா" என்று ஸ்ரீ பகவான் கூறியபடி, உலகத் தோற்றத்தின் வெளிப்பாடு -ஐம்புலக் கள்வர் அகத்தினில் புகுதல் -என்பது அருணாசலனின் மாயா சூதே யாகும். ஆகையால், "சூது செய்து என்னை சோதித்தல்" என்னும் சொற்கள் இங்கே இவ் வுலகக் காட்சியைத் தோற்றுவித்துக் காட்டும் அருணாசலனின் மாயா செயலைக் குறிக்கிறது. "இவ்வாறு உன் மாயாருபம்-இருளுரு -ஆகிய இவ் வுலகக் காட்சியை எனக்குக் காட்டாமல், இனிமேலாவது உன் ஜோதி யுருவை எனக்கு காட்டியருள் வாயாக" என்று ஸ்ரீ பகவான் பிரார்த்திக்கின்றார்.

இங்கு 'ஜோதியுரு' என்பது அருணாசலனின் மெய்யுருவாகிய ஆன்மஜோதி வடிவே-'நான் இருக்கிறேன்' என்று விளங்கும் அறிவொளி சொருபமே-யாகும். மனம் ஆன்மசொருபமாகிய இச் சோதியுருவைக் காணுதவரை, அது சதா எழுந்து நாமருப உலகக் காட்சியில் மயங்கி அலைந்து கொண்டேயிருக்கும். இச் சொருப ஜோதியைக் காணும்போதுதான் அது அடங்குகிறது. அதனால்தான் ஸ்ரீ பகவான் "ஊர் சுற்று உளம் விடாது உனைக் கண்டு அடங்கிட உன் அழகைக் காட்டு அருணாசலா" என்று 8வது பாடலில் பிரார்த்திக்கின்றார். அப்பாடலில் 'உன் அழகு" என்று ஸ்ரீபகவான் குறிப்பிடுகின்ற அருணாசலனின் ஆனந்த சொருபமே இப் பாடலில் 'உன் ஜோதியுரு' என்று அவர் குறிப்பிடுகின்ற அவனது சித் சொருபமாகும். 'ஜோதியுருக் காட்டுதல்' என்பது அருணாசலன் உள்ளத்தில் 'நான் நான்'என்ற பிரஜ்ஞை சொருபமாய் முழுத் தெளிவுடன் ஸ்புரிப்பதே யாகும். அவன் இவ்வாறு இன்ப மயமான பிரஜ்ஞை சொருபமாய் ஸ்புரிக்கும்போது, மனம் அவனது அழகால் வலிய கவர்ந்திழுக்கப்பட்டு, மீண்டும் எழுந்து ஐம்புல விஷயங்களை நாடி ஓடாதவாறு அவனில் அடங்கிக் கரைந்து ஒன்றிவிடும்.

பிரம்மம் எனப்படும் நாம் மட்டுமே உண்மையில் இருப்பதால், நாம் என்றும் பரிபூரண சுதந்திரனுவோம்.

அதாவது, நாம் இருந்தவாறு நிச்சலமா யிருக்கவோ அல்லது சலனமாயெழும்பவோ நமக்குச் சுந்திரம் உண்டு. நம்முடைய இந்தச் சுதந்திர சக்தியே 'மாயை' எனப்படுவதாம். நம்முடைய இச் சுதந்திர சக்தியைச் சும்மா இருப்பதற்குப் பயன்படுத்தினால், அது வித்யா மாயையாக -அருட்சக்தியாக -விளங்குகிறது. ஆனால் இதே சுதந்திர சக்தியை எழுவதற்குப் பயன்படுத்தினால், அது அவித்யா மாயையாக -மருட்சக்தியாக -செயல்படுகிறது. இப் பாடலில் 'சூது செய்து சோதித்தல்' என்பது அவித்யா மாயையின் செயலையும், 'சோதி உரு காட்டுதல்' என்பது வித்யா மாயையின் செயலையும் குறிக்கிறது.

நாம் பிரம்மமாயிருக்கும் நம்முடைய உண்மை இயல்பான நிலையில் நம் மாயா சக்தியின் மீது நமக்கு முழு அதிகாரம் உள்ளதாயினும், நாம் நமது பிரம்ம சுதந்திரத்தைத் தவறாகப் பயன்படுத்தி எழுச்சியுறும் போது நாம் நம்மை ஓர் அற்ப ஜீவனாகக் குறுக்கிக் கொண்டதால், மாயையின்மீது நமக்குள்ள அதிகாரத்தை இழந்து அவித்யா மாயைக்கு அடிமைப்படுகிறோம். ஆகையால், அவித்யா மாயையின் அதிகாரத்துக்குட்பட்ட ஒரு ஜீவனாக நாம் நம்மைக் கற்பித்துப் பிரமிக்கும் நிலையில் மாயையின் மீதுள்ள அதிகாரம் நமது உண்மையான குறுக்கப்படாத பிரம்ம சொருபமானதும் ஆனால் நமது ஜீவதிருஷ்டியில் நமக்கு அன்னியம் போல் காணப்படும் ஈசுவரனுமாகிய அருணாசலனின் கையிலேதான் உள்ளது.

"ஈச்வர ஸர்வபூதானும் ஹ்ருத்தேசே‌அர்ஜுன திஷ்டதி
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராருடானி மாயயா."
"தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேன பாரத
தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம்
[ப்ராப்ஸ்யஸி சாச்வதம்."
-பகவத் கீதை -18-61,62

"ஈசன் உயிர்கள் எவற்றுள்ளும் சேர்இதயத்
தேசத்தில் என்றும் திகழ்கின்றான் -பாசமாம்

மாயையால் எந்திரம்சேர் மன்னுயிர்கள் யாவினையும்
ஓயலற நின்(று)உழற்றல் உற்று."

"அவனைச் சரணம் அடைகளவ் வாற்றும்;
அவனருளால் சாந்தி அடைவாய் ;- அவனருளால்
ஈறில்லா அப்பதமும் எய்துவாய்; பாரதனே!
பேறிதனில் இல்லை பிற.

-பகவத்கீதாசாரம்-41,42

மாயையின் மீது ஆதிக்கம் கடவுளுக்கு மட்டுமே உண்டு என்றும், ஜீவன் மாயையின் வசப்பட்டவன் என்றும் சொல்லப்படுவதால், ஜீவனாகிய நமக்கு சுதந்திரம் அற்பமும் இல்லை என்று ஆகிறதா யெனில், உண்மை அப்படியில்லை. ஏனெனில், கீதையின் மேற்கண்ட இரண்டாவது பாடலில் கூறியவாறு, கடவுளைச் சரணடைவதற்கோ அல்லது அவ்வாறு சரணடையாது இருப்பதற்கோ நமக்குச் சுதந்திரம் இருக்கவே செய்கிறது. அவனைச் சரணடைய நமக்குள்ள சுதந்திரத்தை நாம் பயன்படுத்தினால், அவனது மாயா சக்தியானது நமது மனத்தை அனைத்து ஆசாபாசங்களினின்றும் விடுவிக்கும் வித்யா மாயை-அருட்சக்தி -வடிவில் செயல்படத் தொடங்குகிறது, அதற்கு மாறாக, அவனைச் சரணடையாது முரண்டுபிடிக்க நம் சுதந்திரத்தைப் பயன்படுத்தினால், அவனது மாயா சக்தியானது நமது மனத்தை மேலும் மேலும் ஆசாபாசங்களில் ஆழ்த்தி அவற்றில் கட்டுண்டு கிடக்கச் செய்யும் அவித்யாமாயை -மருட்சக்தி -வடிவில் தொடர்ந்து செயல்படுகிறது.

"அவனைச் சரணம் அடைக எவ்வாற்றும்" என்பதன் தாற்பரியம் என்ன? சாதனை முறையில் சரணாகதிக்கு மூன்று முக்கிய அங்கங்களுண்டு, அவையாவன: பிரார்த்தனை, தன்மறுப்பு, தன்னாட்டம். பிரார்த்தனை என்பது நமது கிரியா சக்தியின் பலகீனத்தை -அதாவது, தன்மறுப்பு, தன்னாட்டம் ஆகியவற்றால் அவித்யா மாயையின் பிடியினின்றும் நம் மனத்தை விடுவித்துக்கொள்ள போதுமான சக்தி நமக்கு இல்லை என்பதை - உணர்ந்து, ஆண்டவனது அருட்சக்தியின்

துணையை - வித்யாமாயையின் துணையை விழைவதற்கு நம் இச்சா சக்தியைப் பயன்படுத்துவதே யாகும். தன்மறுப்பு என்பது எல்லாம் அறிந்தவனும், எல்லாம் வல்லவனும், பரிபூரண அன்பு சொருபனுமான பரம்பொருளின் அருளிஷ்டப்படியே நம் வாழ்வில் அனைத்தும் நடைபெற்று வருகிறது என்றும்,எனவே அவ்வாறு நடைபெறும் அனைத்தும் நம் நன்மைக்கே என்றும் உணரப்பெற்று, அதனால் புறமுகத்தில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியின் போதும் விருப்பு - வெறுப்புவடிவில் தன்முனைப்போடு நாம் கிளம்பாதவாறு எல்லாயெழுச்சிகளையும் தவிர்த்து நிற்பதேயாகும். தன்னாட்டம் என்பது விருப்பு - வெறுப்பு வடிவான எல்லா எழுச்சிகளுக்கும் ஆணிவேர் 'நான் இன்னார்' என்ற அகம்புத்தியின் எழுச்சியே என்பதை அறிந்து, அவ்வாறு எழும் அகம்புத்தியின் மூலஸ்தானத்தை ஜாக்கிரதையாக நாடும் நாட்டத்தால் அவ்வெழுச்சிக்குச் சற்றும் இடம் கொடாமல் இருப்பதே யாகும். ஆன்ம சமர்ப்பண மார்க்கத்திலுள்ள இம் மூன்று அங்கங்களும் ஒரு முமுக்ஷுவின் வாழ்க்கையில் ஒருங்கே இசைவுடன் நடந்தேறுவது அவசியமாகும், ஏனெனில், இந்த ஒவ்வொரு அங்கத்தின் பயிற்சியும் மற்ற இரண்டின் பயிற்சிக்குத் துணையாகவும் புது வலுவை அளிப்பதாகவும் உள்ளது. ஆனால் இம் மூன்றிலும் மிகவும் இன்றியமையாதது தன்னாட்டப் பயிற்சியேயாகும். உண்மையில் தன்னாட்டப் பயிற்சியே மற்ற இரு பயிற்சிகளையும் உள்ளடக்கியதாம், அதுவே அதியுத்தமமான பிரார்த்தனையாகவும், அகந்தை யெழுச்சியை மறுத்து அடங்க உதவும் சரியான உபாயமாகவும் ஆகிறது. "ஆன்மசிந்தனையைத் தவிர வேறு சிந்தனை கிளப்புவதற்குச் சற்றும் இடங்கொடாமல் ஆத்ம நிஷ்டாபரனா யிருப்பதே தன்னை ஈசனுக்கு அளிப்பதாம்" என்று ஸ்ரீ பகவான் கூறியபடி, தன்னாட்டம் ஒன்றே ஆன்ம சமர்ப்பணத்தின் சரியான, முழுமையான வடிவமாகும். எனவே, சுருங்கக் கூறின், அருணாசலனின் திருவடிகளில் சரணுற்று வாழ்வதாவது, புறமுகத்தில் நடக்கும் செயல்கள் யாவற்றையும் அவனருளிச்சைக்கே விட்டுவிட்டு நடந்தேறும் காரியங்களில் உதாசீன பாவம் கொண்டு, கூர்ந்த தன்னாட்டத்தால் ஆன்ம விளக்கமாகிய அவனருளை நாடி ஆன்ம இருப்பாகிய அவனடியில் பொருந்தி நிச்சலமா யிருப்பதேயாகும்.

ஆனால் திருவருளுதவியின்றி மனம் தன் சொந்த பலத்தினால் மட்டுமே ஆன்ம நிஷ்டையில் உறுதியாக நிலைபெற முடியாது. சுகம் வெளியேதான் உள்ளது என்று மயங்கி நம்ப வைக்கும் அவித்யா மாயையின் சூதினால் மனம் அடிக்கடி ஆன்மாவினின்றும் நழுவி வெளிப்பொருள்களை நாடுகிறது. ஆகையால், நம் சொந்த பலத்தினால் மட்டுமே தற்கவனத்தினின்றும் நழுவச் செய்யும் அவித்யா மாயையின் பிடியினின்று நம்மை விடுவித்துக்கொள்ள இயலாது என்பதை நாம் உணரும் போதெல்லாம், நம்மை ஆன்மாவை நோக்கி மீட்டுக் கொள்ளுமாறு அருணாசலனின் அருளுக்காக நாம் பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும். அதனால்தான் ஸ்ரீ பகவான் இப் பாடலில் "உனது அவித்யா மாயையின் சூதினால் என் மனம் புறமுகத்தே கவர்ந்திழுக்கப்பட அனுமதித்து என்னைச் சோதிக்காமல், உனது வித்யா மாயையின் வல்லமையால் - அருட்சக்தியால் - என் உள்ளத்தில் ஸ்புரித்து எழுந்து உன் பேரின்பமான ஜோதியுருவைக் காட்டி என்னை உள்ளே கவர்ந்திழுத்து உன்னில் இணைத்துக் கொள்வாயாக" என்று பிரார்த்திக்கின்றார்.

எந்தவொரு முமுக்ஷுவும் அருணாசலனின் அருளுதவியின்றி தனது அற்ப ஜீவசுதந்திர சக்தியினாலேயே அவித்யா மாயையின் சூதினின்றும் தப்பித்துக் கொள்ளலாம் என்று கருதக் கூடாது. அருணாசலன் தனது பரிபூரண பிரம்ம சுதந்திர சக்தியை அவித்யா மாயை வடிவிலோ அல்லது அருட்சக்தி வடிவிலோ எவ்வாறு பயன்படுத்தினாலும், எந்வொரு ஜீவனும் அதன் ஆளுகைக்கு ஆட்படாமல் இருக்க முடியாது. அருணாசலன் தன் மாயா வல்லபத்தால் சோதித்தால் மிகச் சக்திவாய்ந்த அயனரியும் அயர்வர் என்றால், அற்பனாகிய ஜீவன் எம்மாத்திரம்? ஆகையால் அருணாசலேசன் தன் அவ்வியாஜ கருணையினால் தன் ஜோதியுருவைக் காட்டுவதன் மூலம் தனது அருளாட்சிக்குள் நம்மை ஆட்படுத்தும் போதுதான் நாம் அவனது அவித்யா மாயையின் சூதினின்றும் தப்ப முடியும் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். அவன் அவ்வாறு தன் ஜோதியுருவை ஸ்புரித்துக் காட்டும் போது, கோடி சூரியர்கள் சேர்ந்து உதித்தாற் போன்று எழுந்த அந்தப் பேரொளியால் மனம் விழுங்கப்படுகிறது. மனம் இவ்வாறு மறையவே, அவித்யா

மாயை என்றுமே இருப்பற்றதாய்க் காணப்பட்டு, வித்யா மாயையின் சக்தி - அருளொளி - மட்டுமே அருணாசலனின் உண்மை சொரூபமாக மிஞ்சி விளங்குகிறது.

ஜீவர்களில் யாரும் தங்களது சொந்த பலத்தினால் மட்டும் அவித்யா மாயையின் சூதினால் மயங்காமல் அதை எதிர்க்க வல்லவர்கள் அல்லர் என்று அவர்களின் பலகீனத்தை அருணாசலன் நன்கறிந்தவனாதலால், ஸ்ரீபகவான் "இந் நாமரூப உலகக் காட்சியை எனக்குக் காண்பித்து உனது அவித்யா மாயையில் என்னை வசப்படுத்தி நான்இந்த நாமரூபங்களில் மோகித்து உன்மேல் அன்பு நீங்குகிறதா என்று என்னை சோதனை பண்ணாதே" என்று இறைஞ்சுகின்றார். மேலும் அருணாசலனை எந்தவொரு தெய்விக நாமரூபத்தில் காணினும் அது அவனது உண்மைக் காட்சி யாகாது என்பதால், ஸ்ரீ பகவான் "குழந்தைகளை 'இதுதான்' என்று காட்டி ஏமாற்றுவது போல், உன்னை உன் மாயமான நாமரூபங்களில் மட்டும் காட்டி என்னை ஏமாற்றாதே" என்று விண்ணப்பித்துக் கொள்கின்றார். அருணாசலனின் உண்மைக்காட்சியாவது அவனது நாமரூபமற்ற உண்மை யியல்பில் பக்தன் ஒடுங்கி ஒன்றாகி அவனது பிரஜ்ஞான கனரூபமான சின்மாத்திர சொரூபத்தை அனுபவிக்கும் நிலையே யாகும்.

"எப்பெயரிட்(டு) எவ்வுருவில் ஏத்தினும்ஆர், பேர்உருவில்
அப்பொருளைக் காண்வழி அ(து), ஆயினும்அம்-மெய்ப்பொருளின்
உண்மையில்தன் உண்மையினை ஓர்ந்தொடுங்கி ஒன்றுதலே
உண்மையில் காணல் உணர். "

- உள்ளது நாற்பது -8

ஆகவே ஸ்ரீ பகவான் "உனது உருவக் காட்சியைக் காட்டி என்னை ஏமாற்றாமல், உனது உண்மையான அருவக் காட்சியை எனக்குக் காட்டியருள்வாயாக" என்று பிரார்த்திக்கின்றார். "தானாய் இருத்தலே தன்னை யறிதலாம்" என்றபடி கடவுளைக் காண்பது என்பது கடவுளாய் இருப்பதே யாகையால், அருணாசலன் தன் ஜோதிமயமான உண்மையுருவத்தைக் காட்டுதல் என்பது அவன்

பக்தனைத் தன் உண்மை யியல்பில் ஒடுக்கி தன் சொருபத்தோடு ஐக்கியப்படுத்தித் தன்மயமாக்கும் அருட்செயலே யாகும்.

இப் பாடலில் 'இனி' என்னும் சொல்லை 'சோதியாது' என்ற சொல்லுடனோ அல்லது 'காட்டு' என்ற சொல்லுடனோ, சேர்த்துப் பொருள் கொள்ளலாம். 'சோதியாது' என்ற சொல்லுடன் சேர்த்துப் பொருள் கொண்டால், 'இனியும் சோதியாது' என்ற பொருள் வரும். 'காட்டு' என்ற சொல்லுடன் சேர்த்துப் பொருள் கொண்டால், 'இனிமேலாவது காட்டு' அல்லது 'இனியே - இப்போதே - காட்டு' என்ற பொருள் வரும்.

"சூது செய்து என்னைச் சோதியாது" என்ற சொற்களுக்கு 'என்னை மயக்கி அணிமாதி அஷ்ட சித்திகள் எதையுமே நான் கற்குமாறு செய்யாது' என்றும் பொருள் கொள்ளலாம். இவ் வஷ்ட சித்திகளைக் கற்று இவ் வுலகத்தாருக்குக் காட்டும் மாயாவித்தையால் மயங்குவதையே "செப்படி வித்தை கற்று இப்படி மயக்கு" என்று ஸ்ரீ பகவான் அடுத்த பாடலில் குறிப்பிடுகின்றார்.

## 33. செப்படி வித்தைகற் றிப்படி மயக்குவிட் டுருப்படு வித்தைகாட் டருணாசலா.

**அ-ம் :** அருணாசலா! செப்படி வித்தை கற்று இப்படி மயக்கு விட்டு உருப்படு வித்தை காட்டு.

**பொ-ரை:** அருணாசலா! (அஷ்ட சித்திகள் முதலிய) மாயவித்தைகளை நான் கற்று இவ் வுலக மயக்க மடையாமல் நீங்கி சொருபத்தை யடையும் ஆத்மவித்தையைக் கற்பித்தருள்வாயாக.

**வி-ரை:** 'செப்படி வித்தை' என்ற சொற்கள் அஷ்டசித்தி, இந்திர ஜாலம் முதலிய மாயா வித்தைகளைக் குறிக்கும். 'இப் படி' என்ற சொற்களுக்கு 'இவ் வுலகு' என்பது பொருளாகும். எனவே "இப் படி மயக்கு விட்டு" என்ற சொற்றொடருக்கு 'நான் இவ் வுலகத்தாரை மயக்கும்

வீண் காரியத்தை யெல்லாம் விட்டுவிட்டு' என்றோ, அல்லது 'நான் இவ் வுலக மயக்கமாகிய அஞ்ஞான நிலையில் மயங்கிக் கெடாமல்' என்றோ பொருள் கொள்ளலாம். அதாவது, அஷ்ட சித்திகளாகிய செப்படி வித்தையைக் கற்று அதை வெளிக்காட்டுவது உலக மக்களை மயக்க உதவும் ஒரு கருவியாக மட்டுமின்றி, உலக மயக்கமாகிய அஞ்ஞானமாகவும் ஆகிறது. சித்திகளை வெளிக்காட்டுவதன் நோக்கம்தான் யாது? புகழ், பணம், போகம் ஆகியவற்றை அடைவதன் மூலம் தனது ஸ்வப்பிரதாபத்தை நிலைநாட்டிக் கொள்ளும் சுயநலமே யாகும். உலக சம்ரக்ஷணத்தின் பொருட்டே தாம் சித்திகளை நாடி அடைவதாக யார் சொன்னாலும், அதுவும் மடமையே. ஏனெனில், உலக சம்ரக்ஷணம் கடவுளின் வேலை யாகும்; அது எந்தவொரு ஜீவனுக்கும் உரிய கடமையல்ல. மேலும் கடவுளால் நடத்தப்படுகின்ற உலக சம்ரக்ஷணமுங்கூட நிலையானதும் நெடிது பயன்தரக்கூடியது மல்ல. ஏனெனில், இவ் வுலகம் சத்தியமானதொரு பொருளல்ல; எனவே முற்றும் சரி செய்யக்கூடியதொரு பொருளுமல்ல. அதனால்தான் ஸ்ரீ கிருஷ்ணர் "தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" (தர்மத்தை நிலைநாட்டுவதற்காக யுகந்தோறும் மீண்டும் மீண்டும் அவதரிக்கின்றேன்) என்று கீதை 4.8ல் அருளியிருக்கின்றார். தர்மத்தை நிலைநாட்டி உலகை சீர்திருத்துவதற்காக பரம்பொருளே யுகந்தோறும் மீண்டும் மீண்டும் வரவேண்டியிருக்கிற தென்றால், சாதாரண ஜீவர்கள் ஆற்றக்கூடிய உலக சம்ரக்ஷணம் எவ்வாறு பயன் தரக்கூடியதா யிருக்கும்? இவ் வுலகம் சத்தியம் என்னும் அஞ்ஞான மிருந்தாலன்றி உலக சம்ரக்ஷண நோக்கம் உண்டாகாது. ஆகையால் சித்திகளை வெளிக்காட்டும் செப்படி வித்தையைக் கற்பதானது உலக மயக்கமாகிய அஞ்ஞானமே யாகும்.

சித்திகளை வெளிக்காட்டுவதென்பது அதைக் காண்ப தற்குப் பிறர் இருக்கும்போதுதான் சாத்தியமல்லவா? பிரமாதத்தினால் தன் அத்துவிதப் பரிபூரண உண்மை சொரூபத்தை மறந்து தேகத்தை 'நான்' என அபிமானித்து ஒரு தனி ஜீவ வியக்தியாக எழுந்தாலன்றி மற்ற ஜீவர்கள் இருப்பதாகத் தோன்றுவது சாத்தியமல்ல வாதலால்,

ஒருவன் தன் சித்திகளைக் காட்டிப் பிறரை மயக்குவதில் வெற்றியடைந்தாலும் சரி, தோல்வியுற்றாலும் சரி, பிறரை மயக்க வேண்டும் என்ற எண்ணம் அவன் மனத்தில் எழுந்தமாத்திரத்திலேயே அவன் தன்னையே ஏமாற்றிக் கொண்டுவிட்டான் என்பது சர்வ நிச்சயம். அதனால்தான் ஸ்ரீ பகவான்

> "இந்திர ஜாலிகனும் தான்மயக்கம் எய்தாமல்
> இந்தவுல கர்க்குமயல் ஏய்விப்பான்; — மைந்தனே
> சித்தனோ தான்மயங்கிச் சேர்க்குமயல் இவ்வுலகர்க்(கு);
> எத்தனை விந்தை இது!"

என்று 'உபதேசத் தனிப்பாக்கள்' 8வது பாடலில் நயமாகக் கூறியுள்ளார். ஆகவே சித்திகளை வெளிக்காட்டும் செப்படி வித்தையைக் கற்பதைக் காட்டிலும் பெரிய உலக மயக்கம் வேறு எதுவும் இருக்க முடியாது.

'செப்படி வித்தை' என்ற சொற்களைத் தற்காலத்திய லௌகீக விஞ்ஞானம், பண்டைய அறுபத்து நான்கு கலைகள் போன்ற எந்தவிதமான உலகக் கல்வியைக் குறிப்பதாகவும் இங்கு கொள்ளலாம். ஆன்ம ஞானமாகிய சத்வித்தையைத் தவிர மற்ற எல்லா விதமான வித்தைகளும் அபரவித்தையே யாகும். அதாவது, இறைவனின் திருவடி யாகிய ஆன்ம சொரூபத்தில் ஒன்றிட உதவாத எந்தவொரு வித்தையும் உண்மையான வித்தை யாகாது. மாயையின் அநிர்வசனீய சக்தியாகிய அவித்தை காரணமாகவே இவ் வபரவித்தைக ளெல்லாம் உண்மைபோல் தோன்றுவதால், அவையாவும் அஷ்ட சித்திகளைப் போன்று உலக மயக்கமே யாதலால், அவற்றையும் 'செப்படி வித்தை' என்றே குறிப்பிடுவது தகும். இந்தச் செப்படி வித்தைகளாகிய உலகக் கல்விகளெல்லாம் நம் மனத்தை வெளிமுகத்தே இழுத்து ஆசாபாசங்களுக்கு அடிமைப்படுத்துவதால், அவை நம்மை நம் வாழ்க்கையின் உண்மை லட்சியமாகிய ஆன்ம ஞானத்தினின்றும் வெகு தூரம் இழுத்துச் செல்கின்றன. எந்தவொரு உலகக் கல்வியைக் கற்றுத் தேறுபவனும் மற்ற மக்களைக் காட்டிலும் தான் அறிவிலும் ஆற்றலிலும் உயர்ந்தவன் என்பதைக் காட்டி அவர்களை மயக்கவே அக் கல்வியைப் பயன்படுத்த முடியும். உலக மயக்க

மாகிய அபரவித்தையைக் கற்பதில் உள்ள அபாயத்தைத் தாயுமானவர்

"கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்;
கற்றுமறி(வு) இல்லாதஎன்
கர்மத்தை என்சொல்வேன்? மதியைஎன் சொல்லு
கைவல்ய ஞானநீதி [வேன்?
நல்லோர் உரைக்கிலோ, கர்மமுக் கியமென்று
நாட்டுவேன்; கர்மம்ஒருவன்
நாட்டினு லோ,பழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன்; வடமொழியிலே
வல்லான் ஒருத்தன்வர வும்,த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்;
வல்லதமிழ் அறிஞர்வரின், அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்;
வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தைஎன்? முத்திதருமோ?
வேதாந்த சித்தாந்த சமரசநல் நிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே."

என்று 'சித்தர்கணம்' என்னும் பதிகத்தின் 10வது பாடலில் நன்கு விளக்கியுள்ளார். அதனுல்தான் ஸ்ரீ பகவான்

"கற்றும் அடங்காரில் கல்லாதா ரேஉய்ந்தார்;
பற்றும் மதப்பேயின் பால்உய்ந்தார்;— சுற்றுபல
சிந்தைவாய் நோய்உய்ந்தார்; சீர்தேடி ஓடல்உய்ந்தார்;
உய்ந்த(து)ஒன்(று) அன்(று)என்று உணர்."

என்று 'உள்ளது நாற்பது — அனுபந்தம்' 36வது பாடலில் அருளியுள்ளார்.

இப் பாடலுக்கு மற்ருெரு பொருளும் உண்டு. அதாவது, 'கற்று' என்ற சொல்லுக்கு 'நீ வல்லவனுகி' என்றும், 'இப்படி' என்ற சொல்லுக்கு 'இந்த மாதிரி' என்றும், 'மயக்கு விட்டு' என்ற சொற்களுக்கு 'நீ என்னை மயக்குவதை விட்டு' என்றும் பொருள் கொண்டால், இப் பாடலுக்கு "அருணுசலனே! மயக்கும் மாயாவித்தையில் நீ வல்லவனுகி, இவ்வாறு (உன் உண்மை யுருவத்தைக்

காட்டாமல்) என்னை உலகியலில் மயக்கிவைப்பதை விட்டு, சொரூபத்தை யடையும் ஆன்மவித்தையை எனக்குப் போதித்தருள்வாயாக” என்று பொருள் வரும். இந்தப் பொருளும் சென்ற பாடலின் பொருளும் சாராம்சத்தில் ஒன்றே யாதலால், இப் பொருளின் விளக்கத்தைச் சென்ற பாடலின் விளக்கவுரையைப் படிப்பதால் நன்கு புரிந்து கொள்ளலாம்.

‘உருப்படு வித்தை’ என்ற சொற்றொடரிலுள்ள ‘உரு’ என்ற சொல் நம் உண்மை யுருவமாகிய ஆன்ம சொரூபத்தைக் குறிக்கும். எனவே ‘உருப்படுதல்’ என்பது இங்கு ‘ஆன்மசொரூபமாய் ஆதல்’ என்பதேயாம். ஆகையால் ‘உருப்படு வித்தை’ என்பது ஆன்ம நிஷ்டையாகிய பரவித்தை — சொரூப சாட்சாத்கார வித்தை — சொரூப ஞானமான சத்வித்தை — யாகும். ‘காட்டு’ என்ற சொல் இங்கே ‘போதித்தருள்க’ என்று பொருள்படும். ஞான சற்குரு சொரூபமாகிய அருணாசலன் எவ்வாறு இவ் வான்ம வித்தையைப் போதிக்கின்றார்? தன் பக்தனின் உள்ளத்தில் ‘நான் நானே’ என்னும் பிரஜ்ஞை வடிவில் ஸ்புரித்து விளங்குவதன் மூலம் அவன் மோன மொழியில் போதித்தருள்கிறான். இந்த பிரஜ்ஞா சொரூபமே அருணாசலனின் ஜோதியுருவாதலால், இப் பாடலில் “உருப்படு வித்தை காட்டு” என்ற பிரார்த்தனையின் பொருளும் சென்ற பாடலில் “உன் சோதியுருக் காட்டு” என்ற பிரார்த்தனை யின் பொருளும் ஒன்றேயாகும். ஆகையால் ‘உருப்படு வித்தை’ என்பது அருணாசலனின் ஜோதியுருவாகிய ஆன்ம விளக்கம் தலைப்படும் வித்தையே யாகும்.

**34. சேரா யெனின்மெய் நீரா யுருகிக்கண்**
**ணீராற் றழிவே னருணாசலா.**

**அ-ம்:** அருணாசலா! சேராய் எனில், மெய் நீராய் உருகி கண்ணீர் ஆற்று அழிவேன்.

**பொ-ரை:** அருணாசலா! நீ என்னை அருளால் சேர்த்து ஒன்றாக்கிக் கொள்ளாவிடில், உன் தாபத்தால் என் உடல் நீராக உருகி பெருக்கும் கண்ணீராகிய ஆற்றில் மூழ்கிப் போவேன்.

வி - ரை: அருணாசலன் மீதுற்ற காதல் கைகூடுவதிலுள்ள காலதாமதத்திற்கு ஆற்றாமையால் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கும் தன் சித்தத்தைக் குளிர்விக்கும் படியும், தனது உபாதிகளாகிய உலகச் சீர்மைகளை அழித்து அருட்சீர்மையைத் தனக்கு அருளும்படியும், சுகக்கடல் பொங்கி சொல்லுணர்வு அடங்குமாறு தன் இதயத்தில் ஒன்றும்படியும், அவனது ஜோதி யுருவைக் காட்டும் படியும், தனக்கு ஆன்ம நிஷ்டையாகிய சத் வித்தையைக் கற்பித்தருளும்படியும் மிகுந்த ஏக்கத்துடன் சென்ற பாடல்களில் பிரார்த்தித்த பிறகு, ஸ்ரீ பகவான் இந்தப் பாடலிலும் அடுத்து வரும் பாடலிலும் தலைவன் வஞ்சித்தால் தன் நிர்கதித் தன்மை இப்படி யாகும் என்று எடுத்துக் கூறி தனது பரிதாப நிலையைத் தெரிவித்து தன் உள்ளத்தில் கனன்று எரியும் ஏக்கத்தின் பரிதவிப்பை வெளிப்படுத்துகிறார். இவ்வாறு ஏக்கத்தால் தளர்வுறும் தன் உள்ளத்தை உதாசீனப்படுத்தி தன்னை வஞ்சிக்காது தன்மீது இரக்கங்காட்டும்படி பாடல்கள் 21,22லும் அருணாசலனிடம் இறைஞ்சுகின்ற அதே பாவம்தான் மீண்டும் இவ் விருபாடல்களிலும் எதிரொலிக்கிறது.

இப் பாடலில் அடங்கியுள்ள பிரார்த்தனையானது அகப்பொருளின் பாற்பட்டது. பக்குவமுற்ற ஓர் இளம் பருவமங்கை பெண்ணாகப் பிறந்த தன் வாழ்க்கையின் நோக்கமும் பயனும் தன் அன்புக்குரிய தலைவனைக் கைப்பிடித்து அவனை மணந்து அவன் உணர்வோடு கலந்து இணைபிரியாது வாழ்வதே என்பதை உணர்ந்துகொள்வது போல, பக்குவமுற்ற பக்தனும் மனிதப் பிறவி யெடுத்த தன் வாழ்க்கையின் உண்மை நோக்கமும் பயனும் தன் ஆன்ம நாதனாகிய இறைவனோடு இரண்டறக் கலத்தலே என்பதை அறிந்துகொள்கிறான். ஆகையால் தலைவியாகிய ஸ்ரீ பகவான் இத்தகைய தெய்வீகக் காதலுக்கு ஆட்பட்டு தனக்கேற்ற வரனாகிய அருணாசலனிடம் "அருணாசலனே, நீ என்னை இதயத்தில் இரண்டறக் கலவாவிடில், உன்னால் அணைக்கப்படாத என் உடலானது ஏக்கத்தால் இளைத்து என்பு முதற்கொண்டு உருகிப் போய், அழகு மிகுந்த உன் ஜோதியுருவைக் காணாத என் கண்கள் ஆறாய் நீர் பெருக்கி என் பிறவிப் பயனை இழந்து போவேன்" என்று மதுர பாவத்தில் பிரார்த்திக்கின்றார்.

"நேசமில் எனக்கு உன் ஆசையைக் காட்டி, நீ மோசம் செய்யாதருள் அருணசலா" என்று ஸ்ரீ பகவான் 60வது பாடலில் பிரார்த்திக்கின்றபடி, பக்தனின் உள்ளத்தில் தன்மீது ஆசையை அருணசலனே தூண்டிவிட்டதால், அவ் வாசையைப் பக்குவப்படுத்தி உள்ளத்தை நெகிழ்விக்கும் பரபக்தியாக மலரச் செய்து அவனைத் தன்னேடு ஐக்கியப் படுத்திக்கொள்வதும் தனது கடமையாகிறது. புகைவண்டி ஓடும்போது பாதை ஓரத்தில் அசைவற்றுக் கிடக்கும் சருகுகள் ஓடும் புகைவண்டியின் வேகத்தினல் கிளரப்பட்டு அசைவுண்டாக்கி எழுப்பப்படுகின்றன. அதுபோல் பக்தனின் நேசமற்றிருந்த உள்ளத்தில் அருணசலனின் கருணையால் அருட்காதல் என்னும் அசைவு உண்டாயிற்று. ஆனல் புகைவண்டி தன் வழியே சென்ற பிறகு சருகுகள் அவை கிடந்த இடத்திலேயே மீண்டும் அசைவற்ற நிலையிலேயே விடப்படுகின்றன. இதே விதமாக அருணசலன் தன் பக்தனையும் கைவிட்டு நேசமற்ற அவனது பழைய நிலைக்கே அவன் திரும்புமாறு விடுவானகில், அது அவனுக்கு அழகல்ல. ஒரு நிமிடம் சருகுகளை அசைவித்து மறு நிமிடம் அவற்றை கைவிடும் புகைவண்டி போலல்லாமல், தன்னில் சங்கமிக்கும் எல்லாவற்றையும் அடித்துசென்று தவருது சமுத்திரத்தில் சேர்ப்பிக்கும் கங்கையைப் போன்று அருணசலன் நடந்துகொள்ள வேண்டும். அதாவது, தன் பக்தனின் உள்ளத்தில் தன்னேடு ஐக்கியமுற ஆருக் காதலைத் தூண்டிவிட்ட பிறகு, அருணசலன் அக் காதலை மேலும் மேலும் வளர்த்து அதனைப் பரிபூரணமாக்கி, அதன் மூலம் அப் பக்தனின் உள்ளத்தைப் பேரின்பக் கடலில் ஆழ்த்தி அதனை முற்றும் கரைத்து தான் மேற்கொண்ட வேலையைப் பூர்த்தி செய்திட வேண்டும். அவ்வாறின்றி அருணசலன் தன் பக்தனின் உள்ளத்தைச் சேர்த்து அணைக்காவிடில், அவனருளால் எழுப்பப்பட்ட அருட்காதல் பயனின்றி வீணகிவிடும். அதனல்தான் ஸ்ரீ பகவான் "என்னுள்ளே யிருந்து அருட்காதலை-ஸ்வாத்ம பக்தியை-எழுப்பிய உன் திருவருட் சக்தி இப்போது தானே எழுந்து என் மனத்தை இழுத்துச் சென்று இதயத்தில் அணைத்துச் சேர வேண்டும். அவ்வாறின்றி, பிரதிப்ரியம் உன்னிடம் உண்டாகாவிட்டால், என்னுள் எழுந்த அருட்காதல் ஒருதலைக் காதலாக-ஒரு பக்க உணர்வாக-மட்டும் போகும். அவ்வாறு

நடை பெற நீ அனுமதித்தால், உன்பால் எனக்கு ஏற்பட்ட தாளொணு ஏக்கத்தால் என் என்பும் உருகிப் பெருகும் கண்ணீர் ஆற்றில் அமிழ்ந்து போவேன்" என்று அழுது அருணாசலனின் அருளணைப்பை வேண்டிக் கெஞ்சுகிறார்.

ஸ்ரீ பகவான் மிக்க தாபத்துடன் வேண்டுகின்ற ஐக்கிய நிலையின் இயல்புதான் என்ன? "அம்புவில் ஆலிபோல் அன்புரு உனில் எனை அன்பாய்க் கரைத்தருள்" என்று அவர் 101வது பாடலில் பிரார்த்திக்கின்றபடி, நீரில் கரைந்தழியும் பனிக்கட்டி போன்ற பக்தனின் தனிவியக்தி முற்றும் கரைந்தழிகின்ற இருமை யுணர்வற்ற அத்துவித ஐக்கிய நிலையாகும் அது. தனிவியக்தியின் சுவடுகூட மிஞ்சாதவாறு பூரணமாக இரண்டறக் கலந்து உருவழிந்த இந் நிலையே 9வது பாடலில் "எனை அழித்து இப்போது எனைக் கலத்தல்" என்று ஸ்ரீ பகவான் வருணிக்கும் நிலையுமாகும். சற்குருமூர்த்தியாய் விளங்கும் அருணாசலன் தன் பக்தனின் உள்ளத்திலே தன் ஜோதியுருவைக் காட்டுவதன் மூலம் அவனுக்கு சொருப சாட்சாத்கார வித்தையைப் புகட்டும்போது, அப் பக்தன் அந்த சோதியுருவின் பிரகாசத்தால் முற்றும் விழுங்கப்பட்டு தன் ஜீவத்துவத்தின் அடையாளம் சிறிதுமின்றி முற்றும் அழிந்து ஜோதியுருவில் ஒன்றிவிடுகிறான். ஸ்ரீ பகவானுக்கு இத்தகைய அத்துவித ஐக்கிய நிலையை அருணாசலன் அருளாவிட்டால், பனிக் கட்டி நீரில் கரைவது போல அன்புருவாகிய அருணாசலனில் அன்பாய்க் கரைவதற்குப் பதிலாக அவர் தனது தலைவனைப் பிரிந்து நிற்கும் துயரத்தை தாங்கொணுது உருகி துன்ப வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படுவார்.

"சேராய் எனில் அழிவேன்" என்று இப் பாடலில் வரும் இதே கருத்து "தொட்டு அருட் கை மெய் கட்டிடாய் எனில், யான் நஷ்டமாவேன்" என்றவாறு 51வது பாடலிலும் வெளியாகியுள்ளது. இவ்விரு பாடல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ள 'அழிதல்' அல்லது 'நஷ்ட' மாவது தனிவியக்தி அழிந்த நிலையல்ல; மாருக, முக்தி கிடைக்கும் என்ற எல்லா நம்பிக்கையும் இழந்து தான் ஒரு ஜீவனுக தனித்திருப்பதால் அனுபவிக்கும் அளப்பரிய அல்லல்களால் வேதனைக் கடலில் மூழ்கி அழியும் நிலையே யாகும். தன் தனிவியக்தியின் அழிவே உண்மையான உய்வு-மிகப் பெரிய லாபம்-ஆகையால், அத் தனிவியக்தியின்

அழியாமையே உண்மையான அழிவு-மிகப் பெரிய நஷ்டம்-ஆகும்.

"நீ என்னைச் சேராவிடில், உன்னைப் பிரிந்த பிரிவின் காரணமாக எழுந்த ஏக்கத்தால் நான் உருகிப் பயனற்று அழிவேன்" என்று இப் பாடலில் ஸ்ரீ பகவான் அருணாசலனோடு கலப்பதற்காகத் தனக்குள்ள ஏக்கத்தை வெளிப்படுத்திப் பாடினாலும், உண்மையில் பக்தன் ஒருவன் அனுபவிக்கும் இத்தகைய உருக்கமானது ஒருக்காலும் பயனற்ற அழிவில் முடிவுறாது. இவ் வுருகும் அன்பால் விளையும் பயன் என்ன என்பதை 59வது பாடலில் ஸ்ரீ பகவான் "நெக்கு நெக்கு உருகி யான் புக்கிட உனை புகல், நக்கனா நின்றனை அருணாசலா" என்று வெளியிட்டுள்ளார். அதாவது, அருணாசலனோடு கலப்பதற்காகத் தாபம் மேலிட்டு பக்தன் நெக்கு நெக்கு உருகவே, அருணாசலன் நாமரூப உபாதிகள் என்ற மறைப்பு எதுவுமற்று அம்மனமாய் விளங்கி தனது சுயம் ஜோதியுருவை வெளிப்படுத்தி பக்தனைத் தன்னோடு ஐக்கிய படுத்திக் கொள்வான் என்பது உறுதி. "அழல் மெழுகாய் அகத்து உனை நினைந்து நைந்து உருகும் அன்பு" என்று 'ஸ்ரீஅருணாசல பதிகம்' 2வது பாடலில் ஸ்ரீ பகவான் வர்ணித்துள்ள அத்தகைய ஆறாக் காதலால் பக்தனின் உள்ளமும் உடலும் நைந்து உருகினாலொழிய அருணாசலன் தனது ஜோதியுருவைக் காட்டமாட்டான். தானே உருவழியும் அளவு பக்தனின் தாபம் இவ்வாறு கொழுந்துவிட்டு எரியும்வரை அருணாசலன் அவனது கெஞ்சுதலுக்குக் கொஞ்சமும் இரங்காத வஞ்சகனைப் போலத் தோன்றுகிறான். தன் பக்தனின் அழுகைக்கும் புலம்பலுக்கும் மனம் இரங்காத கன்னெஞ்சனைப் போல பாராமுகமாயிருப்பது போன்று இவ்வாறு தோன்றுவதால் அருணாசலன் உண்மையில் பக்தனின் உள்ளத்தில் தாபத்தை மேலும் மேலும் கொழுந்துவிட்டு எரியுமாறு தூண்டிவிட்டுக் கொண்டேயிருக்கிறான். தன் தாபம் இப்படி எரிதழல் போன்று மேன்மேலும் ஓங்கி எரிவதால் பக்தன் இறுதியில் நீரில் கரைந்தழியும் பனிக்கட்டி போன்று அன்புக் கடலாகிய அருணாசலனில் அன்பால் உருகிக் கரைந்து உருவழிகிறான். ஆகையால், "அழல் மெழுகாய் அகத்து அருணாசலனை நினைந்து நைந்து உருகும் இவ்வன்பேதான் பக்தன் அவனுடன் இரண்டறக் கலந்தொன்றாக்கு வழியாகிறது.

## 35. சையெனத் தள்ளிற் செய்வினை சுடுமலா லுய்வகை யேதுரை யருணசலா

அ-ம்: அருணசலா! 'சை' எனத் தள்ளில், செய்வினை சுடும் அலால், உய்வகை ஏது? உரை.

பொ-ரை: அருணசலா! நீ என்னைச் சேராமல் 'சை' என இகழ்ந்து தள்ளிவிட்டால், முப்போதும் நான் செய்யும் வினைத் தீ என்னைப் பலனல் பொசுக்கிவிடுமே தவிர, நான் உய்ய வழி ஏது? நீயே சொல்வாயாக.

வி-ரை: சென்ற பாடலில் அடங்கியுள்ள கருத்தின் தொடர்ச்சியாகவும் அதே பாவத்திலும் இப் பாடலில் ஸ்ரீ பகவான் "நீ இவ்வாறு உன்னுடைய எல்லையற்ற அவ்வியாஜ கருணையினல் என்னைச் சேராமல், என் குற்றங் குறைகளைக் குறித்து 'சீ, தகான்' என விலக்கினல், எனக்கு நிச்சயமாக உய்வகை எதுவுமில்லை" என்று அருணசலனிடம் குறையிரந்து வேண்டுகின்றார். இங்கு 'சை' என்னும் சொல் தன்னைச் சேருவான் வேண்டி எதிர்பார்ப்போடும் நம்பிக்கையோடும் தலைவனை நாடும் தலைவியின் தகுதியின்மையைப் பார்த்து அவள்பால் தலைவன் இயற்கையாகக் கொள்ளும் அருவருப்பைக் குறிக்கும் இகழ்ச்சிக் குறிப்பேயாகும். அருணசல வரனுக்கேற்ற மணமகளாகும் தகுதியாவது யாது?

"அன்னிய சிந்தை அணுவுமிலா(து) என்னையே
உன்னிஎவர் என்றும் உபாசிப்பார் - என்னிலே
என்றும்ஒன்றும் அன்னவர்தம் யோகக்ஷேம மங்களை
என்றும் தரித்திடுவேன் யான்".

என்றும்,

"அன்னியம் எண்ணத அன்பினல் என்னைஎவர்
உன்னிடுவார் அன்னவர்க்கே உத்தமனே -என்னைஇவ்
வாருக மெய்யாய் அறியத் தரிசிக்கப்
பேருக்கத் தக்கோன்யான் பின்".

என்றும் 'பகவத் கீதாசாரம்' 31.16வது பாடல்களில் ஸ்ரீ பகவான் கூறியபடி, இதர முன்னிலை படர்க்கை நினைவற்று எப்பொழுதும் தன்னுட்டத்தில் ஸ்திரப்பட்டால்தான், அருணசலன் அவளைத் தனக்கேற்ற தலைவியாகக் கொண்டு அவளது க்ஷேமமான

வாழ்க்கையின் சகல பொறுப்புக்களையும் ஏற்றுக்கொண்டு தன்னோடு இரண்டறக் கலக்கும் அதி உன்னத அத்துவித நிலையை அளித்தருளுவதற் கேற்ற அருகதை அவள் அடைந்ததாகச் சொல்ல முடியும்.

"எச்செயலி னும்பெரிதா எச்சொல் லினும்பெரிதா
எச்சிந் தனைத்துமுயர் வெய்தியதா - மெச்சி
எவன்தன் அகமுகமாய் ஆரவிழை வானோ
அவன்பக்கு வத்தான் அறி."

-சாதனை சாரம்-185

"ஏது நினைப்பதிலும் எந்தாய் உனதருட்சீர்
பாதம் நினைப்பதுவே பாவனமாம்; - மீதிஎலாம்
வீண்நினைப்பே ஓயா வினைக்குவிப்பே; ஆகலின்நின்
தாள்நினைப்பே மாறுது தா."

-ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் -529

'இருக்கிறேன்' என்று பிரகாசிக்கும் ஆன்ம விளக்கமாகிய அருணாசலனின் அருட்சீர் பாதத்தின் நினைப்பையே விடாது பற்றி நிற்கும் பரிபக்குவமுற்ற பக்தன் ஒருவனே அவனோடு ஐக்கியமுற்ற-யோகமுற்ற-உண்மையான க்ஷேமநிலை அருளப்படுவதற்கு அருகதை யுற்றவன் ஆவான். தான் எந்தச் செயலையும் செய்பவனாகவும் அதன் பலனை அனுபவிப்பவனாகவும் எழுவதற்குச் சுவை அணுவளவாவது பக்தனின் மனதில் எஞ்சியிருக்கும் வரை, அவன் அருணாசலனைச் சேர நிச்சயமாக அருகதையற்றவனே யாவான். ஆகையால், முடிவின்றி வினைகளை புரிந்து அவற்றின் விளைவைப் புசித்து கொடிய பெரும் வினைக் கடலில் மூழ்கி உழலும் தீனனாகவும், அதனால் அருணாசலனைச் சேருவதற்கான தகுதியற்றவனாகவும் தன்னை உணர்ந்து, ஆனாலும் தன் தகுதியின்மையைப் பாராது அருணாசலன் அவனது அவ்வியாஜ கருணையால் அத் தகுதியின்மை அடியோடு அற்றுப்போகும் வண்ணம் தன்னை அணைத்துச் சேர்வான் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டு ஸ்ரீபகவான் "என் தகுதியின்மையைப் பொருட்படுத்தாது என்னை நீ சேராவிடில், இக் கொடிய வினைக் கடலில் மூழ்கி நான் அழிந்து போவதைத் தவிர உய்வதற்கு வேறு வழியே இல்லை" என்று அருணாசலனிடம்

இறைஞ்சுகின்றார். கர்ம வாசனை சுழலில் சிக்குண்ட பக்தனை அருணாசலன் ஒதுக்கித்தள்ளிவிடுவானாகில், சுற்றி எரிந்து வரும் காட்டுத் தீக்குப் பயந்து ஒரு மலையின் சிகரத்தைக் கஷ்டப்பட்டு வந்து ஏறும் மானை விலக்கினால் அது அழிவது போலும், மீகாமனில்லாத மரக்கலம் சுழற்காற்றில் சிக்குண்டு அழிவது போலும், யந்திரத்தின் அச்சில் ஏறுத தானியம் சுழற்சியில் அகப்பட்டு அரைபட்டழிவது போலும், அப் பக்தன் தன் கர்ம வாசனைகளின் உந்துதலால் மேலும் மேலும் வினைகளைச் செய்து குவித்து, அவ் வினைகளின் பலனாகிய வெப்பத்தில் வெந்து, அதனால் மேலும் பலகீனப்பட்டு அழிந்தே போவான். இக் கர்ம வாசனைத் தொடர்ச்சியில் சிக்குண்டு அழியாமல் காப்பாற்றப்படுவதற்கு அவன் பற்றிக்கொள்ளக் கூடிய ஒரே நம்பிக்கை யொளி யாதெனில், அருணாசலன் அவனைச் சேருவதற்குத் தகுதியற்றவனாக்குகின்ற அவ் வாசனைகளை பொருட்படுத்தாது தன் அவ்வியாஜ கருணையினால் தானாகவே முன்வந்து அக் கொடிய வாசனைகள் தாமே இருப்பற்றனவாகி மறைந்தொழியும்வண்ணம் அவனைச் சேர்ந்து தன்னில் ஐக்கியப்படுத்துவான் என்பதாகும்.

இங்கு 'செய் வினை' என்ற சொற்கள் ஜீவன் மனோவாக்குக் காயங்களால் இறந்தகாலத்தில் செய்த, நிகழ்காலத்தில் செய்கிற, எதிர்காலத்தில் செய்யப்போகும் நல்-தீ ஆகாமிய கர்மங்கள் அனைத்தையும் குறிக்கும். இத்தகைய கர்மங்கள் எல்லாம் அவற்றைப் புரிந்த கர்த்தாவைத் தத்தம் பலன்கள் என்ற நெருப்பால் சுட்டுத் துன்புறுத்தும். கர்ம பலன்களின் முடிவான அனுபவம் துன்பமே. இன்ப நுகர்வு போன்றவையும் மனோமயமே யாகையால், துன்பமே. ஏனெனில், அனுபவிக்கும் போக்தா அபிமானியாக இருப்பதால், அவன் எதை அனுபவித்தாலும் அது துன்பமாகத்தான் முடியுமே தவிர உண்மை இன்பமாக இருக்கமுடியாது. நல்வினை-தீவினை; புண்ணியம் -பாவம் ஆகிய எல்லாக் கர்மங்களும் இன்பம் துன்பம் என்ற பலன்களைத் தந்து தொடர்ந்து பல பிறவிகளுக்கு வழிவகுப்பதால், அவை சுக நீக்கத்துக்கே ஏதுவாகின்றன. மேலும், ஒரு பழத்துக்குச் சதை என்றும் விதை என்றும் இரு பகுதிகள் இருப்பதே போன்று, செய்வினையின் விளைவுகளும்

பழமாகிய பலன் என்றும் வித்தாகிய வாசனை என்றும் இரு விதமாயுள்ளன. "வினையின் விளைவு விளிவுற்று வித்தாய் வினைக்கடல் வீழ்த்திடும்" என்று ஸ்ரீ பகவான் 'உபதேச வுந்தியார்' 2வது பாடலில் கூறியபடி நல்-தீ வினைப் பயன்கள் முறையே சுக-துக்க வடிவில் அனுபவிப்பதால் தீர்ந்துவிட்டாலும், மீண்டும் அதே வினைகளைச் செய்யும் விருப்பமாகிய வாசனை வடிவான வித்துக்களாய் உள்ளத்தில் மிஞ்சி நின்று, அவை செய்பவனை மேன்மேலும் வினைக் கடலிலேயே ஆழ்த்து மாகையால் சுக-துக்க வடிவான கர்ம பலன்களைக் காட்டிலும் கர்ம வாசனைத் திரளே செய்பவனுக்கு அதிக அளவிலும் நீடித்தமுறையிலும் கேடு செய்கின்றது. கர்ம வாசனைகள் ஜீவனை அவற்றின் தொடர்ச்சியாக மேலும் மேலும் புதுப்புது ஆகாமிய கர்மங்களைச் செய்யத் தூண்டி, அதன் விளைவாய் அக் கர்மங்களின் பலன்கள் வர இருக்கும் பிறவிகளில் பிராரப்தமாகப் புசிக்கப்படுவதற்காக சஞ்சிதம் என்னும் களஞ்சியத்தில் சேர்த்து வைக்கப்படுவதால், கர்ம வாசனைகள், ஆகாமிய கர்மங்கள், சஞ்சிதம், பிராரப்தம் ஆகியவை நான்கும் ஜீவனைச் சம்சாரம் என்னும் எரிகனலாகிய கடலில் வீழ்த்திப் பொசுக்கி அலைக்கழிக்கவே ஒருங்கே தொழிற்படுகின்றன. ஆகவே 'செய்வினை' என்ற சொற்கள் கர்ம வாசனைகளும், அவற்றின் விளைவான புண்ணிய-பாவம் என்னும் இருவினை வடிவான ஆகாமியம், சுக-துக்கம் என்னும் இருவித பலனைக் கொண்ட சஞ்சிதம், பிராரப்தம் ஆகிய மூவினைகளும் அடங்கிய கர்ம சக்கரம் என்னும் முழு வினைத் தொகுதியைக் குறிக்கும் பொதுப் படையான பெயராக இங்கே ஸ்ரீ பகவான் கையாண்டிருப்பதாக நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

நாம் செய்யும் அனைத்து வினைகளும் நம்மை அதே போன்ற வினைகளை மேலும் மேலும் செய்வித்து அவற்றின் பலனைப் புசித்து தொடர்ந்து துன்புற்று உழலவே வழி வகுக்கும் தன்மை யுடையன வாதலால், நாம் செய்யும் எந்த ஒரு வினையும் இவ்வினைக் கடலினின்று நம்மை ஒரு போதும் மீட்கவல்ல உய்வகை-முக்திபெறும் வழி-யாக முடியாது. பின், உய்யும் வகைதான் யாது? அருணாசலனின் அருளேதான் அது! அவனுடைய அருளினாலன்றி மற்ற எவ்வகையினாலும் கொடிய

வினைக் கடலினின்றும் மீளுவது என்பது எந்த ஒரு ஜீவனுக்கும் இயலாத காரியமாகும். அதனால்தான் ஸ்ரீ பகவான் "அருணாசலனே, நீ என்னை அருளால் சேராமல் 'சை' என்று வெறுத்து ஒதுக்கித் தள்ளிவிட்டால், நான் செய்த முன்வினைகளும் என் வாசனைகளால் இப்போதும் இனியும் செய்யப்போகும் வினைகளும் தத்தம் தீ போன்ற பலனால் என்னைச் சுட்டுப் பொசுக்குமே தவிர, நான் உய்யும் வழி ஏதுண்டு? நீயே சொல்க" என்று அவனது அருளுக்காகக் கெஞ்சிப் பிரார்த்திக்கின்றார்.

ஆகவே, உய்வகையாவது அருணாசலன் நம் குற்றங்களைப் பார்க்காமல் தன் அவ்வியாஜ கருணையினால் 'சரி' என நம்மை ஏற்றலே தவிர, 'சை' எனத் தள்ளுவதல்ல. அவன் அவ்வாறு தள்ளிவிட்டால், அது அழியும் வகையேயன்றி உய்யும் வகை யில்லை. ஸ்ரீ பகவான் இப் பாடலை 'உரை' என்ற சொல்லுடன் முடிப்பதால் 'இது நீ அறிந்ததே யன்றோ?' என்று தன்னுடைய இக் கருத்துக்கு அருணாசலனது உடன்பாட்டைத் தான் எதிர்பார்ப்பதாகக் குறிப்பாக உணர்த்துகின்றார்.

## 36. சொல்லாது சொலி "நீ சொல்லற நில்லென்று சும்மா விருந்தா யருணாசலா

அ-ம்: அருணாசலா! 'சொல் அற நில்' என்று நீ சொல்லாது சொலி, சும்மா இருந்தாய்.

பொ-ரை: அருணாசலா! "பேச்சற சும்மா நிலைத்திரு" என்று நீ என்னிடம் வார்த்தையால் கூறாமல் மோனக் குறிப்பால் உணர்த்தி, அவ்வாறே நீயும் சும்மா இருந்தாய்.

வி-ரை: சென்ற பாடலை "உய்வகை ஏது? உரை" என்று முடித்த பிறகு இப் பாடலில் ஸ்ரீ பகவான் இக் கேள்விக்கு அருணாசலன் மௌனத்தால் தனக்கு உணர்த்திய விடையை வியந்து மகிழ்ந்து வெளியிடுகின்றார். இம் மௌன விடையே தான் 33வது பாடலில் "உருப்படு வித்தை காட்டு" என்று அவர் பிரார்த்தித்ததற்கும் தக்க விடையாக அமைகிறது.

ஸ்ரீ பகவானது இக் கேள்விகளுக்கு அருணாசலன் சொற்களாலன்றி மௌனத்தால் மட்டுமே விடையளிப்பானேன்?

அருணாசலனின் ஜோதியுருவாகிய ஆன்ம சொருபம் எண்ணத்திற்கும் சொல்லுக்கும் எட்டாத அதிசூக்ஷ்ம பாரமார்த்திக உண்மை யாதலால், அது மனத்தினுல் அறிபடவோ சொற்களால் அறிவிக்கப்படவோ முடியாததாகும். உண்மையில் எண்ணமும் சொல்லும் ஆன்மசொருபம் உள்ளபடியே ஒளிர்வதைத் தடுக்கவும் அதன் உண்மை யியல்பை மறைக்கவும் செய்யும் திரைகளே யாகும். இத் திரைகள் நீக்கப்பட்டாலன்றி ஆன்மாவை உள்ளபடி அறியவோ அறிவிக்கவோ முடியாது. எனவே, எண்ணமும் சொல்லும் அடங்கிய பிறகு மிஞ்சியுள்ள சும்மா விருக்கும் நிலையாகிய மௌனமே குரு சீடனுக்கு ஆன்மாவை உணர்த்த உபயோகிக்கும் மொழியும், சீடன் ஆன்மாவை அறிய உதவும் சாதனமுமாகும். அதனுல்தான் அருணாசலன் "பேச்சற்றுச் சும்மா விரு" என்ற உபதேசத்தை ஸ்ரீ பகவானிடம் வாய்வார்த்தையால் சொல்லாமல் மௌனத்தால் உணர்த்தினுர்.

சற்குருவாகிய அருணாசலன் இந்த உபதேசத்தை மௌனத்தால் எவ்வாறு தெரிவிக்கிருன்? அவன் தானே மோன வடிவில் சும்மா விருத்தலாலேயே என்க. சற்குரு இவ்வாறு சும்மா விருக்கும் நிலையே சீடனை நீண்ட அஞ்ஞான நித்திரையினின்று எழுப்பும் உண்மையான மோன முத்திரை - மோனக்குறிப்பு ஆகும்.* சற்குரு சீடனிடம் "சும்மா விரு" என்று சொற்களால் உபதேசித்தால், இச் செயல் அவரது சொற்களுக்கு முரணுகுமாகையால், அது பலிதத்தில் தவறும். அவர் நடந்து காட்டுவதே பலிதத்தில் தவருது. எனவே,கூர்ந்த விவேகமுள்ள அதிதீவிர பக்குவியான சற்சீடனுகிய ஸ்ரீ பகவான் தன் செயலைக் கண்டு அதன் குறிப்பை உணர்ந்து உய்யும் விதத்தில் அருணாசலன் தன் உபதேசத்தை வாய்ச்சொல்லால் வழங்காமல் மோன இருப்பேவடிவாய்ச் சும்மா விருந்தான். தான் சும்மா விருத்தலாலேயே அருணாசலன் தன் பக்தனின் உள்ளத்தில் தன்னைப் போலவே உள்ளமர்ந்து ஆன்மாவாய் அசையாதிருக்க ஆசையைப் பெருக்குகிருன். இவ் வாசையை மேலும் மேலும்

---

* 'மோன முத்திரை' அல்லது 'சின் முத்திரை' என்று பிரசித்தமாக வழங்கும் விரல்களால் குறிக்கப்படும் முத்திரையானது உண்மையான மோன முத்திரை யாகாது. மனம் ஒடுங்கி ஆன்ம சொருபத்தில் ஒன்றி அசைவற்று நிற்பதனுல் நனவு, கனவு, துயிலாகிய மூன்று நிலைகளினின்றும் பிரியவே அவற்றைக் கடந்து மிஞ்சியொளிரும் துரியமாகிய உண்மையான மோன முத்திரையின் ஸ்தால வெளியீடே அது.

பெருக்குவதால் அருணாசலன் சுத்த சுயஞ்சோதியான அறிவொளியின் பிரகாசத்திற்கு தடையாகவுள்ள பக்தனின் பகிர்முகப் பிரவிருத்தி ரூபமான மன சேஷ்டைகளை அடக்கி அவனது உள்ளத்தில் தன்னுணர்வின் பூரணத் தெளிவாகிய ஆன்ம ஞானத்தை மலர்விக்கவே, அந்த ஞானபோதமாகிய மோனக்கடலில் அவன் மனம் மூழ்கிக் கரைகிறது. இது எல்லா மெய்யடியார்களும் கண்ட அனுபவ உண்மையாகும். இவ்வாறு தானே சும்மா இருப்பதன் மூலம், அருணாசலன் தன்னை அன்போடு நாடிவரும் பக்தர்களையும் தன் மோன நிலையில் தவறாது இருத்தி தன்போல் அசலமாய் இருக்கச் செய்கிறான். அவனது மௌனோபதேசத்தின் ஆற்றல் இத்தகையதாம். தன்போல் சும்மா இருக்கும்படிக்கே கற்றுத்தரும் கருணைமாமலையே அருணாசலன்.

தீவிர பக்குவிகள் சற்குருவின் மௌன சந்நிதியில் பெறும் சந்தேக நிவர்த்தி இத்தகையதே; தான் நினைக்கும் கேள்விக்குப் பிறிடம் சற்குரு வாயால் பதில் சொல்வதாலும், அல்லது தன்னுள்ளேயே புத்தியால் விடைகாட்டித் தருவதாலும் மட்டும் நடைபெறுவதல்ல. சீடனையும் தன் போலவே சும்மா இருக்கத் தூண்டுவதே குருவின் சும்மாவிருக்கும் மோனத்தின் நோக்கம். எழுந்த சந்தேகத்தை எழுப்பியவனை நோக்கி, "அப்படி எந்தக் கேள்வியையும் எழுப்பாமல் இப்படி என்போல் சும்மா இரு" என்று இருந்து காட்டி, அவனையும் இருத்திக் காட்டுவதே ஞானசற்குருவின் உபதேச லீலை. இதுவே தான் ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தி சனகாதி நால்வருக்கு உணர்த்திய உபதேசமுறை யாகும். இந்த மௌனமே தக்ஷிணாமூர்த்தி சொருபமான அருணாசலனின் அசலமான இயல்பு நிலையாகும். இந்த மௌனோபதேசம் காலதேசக் கட்டுப்பாடற்றதாலும், எனவே பக்குவ சீடனால் சற்குருவின் சந்நிதியில் மட்டுமின்றி சேய்மையிலும் எந்நேரமும் அனுபவிக்கக் கூடியதாலும், தூர தேசத்திலுள்ளோர் தம்மைக் கருதினாலுங்கூட அவர்களுக்கு அருணாசலன் முக்தியளிப்பான் என்ற பேருண்மையைச் சான்றோர்களும் நூல்களும் பன்முறை பறைசாற்றுகின்றனர். கனமோன சொருபமான அருணாசலனை பக்தன் கருத்தினால் கருதும்போது, அவன் அப் பக்தனின் உள்ளத்தில் அறிவுக்கறிவாக நின்று, "இப்படி என்போல் சும்மா விரு"

என்று உள்ளிருந்தே சொல்லாது உணர்த்தி தன்போல் அசலமா யிருத்தி வைக்கிறான்.

"சை யெனத் தள்ளில், செய்வினை சுடுமலால், உய்வகை ஏது? உரை" என்று ஸ்ரீபகவான் சென்ற பாடலில் பிரார்த்தித்த பிறகு, அருணாசலன், "சொல்லற நில்" என்று சொல்லாது சொல்லிச் சும்மா இருந்து காட்டுவதன்றி வேறு எப்படியும் ஆறுதலாக வாயால் பதில் கூறினும் சரிப்படாது. ஏனெனில், ஸ்ரீ பகவான் 'ஆன்ம வித்தைக் கீர்த்தனம்' 4வது சரணத்தில் கூறியவாறு, சொல் மானத தனுவின் கன்மாதி சிறிதின்றிச் சும்மா அமர்ந்திருத்தலே கன்மாதி கட்டவிழ்ந்து உய்வடைய ஒரே வழியாகும். சும்மா இருக்கச் செய்கின்ற முயற்சியைத் தவிர, மனம், வாக்கு, மெய்யால் செய்கின்ற மற்றெல்லா முயற்சிகளும் கர்மங்களே யாவதால், அவை ஜீவனைத் தீ போன்று சுடும் கன்மாதி கட்டினின்றும் விடுவிக்க உதவா. வலிமை மிக்க கர்ம வாசனைகளால் பொல்லாக் கர்மச் சக்கரத்தில் ஓயாது சுழற்றப்படும் ஜீவனுக்கு அச் சக்கரத்தின் நடுவில் என்றுமே அசைவற்று நிற்கும் அச்சாகிய 'நான் இருக்கிறேன் என்ற உணர்வாய் விளங்கிக் கொண்டிருக்கும் ஆன்ம சொரூபத்திலன்றி அசையாது ஒரு நொடியும் நிற்க அபய ஸ்தானம் வேறொன்றுமே யில்லை. இவ் வுண்மையையே ஸ்ரீ பகவான் 'ஸ்ரீ அருணாசல அஷ்டகம்', 8வது பாடலில் "இடவெளி அலையினும் நிலை இலை புள்ளுக்கு; இடம் நிலம் அலது இலை; வருவழி செல்லக் கடன்" என்று பாடி யிருக்கின்றார். ஆகையால் அவ் வான்ம உணர்வை நாடியறிந்து அதிலே அதுவாய் நிலைத்திருந்தாலன்றி, மூவித கர்மங்களாகிய பந்தம் கழலாது. இதை ஸ்ரீ பகவான்

"வினைமுதல்நாம் ஆயின், விளைபயன் துய்ப்போம்;
வினைமுதல் ஆர் என்று வினவித்-தனையறியக்
கர்த்தத் துவம்போய்க் கருமமூன் றும்கழலும்;
நித்தமாம் முத்தி நிலைஈதே."

என்று 'உள்ளது நாற்பது' 38வது பாடலில் அருளினார். "வஸ்து ஞானம் விசாரத்தால் வருமே யன்றிக் கோடிக் கர்மங்களாலும் சித்திக்காது" என்று 'விவேகசூடாமணி' 11வது சுலோகத்தில் ஆதிசங்கரர் அருளிய உபதேசமும் *இங்கே கவனத்தில் கொள்ளத் தக்கதாம். எனவே அன்னிய நாட்ட வடிவான எல்லாக் கர்மங்களையும்

---

* 'ஸ்ரீ ரமண நூற்றிரட்டு' பக்கம் 166 ஐக் காண்க.

விட்டு விட்டு தன்னுட்ட வடிவான ஆன்ம நிஷ்டையில் நிலை பெற்று சும்மா விருத்தலேதான் ஜீவனுக்கு உய்யும் வகை யாகும். அதனால்தான் சென்ற பாடலில் "உய்வகை ஏது? உரை" என்று ஸ்ரீ பகவான் பிரார்த்தித்ததற்கு "சொற்களால் இவ்வாறு பிரார்த்திக்கவும் எழாது சும்மா விரு" என்ற பதில் அருணாசலன் மௌனத்தால் உரைப்பதே பொருத்தமாகும். உய்வுக்கான உண்மையான பிரார்த்தனை மௌனமாய் ஆன்மாவில் ஒடுங்கியிருப்பதே யன்றி வாய் வார்த்தைகளால் வேண்டுவதல்ல.

> **"மெய்ப்பொருளே உள்ளத்து விண்டாலல் லா(து)உலகச்**
> **சொப்பனமா மாயை தொலையாது -சொப்பனநோக்**
> **குள்ளதான் ஆர்என்(று) உசாவும் உபாசனையே**
> **விள்ளுமா(று) ஆற்றும் விதம்."**
>
> **- குருவாசகக் கோவை -729.**

சொல்லால் பிரார்த்திப்பது ஒரு கர்மமே, எனவே கர்மமற்ற நிலையாகிய ஆன்ம நிஷ்டையுற சொல்லால் பிரார்த்திப்பதும் ஓய வேண்டும். சொல்லின் மூலம் எண்ணமே யாதலால், சொல்லற்ற நிஷ்டைநிலை எய்த 'நான்' என்னும் முதல் எண்ணம் முதற்கொண்டு எல்லா எண்ணங்களும் அடங்க வேண்டும். 'நான்' என்னும் முதல் எண்ணத்தின் எழுச்சியே எண்ணம், சொல், செயல் வடிவான எல்லா வினைகளும் தோன்றுவதற்கான மூல வினையாகும். எனவே, சொல் மானத தனுவின் இதர கர்மங்களனைத்துடனும் இந்த முதல் எண்ணம் அடங்கும் போதுதான், உள்ளத்தில் சுகக்கடல் பொங்குகிறது. எல்லா சொல்லுணர்வும் அடங்கிய இதயத்தில் சுகக்கடல் இவ்வாறு பொங்குவதே சென்ற இரு பாடல்களிலும் ஸ்ரீ பகவான் பிரார்த்திக்கின்ற உய்வு நிலை - அருணாசலனோடு சேர்கின்ற நிலை-யாகும்.

சென்ற பாடலின் விளக்கவுரையில் கண்டவாறு இவ் வுய்வு நிலையைப் பக்தன் அடைவதற்கான ஒரே உபாயம் அருணாசலனின் அருள் மட்டுமேயன்றி, அவன் மனத்தாலும், வாக்காலும், உடலாலும் செய்யக் கூடிய எந்தக் கர்மங்களுமல்ல. "மௌனம் உள் எழும் ஒரு மொழி அருள் நிலையே" என்று ஸ்ரீ பகவான் 'உபதேசத் தனிப்பாக்கள்' 27வது பாடலில்

கூறியபடி, அருளின் உண்மை சொரூபம் மௌனமே யாதலால், அவ்வருளுடன் பொருந்தி அதனால் அதன் முழுப்பயன் பெற வேண்டுமாயின், பக்தன் எல்லாக் கர்மங்களையும் விடுத்து மௌனத்தில் நிலைபெறுவது அவசியமாகும். இங்கே எல்லாக் கர்மங்களையும் விடுவது பிராரப்தப் பிரகாரம் தவறாது நிகழும் சொல் மானத தனுவின் கர்மங்கள் அனைத்தையும் நிறுத்த வேண்டும் என்பதல்ல; அது யாராலும் இயலாததொரு காரியமாகும். "சொல் மானத தனுவின் கன்மாதி சிறிதின்றிச் சும்மா அமர்ந்திருப்பது" என்பது கர்மங்களைச் செய்யும் அம் முக்கருவிகளையும் 'நான்' என்று அபிமானிக்கும் கர்த்ருத்வ வடிவான அகங்காரத்தை விட்டுவிடுவதே யாகும். இவ்வாறு சும்மா விருந்தாலன்றி, 'கர்மங்களைச் செய்பவன் நான்' என்று எழும் எழுச்சி வடிவான மனம் அருணாசலனின் அருட்செயலை எப்போதும் குறுக்கிட்டுத் தடுத்துக்கொண்டேயிருக்கும். பக்தன் கர்மக் கட்டினின்றும் காப்பாற்றப்பட உண்மையாகவே விரும்பினால், அவன் கர்மஞ் செய்ய எழும் முனைப்பை இங்கே இப்போதே கைவிட வேண்டும். ஏனெனில், இவ்விதத்தில் முக்திக்கான தன் தீவிர இச்சையைப் பக்தன் வெளிப்படுத்தினால் தான், அருணாசலனின் அருள் விலாசம் உள்ளிருந்து ஆன்மப் பிரகாசமாய் ஓங்கி யெழுந்து அதன் பேரொளியால் அவன் தனி வியத்தித்துவத்தை விழுங்கிவிடும். பக்தனின் மனப்பூர்வமான பூரண சம்மதமின்றி அவன் மனத்தை யழிக்க அருணாசலனின் அருள் ஒருபோதும் இணங்காது. ஆகையால், சற்குருவின் மௌனமே அவரது அருளின் -அவர் சீடன்பால் கொள்ளும் அன்பின் -உண்மையான வடிவமாவது போன்று, சீடனின் மௌனமே அவனது குருபக்தியின் -அவன் குருவின்பால் கொள்ளும் அன்பின் -உண்மையான வடிவமாகிறது. சீடனின் அன்பு பரிபக்குவ முற்று பூரண அன்பாக -பரபக்தியாக-மலர்ச்சியடைந்தவுடனே அவன் மனம் பாவனாதீத சற்பாவமாகிய மௌனத்தில் தானே நிஷ்டையுறுவதால், அருணாசலனின் அருள் அப்போதே உள்ளத்திலிருந்து எழுந்து அவனைத் தன்னில் ஐக்கியப்படுத்திக் கொள்கிறது. எனவே, சென்ற பாடலில் ஸ்ரீ பகவான் செய்த பிரார்த்தனைக்கு அருணாசலன் மௌனத்தின் மூலம் அருளியதே அவன் அவரைத் தள்ளிவிடாமல் ஏற்றுக்கொண்ட சரியான முறை யாகும் என்று நாம் அறிந்து

கொள்ள வேண்டும்.

நம்மை உய்விக்கக்கூடிய அருளின் விளக்கம் -அருளொளி -என்பது 'நான் இருக்கிறேன்' என்று விளங்கும் ஆன்ம உணர்வே யாகும். "அருளும் வேணுமே, அன்பு பூணுமே" என்றபடி, அருணாசலனின் அருளை உள்ளபடி அனுபவிக்க வேண்டுமானால், 'நான்' என்ற இவ் வருள் விளக்கத்தை எப்போதும் நாட தீவிர அன்பு பூண வேண்டும். இவ்வருள் விளக்கத்தை தீவிர அன்புடன் நாடுவது ஒரு செயலல்ல -வினையல்ல; சும்மா இருப்பதே யாகும். சாதனை என்பது செய்தலல்ல; இருத்தலே யாகும். சும்மா விருக்கும் இந் நிலையே "சொல்லற நில்" என்று ஸ்ரீ பகவானுக்கு அருணாசலன் மௌனத்தின் மூலம் கற்பித்தபோது அவனால் இருந்து காட்டப்பட்ட நிலை யாகும். தற்கவனமாகிய இம் மௌன நிலையில் இவ்வாறு சும்மா நிலைத்திருத்தல் ஒன்றே கன்மாதி கட்டினின்றும் விடுபட்டு நிற்க சீடனுக்குள்ள ஒரே வழி யாகும். அருணாசலம் "சொல்லற நில்" என்று தனக்குச் சொல்லாது சொல்லிக் கற்பித்த இதே விசாரமார்க்கத்தைப் பின்வரும் 44வது பாடலில் "திரும்பி அகந்தனைத் தினம் அகக்கண் காண் தெரியும்" என்றவாறு உள்ளிருந்து உணர்த்தித் தனக்கு மீண்டும் கற்பித்தான் என்று ஸ்ரீ பகவான் வெளியிட்டுள்ளார். எனவே இப் பாடல்களிலிருந்து ஸ்ரீபகவான் தமது வாக்காலும் எழுத்தாலும் உலகுக்கு உபதேசித்த ஆன்ம விசாரமாகிய இதே மார்க்கம் தான் அவரது ஞானகுருவாகிய அருணாசலன் அவருக்கு மௌனத்தின் மூலம் உபதேசித்தருளிய மார்க்கமுமாகும் என்பதை நாம் அறியலாம். அருணாசலன் நம் உள்ளத்தில் மௌனத்தின் மூலம் எப்போதும் உணர்த்தி வரும் இவ்வுபதேசத்தை உணர்ந்து கொள்ளும் போதிய பக்குவம் நமக்கு இல்லாததால், இதே உபதேசத்தைச் சொற்களின் மூலம் நமக்கு அருள அவன் ஸ்ரீரமண பகவானாக ஒரு மனித கோலங்கொண்டு வருவது அவசியமாயிற்று.

சென்ற பாடலிலும் இந்தப் பாடலிலும் ஆத்ம சாதகர்களுக்குத் தேவையான மூன்று முக்கிய உளவுகளை ஸ்ரீபகவான் வெளியிட்டுள்ளார். அவையாவன: (1) மனோவாக்கு காயங்களால் நாம் நிகழ்த்தும் செயல்கள் யாவும் துன்பத்திற்கே வித்திடுமன்றி உண்மைப் பேரின்பமாகிய உய்வுக்கு வழிவகுக்கா (2) சொல் மானத தனுவின் செயல் சிறிதுமின்றிச் சும்மா

நிலைத்திருத்தலே நாம் அப் பேரின்பமான உய்வை அடையக்கூடிய ஒரே வழியாகும் (3) இவ்வாறு கர்மத்தினின்றும் விடுபட்டு சும்மா நிலைத்திருப்பதென்பது அருணாசலனின் திருவருளுதவியில்லாமல் நம் சொந்த ஜீவமுயற்சியால் இயலாததாகும். அதாவது, "சித்பத நல்தேன் உண்மலர் அளியாச் செய்திடில் உய்தி உண்டு" என்று ஸ்ரீபகவான் "ஸ்ரீ அருணாசல பதிகம்" 6வது பாடலில் கூறியபடி, அருணாசலன் தன் அருளால் நம் மனத்தை எல்லாவிதப் புறமுகக் கர்மங்களின்றும் மீட்டு அகமுகமாய்ச் செய்து 'இருக்கிறேன்' என்ற சைதனிய சொரூபமாய் விளங்கும் தன் பாதமலரில் நிஷ்கிரியனாய் இருத்தி வைத்தால்தான், நமக்கு உய்வு உண்டாகும். அவ்வாறின்றி அவனது திருவருள் நம்மை ஒதுக்கித் தள்ளிவிட்டாலோ, நாம் செய்கின்ற எந்த ஒருமுயற்சியும் நம்மை மேன்மேலும் சுடும் வினைக்கடலில் ஆழ்த்த உதவுமே யன்றி நாம் உய்வடைய ஒருபோதும் உதவாது.

"ஏறுவதாய் மேலேநான் எண்ணிக்கொண் டின்னுமின்னும்
சேறடியி லேஅமுந்திச் சிக்குகின்றேன்;- வீறுடையாய்!
போர்செயலில் வல்லநீ புக்கெனைக்காப் பாற்றுகமற்
றோர்செயலும் ஈயா எனக்கு."
- ஸ்ரீரமண ஸஹஸ்ரம் 279

மற்றெல்லா முயற்சிகளும் ஜீவ முனைப்பால் உண்டாகின்ற சேஷ்டைகளாயிருக்க சும்மா இருப்பதற்கு வேண்டிய முயற்சியோ, அம் முனைப்பால் ஆகக்கூடியதாயல்லாமல் இன்பமயமான ஆன்ம பிரஜ்ஞையாய் அகத்தில் ஸ்புரித்து அதனால் அம் முனைப்பு வடிவாகிய மனம் அசைவற்ற மௌனமாயுள்ள இருப்பு நிலையில் தானே மூழ்கி உருவழிந்து நிலைபெறும் வகையில் ஆறாக் காதற் பெருக்கை உள்ளத்தில் தூண்டி விளங்கும் குருவருளாலேதான் ஏற்பட முடியும்.

## 37. சோம்பியாய்ச் சும்மா சுகமுண் டுறங்கிடிற் சொல்வே றென்கதி யருணாசலா.

அ-ம்: அருணாசலா! சுகம் உண்டு சோம்பியாய்ச் சும்மா உறங்கிடில், வேறு என்கதி? சொல்.

பொ-ரை : அருணாசலா! நீ இப்படி ஆன்ம சுகத்திற் சொக்கி

உறங்கிக்கொண்டு சோம்பேறி போல சும்மா இருந்தால், நான் வேறு என்ன கதியாவது? நீயே சொல்க.

வி-ரை : அருணாசலன் தனக்கு உணர்த்திய மௌனோபதேசத்தைச் சென்ற பாடலில் சிலாகித்து மகிழ்ந்த பிறகு, அதற்கு முந்தைய பாடல்களைப் போலவே இப் பாடலிலும் ஸ்ரீ பகவான் பிரார்த்தனை பாவத்தையே மேற்கொள்கின்றார். அருணாசலன் மோனமாய்ச் சும்மா விருத்தலே அதி தீவிர பக்குவிகளான பக்தர்களுக்கு அவர்கள் உள்ளத்தில் உடனடியாகத் தன்னுணர்வைப் பூர்ணத் தெளிவுடன் மலரச் செய்யப் போதுமானதாயினும், ஸ்ரீ பகவான் தன் மனத்திலுள்ள அஞ்ஞான இருள் இன்னும் அகலாது இருப்பதைக் கண்டு, அதனால் தன்னால் அருணாசலனின் அதி யுன்னத மோன இருப்பாகிய அருள் வெளிப்பாட்டைப் புரிந்து பயன் பெற முடியாத பக்குவமற்ற தீனனாகத் தன்னை உணர்ந்து, "உனது மௌனோபதேச அருட் செயலாலும் துயரம் நீங்காத எனது அவல நிலையைக் கவனிக்காமல் நீ இவ்வாறு துயிலில் ஆழ்ந்து சுகித்துக் கிடந்தால், என் கதி என்னாவது?" என்று பாடுகின்றார். 10வது பாடலில்; "ஏன் இந்த உறக்கம் எனைப் பிறர் இழுக்க? இது உனக்கு அழகோ?" என்றும், 'ஸ்ரீ அருணாசல பதிகம்', முதல் பாடலில், "கருணையால் என்னை ஆண்ட நீ எனக்கு உன் காட்சி தந்தருள் இலை என்றால், இருள் நலி உலகில் ஏங்கியே பதைத்து இவ்வுடல் விடில், என் கதி என்னாம்?" என்றும் வெளியாகியுள்ள அதே குறைகூறும் பாவந்தான் இப் பாடலிலும் தொனிக்கிறது.

இப் பாடலுக்கு மேலும் இரு பொருள் காணலாம். இரண்டாவது பொருள் கீழ்வருமாறு: அருணாசலன் தனக்கு மௌனமாய் இருந்து காட்டிய உய்யும் வழிக்குத் தன் உள்ளார்ந்த ஒப்புதலைத் தெரிவித்து ஸ்ரீ பகவான் "ஆம், மனோவாக்கு காயங்களின் செய்கை சிறிதுமின்றி வெளிவிஷயங்களில் உதாசீனனாகச் சும்மா விருக்க, அதனால் அகத்தே விளங்கும் ஆத்ம சுகத்தை அமைதியாக அனுபவித்துக்கொண்டு, அறிதுயிலில் ஆழ்ந்து கிடப்பதைவிட வேறு கதி உள்ளதோ? இல்லையல்லவா? நீயே சொல்" என்று பாடுகின்றார். இங்கு "சோம்பியாய்" என்ற சொல் 'தொழிற்படாது கிடந்து' என்ற பொருள் படுவதால், அது மனோவாக்கு காயங்களின் செய்கைகள் யாவும் ஓய்ந்து முற்றும் ஒடுங்கிய நிலையைக் குறிக்கின்றது. "சும்மா சுகம் உண்டு" என்ற

சொற்றொடருக்கு, 'சும்மா இருக்க விளங்கும் சுகம் உண்டு' என்பதாகப் பொருள் கொள்ளலாம்."* அதாவது, ஸ்ரீபகவான் இங்கே எம்மாத்திரமும் இதயம் நீங்காமல் சும்மா விருப்பதேதான் சுகம் என்று உறுதிப்படுத்துகிறார். "உண்டு" என்ற சொல் இங்கே 'அனுபவித்து' என்று பொருள்படும்; அல்லது "சோம்பியாய்ச் சும்மா உறங்கிடில் சுகம் உண்டு" என்று அன்வயப்படுத்தினால், "உண்டு" என்ற சொல் "உள்ளது" என்று பொருள்படும். ஆனால் எவ்வாறு பொருள் கொண்டாலும், சும்மா விருப்பதே சுகம் என்பதே இச் சொற்றொடரால் பெறப்படும் தீர்ப்பாகும்.

சும்மா விருக்கும் இச் சுக நிலையை 'உறக்கம்' என்று ஸ்ரீபகவான் இங்கு .வர்ணிப்பதேனென்றால், நனவு கனவாகிய சகள நிலையில் உலகத் தோற்றம் எழுவதே எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாவதாலும், அத் தோற்றம் எழாத நிஷ்கள நிலையான தூக்கத்தில் துன்பம் ஒரு துளியும் இல்லாது போவது போல் சும்மா விருக்கும் மோனநிலையில் அயலறிவு அற்றுப் போவதன் காரணமாக துயரமும் அங்கு தோன்றுவதில்லை யாதலாலும், இந் நிலை தூக்கத்திற்கு ஒப்பிடப்படுகிறது. ஆயினும், சும்மா விருக்கும் நிலையில் 'நான் இருக்கிறேன்' என்ற வடிவில் சுயப்ரஜ்ஞை முழுத் தெளிவுடன் விளங்குவதால், இத் நிலை எல்லா ஜீவர்களாலும் தினசரி தன்னுணர்வின் தெளிவின்றி ஓர் இருள் நிலைபோல அனுபவிக்கப்படும் தூக்க நிலையினின்று வேறுபட்டதாகச் சொல்லப்படுகிறது, எனவே ஸ்ரீ பகவான் இங்கே குறிப்பிடுகின்ற இத்துயிலானது, இவ்வாறு தன் சொருபத்தில் விழிப்புற்றும், பொய்யான உலகத் தோற்றத்தையும் அதன் கண்ணுள்ள துயரங்களையும் பொறுத்தவரை உறங்கியும் இருக்கும் நிலையாதலால், அது அறிதுயில், ஜாக்ர சுழுப்தி, உறங்காத உறக்கம் என்று சொல்லப்படுகிறது. உண்மையில் இவ் வுறங்காத உறக்கத்திற்கும் ஜீவர்களால் தினசரி அனுபவிக்கப்படும் உறக்கத்திற்கும் வேறுபாடு கிடையாது. "உறக்கம் மூடமல்ல; அதுவே ஒருவனுடைய சுத்த நிலை, விழிப்பு அறிவல்ல; அது அறியாமையே, உறக்கத்தில் முற்றறிவு

---

இச்சொற்றொடரின் பொருளைப் பூர்த்தி செய்தற்காக 'இருக்க விளங்கும்' என்ற சொற்களைக் கூட்டிக் கொள்ளும் தேவையான நிலைக்கு 'அவாய் நிலை' என்பது இலக்கணக் குறிப்பு.

உள்ளது ; விழிப்பில் பூரண அறியாமை இருக்கிறது" என்பது ஸ்ரீ ரமணோபதேசம்* அதாவது, எல்லா ஜீவர்களின் வழக்கமான தினசரி உறக்கத்திலும் 'நான் இருக்கிறேன்' என்ற தன்னறிவு பூரணமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. ஆனால் விழிப்புக் காலத்தில் ஜீவர்கள் தம் உடலுணர்வைத் தன்னுணர்வாக எண்ணி மயங்குவதால், இத் தன்னுணர்வு உறக்கத்தில் இல்லாததாக, அவர்களுக்கு விழிப்புக் காலத்தில், தோன்றுகிறது. உண்மையான தன்னுணர்வை அதன் பூரணத் தெளிவோடு விழிப்புக் காலத்திலேயே அனுபவித்தறிந்தவர்களால் மட்டுமே அதே தன்னுணர்வுதான் உறக்கத்திலும் விளங்கிக் கொண்டிருக்கிறது என்பதைக் கண்டுகொள்ள முடியும்; அத்தகையோருக்கு அத் தன்னுணர்வேதான் உள்ளது; அது ஒன்றே சத்தியம்; எனவே மூவவஸ்தைகளிலும் முக்காலங்களிலும் இம் மெய்யான தன்னுணர்வைத் தவிர வேறொன்றும் அவர்களுக்குப் புலனாவதில்லை. அதனால்தான் ஸ்ரீ கண்ணபிரான் "ஜீவர்கள் அனைவருக்கும் எது இரவோ, அதில் மெய்ஞ்ஞானி விழித்துள்ளான்; ஜீவர்கள் எதில் விழித்துள்ளனரோ, அது தத்துவங்கண்ட மெய்ஞ்ஞானிக்கு இரவாகும்" என்று கீதை 2.69ல் கூறியுள்ளார். எல்லா ஜீவர்களுக்கும் இப்போது அறிபடாத உறங்காத உறக்கமாகிய இவ் வியல்பான நிலை யொன்றேதான் பரகதி - எல்லா ஜீவர்களும் அடைய வேண்டி தாம் அறியாமலேயே பாடுபடும் பூரண சுகமாகிய முடிவான பரமார்த்திக நிலை-யாகும். "உறங்கிடில் வேறு என் கதி?" என்று ஸ்ரீ பகவான் கேட்பதன் மூலம் தூங்காது தூங்கும் இந் நிலையைத் தவிர அடையத்தக்க புருஷார்த்தம் வேறு ஏதுமே இல்லை என்று முடிவாக உறுதி செய்கிறார். அதாவது, தூங்காது தூங்கும் இந் நிலை கைவரப் பெறாத எல்லா ஜீவர்களும் செய்வினைச் சுழலில் சிக்கி அதனால் விளையும் கடும் வேதனை வெந்தழலில் வெந்து மடிவதால், அவர்களுக்குச் செய்கையற்று சேஷ்டையற்று சோம்பியாய் ஜாக்ர சுழுத்தியில் லயித்து நிற்பதைத் தவிர வேறு கதி-புகலிடம்- இருக்க முடியாது.

'கதி' என்ற சொல் வழி, சாதனம், பிரயத்தனம், புகலிடம், நிலை அல்லது மோக்ஷம் எனப் பொருள்படும். எனவே, இச் சொல் இங்கே அடையப்பட வேண்டிய குறிக்கோளை மட்டுமின்றி அதை அடையும் வழியையும் குறிக்கும். உபாயத்தின் (வழியின்) தன்மை உபேயத்தின் (குறிக்கோளின்) தன்மைக்கு வேறாக

* ஸ்ரீ மஹர்ஷி வாய்மொழி பக்கம் 9ஐக் காண்க

இருக்கமுடியாதாகையாலும், சொல் மானத தனுவின் செயல் சிறிது மின்றி சும்மா விருப்பதே உய்யும் வழி என்று அருணாசலன் மௌனத்தால் வெளிக்காட்டியிருப்பதாலும், அவ்வாறு என்றும் பரமோனநிலையில் சலியாது நிஷ்டையுற்றிருப்பதே அடையவேண்டிய குறிக்கோளாகும். இவ்வாறு செயல் சிறிதுமின்றி சும்மா இருக்கப் பிரயத்தனம் செய்வதைத் தவிர்த்து வேறு எந்தவித பிரயத்தனமும் செய்யத் தக்கதல்லவாதலால், நாம் செய்ய வேண்டிய சாதனையை ஸ்ரீபகவான் 'சோம்பியாய்ச் சும்மா உறங்குதல்' என்பதாக இங்கே வர்ணித்துள்ளார். சும்மா இருப்பதற்கான பிரயத்தனத்தைத் தவிர மற்ற எல்லாப் பிரயத்தனங்களும் மனோவாக்கு, காயங்களால் செய்யப்படும் கர்மங்களே யாகும். எல்லாக் கர்மங்களும் துன்பத்திற்கே வழி கோலுவனவேயன்றி உண்மையின்பத்தை ஒருபோதும் துளியேனும் பயக்கா வாதலால், சுகம் நாடி நாம் இதுவரை கர்மவடிவாக செய்துவந்த எல்லாப் பிரயத்தனங்களையும் அறவே விட்டொழிப்பதைத் தவிர வேறு என்ன தகுந்த பிரயத்தனம் இருக்க முடியும்? சுகம் எப்போதும் நம்முடைய உண்மை யியல்பாகவே விளங்குவதாலும், அதன் அனுபவம் கர்த்ருத்துவ புத்தி வடிவான அகந்தை முனைப்பாலும் அதன் விளைவான கர்மங்களாலுமே தடைபடுவதாலும், அச்சொரூப சுகத்தை உள்ளபடி அனுபவிக்க இவ் வகந்தை முனைப்பை அடியோடு மறுத்து உள்ளத்தில் அடங்குவதைத் தவிர பிரயத்தனம்-கதி-என்பதாக வேறு எதுவும் தேவையில்லை. அவ்வாறின்றி, அவ் வகந்தை முனைப்பை வைத்துக்கொண்டு செய்யப்படும் எந்த ஒரு பிரயத்தனமும் உண்மை சுகத்தையடையும் வழி யாகாது.

இப் பாடலின் முன்ருவது பொருளாவது, "நான் வந்த வேலையைப் பாராது சும்மா உண்ணலும் உறங்கலுமாகிய அற்ப உலக சுகத்தை நுகர்ந்து சோம்பேறியாய் என் வாழ் நாளை வீணடித்துக் கொண்டால், நான் கெட்டழிவதைத் தவிர எனக்கு வேறு என்ன கதி கிடைக்கும்? நீயே சொல்க" என்பதாகும். நாம் வந்த வேலையாவது -மனிதப் பிறவி எடுத்ததின் நோக்கமாவது -ஆன்ம ஞான நிலையாகிய அருணாசலனின் அருட்பாதத்தை அடைய உள்ளன்புடன் ஓயாது முயற்சிப்பதே யாகும். மனம், மொழி, மெய்யினால் முடிந்தவாறெல்லாம் முயற்சித்தும் முடிவில் அவனது திருவடியை அடைய முடியாது

போவதால், இத்தகைய முயற்சி எதுவும் உண்மை இன்பத்தின் உறைவிடமாகிய அத்திருவடியை எய்துவிக்க உதவாது என்பதையும், அதனால் எல்லா முயற்சிகளையும் கைவிட்டு இத் திரிகரணங்களின் செயல்கள் சிறிதுமின்றி சும்மா விருக்க முயல்வதே செய்யத்தக்க முயற்சி என்பதையும் நாம் உணரும் நிலைக்கு வருவோம். இவ்வாறு செய்யத்தக்கதைத் தவிர்த்து, உண்டும் உறங்கியும் வாழ்க்கையை வீணடித்துக் கொண்டால், முடிவின்றி அடுத்தடுத்து பிறவியெடுத்து செய்வினையாகிய சுடு நெருப்பில் தொடர்ந்து பொசுக்குண்டு நலிவதே நம் கதி யாகும்.

இவ்வாறு செய்வன தவிர்தல் என்பது 'சோம்பல்' என்று வழக்கமாகக் குறிக்கப்படும் கெட்ட குண மாகும். ஆயினும், குற்றத்துக்காளாக்கும் இவ்விதமான சாதாரண சோம்பல் செய்யவேண்டிய முயற்சியைச் செய்யாதிருக்கும் நிலையே யன்றி எந்த விதமான முயற்சியுமே யின்றிச் சும்மா விருக்கும் நிலை யல்ல வாதலால், இது உண்மையான, பூரணமான சோம்பலாகாது. உண்மையான சோம்பல் என்பது சற்றும் தொழிற்படாத நிலை - சும்மா இருக்கும் முயற்சியைத் தவிர வேறு எவ்வித முயற்சியும் காணப்படாத நிலை -யாகிய திரிகரணச் சோம்பலே யாகும். பகிர்முக பிரவிருத்திகள் யாவும் பரிச்சின்ன முயற்சியே; அந்தர்முக ஸ்திர நிலையே பூரண முயற்சி யாகும். அதாவது, சும்மா விருத்தலே பூரண முயற்சியின் இயல்பான நிலை. அம் முயற்சி மனமுயற்சி யல்ல;அது ஆன்மாவின் இயல்பான தன்னுணர்வே யாகும். இப் பூரண முயற்சியானது மன, மொழி, மெய்யால் செய்யப்படும் பரிச்சின்ன முயற்சிகளினின்றும் முற்றும் வேறுபட்டுள்ளதால், அது 'முயற்சியற்ற முயற்சி' எனப்படுகிறது. சும்மா விருக்கும் இந்நிலை கர்ம வடிவில் செய்யப்படும் எந்த ஒரு முயற்சியுமற்று இருக்கும் நிலையாதலால், இது ஒரு சோம்பல் நிலை எனப்படுகிறது; ஆனால் இது பூரண முயற்சி வடிவாகிய நிலையாதலால், இது சோம்பலற்ற நிலை என்றும் சொல்லப்படுகிறது. உண்மையில், சும்மா விருக்கும் முயற்சியாகிய இப் பூரண முயற்சியுடன் ஒப்பிடுங்கால் எல்லா மனமுயற்சிகளும் சோம்பலே. அதனால்தான் ஸ்ரீ பகவான் சும்மா இருக்கும் பூரணமுயற்சியில் இறங்காமல் மனமொழி மெய்யாகிய வரையரைக்குட்பட்ட திரிகரணங்களால் செய்யப்படும் பரிச்சின்ன முயற்சிகளால் அற்ப சுகம் நாடுவதில் ஈடுபடும் சாதாரண ஜீவனின் நிலையை 'சோம்பியாய் சும்மா சுகம் உண்டு உறங்குதல்' என்று வர்ணிக்கிறார். எனவே,

எல்லா முமுக்ஷுக்களாலும் தவிர்க்கப்பட வேண்டிய சோம்பல் என்னும் கெட்ட குணமாவது தன்மறதி என்னும் நீண்ட அஞ்ஞான வுறக்கம் எழுவதற்குக் காரணமான பிரமாதம் தான்- தற்கவனச் சோர்வுதான்- என்பது நாம் அறிந்து கொள்ள வேண்டிய உண்மை யாகும்.

ஆகையால் 'நான் இருக்கிறேன்' என்ற தன்னுணர்வின் விளக்கத்தில் எப்போதும் விழிப்புற்று நிற்கும் நிலையே சோம்பல் என்பது சிறிது மற்ற நிலை யெனத் தகும். இவ்வாறு விழிப்போடு சும்மா விருப்பதே இயக்காற்றலார்ந்த பேரமைதி (dynamic stillness) என்னும் நிலையாகும். ஒரு பம்பரம் வெறுமனே நிற்பது போலத் தோன்றினாலும் உண்மையில் அது அதிவேகமாகச் சுழல்வது போன்று, பேரமைதி நிறைந்த இச் சும்மா விருக்கும் நிலையானது முயற்சியற்றதோர் சோம்பல் நிலை போலத் தோன்றினாலும் உண்மையில் அது அதிதீவிர பெரும் முயற்சியுள்ள பரமசக்தி வாய்ந்த நிலையே யாகும். அதனால்தான் ஸ்ரீ பகவான் "மௌனமே அதிதீவிரமான கிரியை" என்றும், "ஆன்ம விசாரம் என்பது சுத்தமாம் தன்னறிவில் முழு மனத்தையும் (கவனத்தையும்) அசைவின்றி நிலை நிற்கச் செய்கிற நிதித்தியாஸனமே (ஊக்கமிக்க பெரும் முயற்சியுள்ள கிரியையே) யாகும்" என்றும், கூறுகிறார் 'சும்மா விருக்கை யென்பது முயற்சி யற்றதோர் சோம்பல் நிலையன்று, வெளிமுகத்தில் முயற்சிகளென்று சொல்லப்படுகிற உலக வியவகாரங்களவ்வளவும் பரிச்சின்ன மனத்தாலும் இடைவிட்டும் செய்யப்படுகின்றனவே. அகமுகத்தில் சும்மா விருக்கை யென்னும் ஆன்ம வியவகாரமோ முழுமனத்துடன் இடையின்றியும் செய்யப்படும் பூர்ண முயற்சியாகும். வேறெவ்வகையாலும் நாசமாகாத மாயையானது முழுமுயற்சி யென்னும் இம் மோனத்தாற்றான் நாசமாக்கப்படுகிறது' என்றும் ஸ்ரீ பகவான் கூறுவதுண்டு.* இவ்வாறு தற்கவனச் சோர்வுவடிவான சோம்பலை விட்டுவிட்டு முழு முயற்சியோடு மௌனமாய்ச் சும்மா விருக்கும் இவ் வதிதீவிரமான கிரியையைப் புரிவதேதான் நாம் வந்த வேலை யாகும். இதுவேதான் மெய்யான கதி -உண்மையான உய்யும் வழியும் உண்மையில் உய்வடைந்த நிலையும் -ஆகும்.

*ஸ்ரீமஹர்ஷி வாய்மொழி பக்கங்கள் 38ஐயும் 50ஐயும், உபதேச மஞ்சரி 24 (ஸ்ரீ ரமண நூற்றிரட்டு) ஐயும் காண்க.

## 38. சௌரியங் காட்டிளை சழக்கற்ற தென்றே சலியா திருந்தா யருணசலா.

அ-ம்: அருணசலா! சௌரியம் காட்டினை? சழக்கு என்றே அற்றது? சலியாது இருந்தாய்.

பொ-ரை: அருணசலா! உன் அருள் வீரத்தை என்பால் காட்டினயா என்ன? அதனல் என்மனக் குற்றங்க ளெல்லாம் என்ருவது நீங்கிற்ரு என்ன? நீ இவ்வாறு கொஞ்சமும் அசையாமல் (என்னைப் பற்றிக் கவலையின்றி) இருக்கின்ருயே.

வி-ரை: என் பரிதாபமான நிலைமையைப் பற்றிக் கவலையில்லாமல் நீ இவ்வாறு உன் சொந்த சொருப சுகத்தை அனுபவித்து உறங்கிக் கொண்டு சோம்பேறி போல சும்மா விருந்தால், எனக்கு என்ன கதி யுண்டாகும்? என்று சென்ற பாடலில் ஸ்ரீ பகவான் அருணசலனிடம் பிரார்த்தனை பாவத்தில் கடிந்து கொண்டார். அதே கடிந்து கொள்ளும் பாவத்தில் தொடர்ச்சியாக இந்தப் பாடலிலும் "எப்போது உன் அருள் வீரத்தைக் காண்பித்தருளினய்? எப்போது என் குற்றங்களெல்லாம் நீக்கப்பட்டன? ஒன்றும் நடைபெறவில்லையே! அவ்வாறிருக்க, சற்றும் அதற்கான முயல்வு இல்லாமல் சும்மா இருக்கின்ருயே! இது உனக்குத் தகுமா?" என்று பாடுகின்ருர். அதாவது, "வரும்படி சொலிலை? வந்து என் படி அள; வருந்திடு; உன்தலைவிதி அருணசலா" என்று ஸ்ரீ பகவான் 94வது பாடலில் கூறியபடி, பக்தனைக் கருணையால் தன் திருவடியின்பால் கவர்ந் திழுத்துக் கொண்டபின், அருணசலன் அப் பக்தனின் குற்றங்கள் அனைத்தையும் அழித்து அவனைத் தன்னில் இரண்டற ஐக்கியப்படுத்தி கொள்ள சூரத்தனமாக முன்வந்து தானே அன்புடன் மேற்கொண்ட அருள் தொழிலைத் தற்போது பூர்த்தி செய்ய வேண்டியது அவனது கடமை யாகிற தல்லவா? இந்தத் தொழில் பூர்த்தியானதைக் கனிவுடன் உறுதிப்படுத்திய பிறகன்ரே அருணசலன் ஒய்வு கொள்வது நியாயம்?

'சௌரியம்' என்ருல் 'சூரத்தனம்' அல்லது 'வீரத்தன்மை' என்பது பொருள். ஸ்ரீ பகவான் இங்கே 'சௌரியம்' என்ற இச்சொல்லை ஆன்ம ஸ்புரிப்பு வடிவான அருணசலனின் வெல்லமுடியாத அருள் வல்லமையை குறிக்கப்

பயன்படுத்துகின்றார். 'சழக்கு' என்ற சொல் அருணாசலனின் மௌனோபதேசப்படி உள்ளத்தே செய்கையற்று மௌனமாய்ப் பொருந்தி சும்மா இருப்பதற்குத் தடையாக உள்ள மனதைப் புறவுலகம் நோக்கி இழுக்கும் வலிமை மிக்க ஆசாபாசங்களாகிய விஷய வாசனை வடிவான குற்றங்கள் அனைத்தையும் குறிப்பதாகும். அருணாசலன் அகம் ஸ்புரிப்பு வடிவான தன் அருட் சௌரியத்தை முழுத் தெளிவுடன் பக்தனின் உள்ளத்தில் காட்டும்போதுதான் அவனது வாசனை வடிவான சழக்கு அற்றுப் போகும். கற்பூரத்தில் பற்றிய நெருப்பு அதனை முற்றும் எரித்து முடித்த பின்பு அடங்கி விடுவது போன்று வாசனை வடிவான மனதின் அழிவோடு அகம் ஸ்புரிப்பும் அடங்கி விடுவதால், தன் அருள் தொழில் பூர்த்தியானதாகக் கொண்டு, அதன் பிறகே அருணாசலன் தனது யதார்த்த அசலநிலையில் சும்மா விருப்பது தக்கதாகும். எனவே, மனதைக் கடும்வேகத்துடன் வெளியே இழுத்து அலைக்கழிக்கும் கொடிய உட்பகைகளாகிய விஷயவாசனைகளால் பக்தன் இன்னமும் அலைக்கழிக்கப்பட்டு வரும்போது, அருணாசலன் தெள்ளத் தெளிவான 'நான் நான்' என்னும் சுய விளக்கத்தை-சௌரியத்தை -ஸ்புரித்துக் காட்டி அவ் விஷயவாசனைகளாகிய பகைவர்களை ஒழித்துக்கட்டாது வாளாவிருந்தால், அது அவனது அருள்வீரத் தன்மைக்கு அழகாகுமா? அதனால்தான் ஸ்ரீ பகவான் 'ஸ்புரிப்பு வடிவான உனது அருட் சௌரியத்தை நீ எப்போது எனக்கு காட்டி எனது உட்பகைகளனைத்தையும் அழித்தாய்? அசகாய சூரனை நீ இன்னமும் அவ்வாறு செய்யாதிருக்கும் போது, எல்லாம் செய்து முடித்துவிட்டவனைப் போன்று எவ்வாறு இவ்விதம் சும்மா விருக்கலாம்?' என்று அருணாசலனைக் கடிந்து வினவுகிறார். இப் பாடலுக்கு இன்னும் நான்கு வேறு விதமான பொருள் கொள்ளலாம். மேற்கண்ட கடிந்துகொள்ளும் பாவத்திலுள்ள பிரார்த்தனையான முதலாவது பொருளிலிருந்து சிறிதே வேறுபாடு கொண்ட இரண்டாவது பொருளாவது "அருணாசலனே! உன் அருள் வீரத்தை என்பால் காட்டினாய் என்றும், அதனால் என் மனக்குற்றங்கள் யாவும் நீங்கி விட்டன என்றும் கருதி நீ இவ்வாறு சும்மா விருந்துவிட்டாயா?" என்பதாகும்.

மேற்கண்ட இரு பொருளும் பிரார்த்தனை வடிவில் கடிந்து கொள்வதாகப் பாடப்பட்டிருக்க, மூன்றாவது பொருள் அடைவு

கூறுவதாகவும், கடைசி இருபொருளும் பொதுவான முறையில் அமைந்த துதிகளாகவும் உள்ளன.

மூன்றும் பொருளாவது, "ஞான சூரியனான அருணாசலனே! உன் அருள் வீரத்தை என்பால் காட்டினாய்; அதனால் என் மனக்குற்றங்க ளெல்லாம் நீங்கிவிட்டன. அவை அவ்வாறு ஒழியவே, உன் வேலை முடிந்ததாதலால், நீயும் சலனமற்ற உன் இயல்பான நிலையில் அசைவற் றிருந்து விட்டாய்!" என்பதாம். அதாவது, வாணலியிலுள்ள கொதிக்கும் எண்ணெயில் ஈரமான வடைமாவு இடப்பட்டதும் எண்ணெய் பொங்கி ஓசை யுண்டாக்கி பின்வடை வெந்து பக்குவமானவுடன் ஓசை யடங்கி அமைதியாவது போன்று, பக்தனின் மனம் இதயத்துள் புகுந்ததும் அங்கே அருணாசலனின் அருளொளியாகிய ஸ்புரணம் ஓங்கியெழுந்து, பின் அம் மனம் குணமலம் தீர்ந்து குற்றமற்ற தானவுடன் அடங்கி அமைதியுறுகிறது.

இங்கே 'என்றே' என்ற சொல்லை அருணாசலனை 'சூரியனே' என்று விளிப்பதாகவோ, 'சழக்கு அற்றது' என்ற சொற்றொடரோடு சேர்த்து 'என் சழக்குகள் அறவே அற்றொழியவே' என்றோ பொருள் கொள்ளலாம். 'சூரன்' என்ற சொல் 'வீரமிக்கவன்' என்று மட்டுமின்றி 'சூரியன்' என்றும் பொருள்படுமாதலால், 'என்றே' என்ற சொல்லுக்குச் 'சூரியனே' என்று பொருள் கொண்டதற்கியைய, இவ்விடத்தில் 'சௌரியம்' என்ற சொல்லுக்கு 'சூரியனது தன்மையான ஒளி' என்று பொருள் கொள்ளலாம். தன் ஒளியைக்காட்டுவதாலேயே சூரியன் இருளைப் போக்குவது போன்று, ஞான சூரியனான அருணாசலன் 'நான் நானே' என்ற சுத்த தன்னுணர்வின் தெளிவாகிய தன் சுயவிளக்கத்தை ஸ்புரித்துக் காட்டுவதாலேயே பக்தனது உள்ளத்தில் குடி கொண்டுள்ள அஞ்ஞான இருள்வடிவான மாயச் சழக்கைப் போக்கி இருப்பற்ற தாக்குகின்றான். தன் சந்நிதிமாத்திரத்தாலேயே ஒரு காந்தமானது ஓர் இரும்புத்துண்டைக் கவர்ந்து தன்பால் இழுத்துத் தன்னுடன் இணைத்துக் காந்தமாக்கிக் கொள்வது போன்று, காந்த ப்ருவதமாகிய அருணாசலன் தன் அசல மோன இருப்பாகிய சந்நிதிமாத்திரத்தாலேயே பக்தனின் மனத்தைக் கவர்ந்து தன்பால் இழுத்துத் தன் உண்மை சொருபத்தோடு ஒன்றுபடுத்தி, அதன் மூலம் அம் மனத்தின் மாசுகள் அனைத்தையும் அகற்றியழிக்கின்றார். ஸ்பரிச வேதியின் ஸ்பரிச

மாத்திரத்திலேயே செம்பு களிம்பு நீங்கி பசும் பொன்னாக மாற்றப்படுவது போன்று, பக்தனின் மனமும் அருணாசலனின் அருள் ஸ்பரிசத்தால் தன் கீழ்த்தனமான சழக்குகள் அனைத்தும் நீங்கப் பெற்றுப் பரிசுத்த ஆன்ம சொருபமாக மாறி மிளிர்கிறது. எனவே சூரியனதும், காந்தத்தினதும், ஸ்பரிசவேதியினது மான விசித்திர சக்திகள் யாவையும் தன்னிடம் ஒருங்கே கொண்டுள்ள அருணாசலன் தன்பால் யாதோர் இச்சா சங்கற்ப யத்ன மின்றியே தனது சுபாவமான அசல நிலையினின்றும் மாறாது தான் இருந்தபடி இருந்தே தனது பக்தனின் உள்ளத்தில் இருந்து வந்த மாயச்சழக்கை முற்றும் அழித்து தன் அருள்தொழிலைப் பூரணமாகப் புரிகின்றான்.

ஆகவே, அவனது ஸ்புரண தாண்டவமானது பக்தனின் திருஷ்டிக்கு ஒரு விசேஷ செயலாகத் தோன்றினும், அத் தாண்டவத்தினால் தன் மனச் சழக்கு அழிந்துபட்ட பிறகு அத் தாண்டவம் என்றுமே அருணாசலனின் நிர்விசேஷ, இயல்பான அசல இருப்பே யன்றி யாதொரு விசேஷசெயலுமல்ல என்பது அவனுக்குத் தெளிவாகத் தெரியவரும். இந்த ஞானோதயமே ஸ்ரீ பகவான் "இதயத்தில் 'நான் நான்' என்று சப்தமில்லாமல் தனக்குத்தானே தோன்றும் இந்த ஸ்புரிப்பை விடாது சும்மா விருந்தால் 'தேகம் நான்' என்னும் அகங்கார ரூப ஜீவபோதத்தை முற்றிலும் நாசமாக்கி, கர்ப்பூரத்திற் பற்றிய நெருப்புப் போல், தானும் சாந்தமாய்விடும்" என்று விசார சங்கிரகத்தில் குறிப்பிட்டுள்ள அகம் ஸ்புரணம் சாந்தியடைதலாகும். இதுவே சகஜ ஸ்திதி. ஆன்ம சொருபமாகிய அருணாசலனே எவ்வித மாற்றமு மின்றி என்றும் உள்ளபடி உள்ளான் என்றும், மனம் என்பதாக எதுவும் எந்தக் காலத்திலும் தோற்றமாத்திரமாகக் கூட தோன்றியதில்லை என்றும், எனவே அழிந்ததுமில்லை என்றும் தெளிவாகத் தெரிகின்ற அஜாத அனுபவம் ஆகும். அருணாசலனின் இந்த இயல்பான அசல ஸ்திதியே 'சலியாது இருந்தாய்' என்ற சொற்றொடரால் ஸ்ரீ பகவான் குறிப்பிட்டுள்ளதாம். எனவே அருணாசலன் தன் சௌரியத்தை, தன் ஸ்புரண தாண்டவத்தின் வல்லமையைக் காட்டுவதன் மூலம் தன் பக்தனின் சழக்கைச் சாமர்த்தியமாக அழிப்பதாகத் தோன்றினாலும், உண்மையில் அவன் எதுவுஞ் செய்யாது சும்மாதான் இருக்கின்றான். இதுவே அவனது அருட்செயலின் அற்புதம்.

நான்காம் பொருளாவது "அருணாசலனே! சழக்கற்ற சௌரியம் இதுவே என்று சலியாது இருந்து காட்டினாய்" என்பதாம். அதாவது, மனோ வாக்கு காயத்தின் சலனம் அற்பமுமின்றி சும்மா அசையாது இருப்பதன் மூலம் அருணாசலனின் இத்தகைய மௌனப் பிரயோகமே சழக்கற்ற தீக்ஷை என்று தன் அடியார்பால் செய்து காட்டுகின்றான். இவ்வாறு சலியாதிருப்பதே சரியான சௌரியங் காட்டும் வழி யாகும்; சித்தியாதி பிறவெல்லாம் உண்மையான வன்மை காட்டல் ஆகாது. எனவே, அருணாசலனின் வெறும் சலியாத இருப்பே 36வது பாடலில் ஸ்ரீ பகவான் புகழ்ந்து பாடும் மௌனோபதேசம் மட்டுமன்றி இப் பாடலில் அவர் புகழும் ஸ்புரணம் காட்டுதலுமாகும். உண்மையில் மௌனோபதேசம் என்பது அருணாசலன் 'நான் நான்' என்று அசலமாய் இருந்து ஸ்புரிப்பதே யாகும்.

மேற்கண்டவாறு, அருணாசலனின் சௌரியங் காட்டும் திருவருட் செயலாகிய ஆன்ம ஸ்புரண நடனம் ஒரு விசேஷ செயலாகத் தோன்றினாலும், பக்தனின் சழக்கை அழிப்பதன் மூலம் அருணாசலன் இத் திருவருட் செயல் உண்மையில் தனது நிர் விசேஷ, சலனமற்ற -சழக்கற்ற -இயல்பான இருப்பே என்பதை அவனுக்கு வெளிக்காட்டி விடுகிறான். பக்தனின் மனச் சழக்கு முற்றும் அழியாது இருக்கும் வரை இந்தஸ்புரண நடனம் அவனுக்கு ஒரு நூதன விசேஷ அனுபவமாகவே தோன்றும்; ஆனால் அந்த ஸ்புரணத்தின் பூரண தெளிவையும் அவன் அனுபவித்தவுடனேயே, அந்த ஸ்புரணானுபவத்தின் தோற்றமாத்திரமான புதுமையும் விசேஷத்துவமும் அடங்கி, அது அவனது சுபாவ, நித்திய, நிர்மல ஸ்திதியாகவே விளங்கும். அருணாசலனின் ஸ்புரண நடனம் என்பது உண்மையில் அவனது சலியாத இருப்பே என்று விளக்கமாகின்ற இந்தச் சஹஜ ஸ்திதியின் அனுபவங் குறித்தே ஸ்ரீ பகவான் "இதய மன்றகம் அசலமா நடமிடும் அருணமலை எனும் எலையறும் அருளொளிக் கடலே" என்று ஸ்ரீ அருணாசல அஷ்டகத்தின் 7வது பாடலில் பாடுகின்றார். இந்தப் பாரமார்த்திக அனுபவத்தை அருணாசலன் தான் என்றுமே சலியா திருந்து விளங்குவதால் சழக்கற்ற முறையில் இருந்து காட்டுகின்றான். இதுவேதான் அவன் அருளின் சழக்கற்ற சௌரியம்!

ஐந்தாம் பொருளாவது "அருணாசலனே! பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் உன் சௌரியத்தை அன்று காட்டினாய், அதனால்

அவர்களிடையில் ஏற்பட்ட விரோதம் ஒழிந்தது. அது தீர்ந்ததும், அக்கினி வடிவான நீ அசல வடிவாக விளங்கிக் கொண்டிருக்கின்றாய்" என்பதாகும். சென்ற பாடலுக்கும், இப் பாடலுக்கும், அடுத்து வரும் பாடலுக்கும் பொருத்தமான பல்வேறு பொருளைத் தரலாமாயினும், அவ்வவற்றிற்கு அடுத்து வரும் இரு பாடல்களும் பிரார்த்தனை பாவத்தில் பாடப்பட்டுள்ளதால், இந்த மூன்றுபாடல்களையும் பிரார்த்தனை களாக எடுத்துக்கொண்டால்தான், இவ் வைந்து பாடல்கள் பாவமும் ஒரே தொடர்ச்சியாக இருக்கும். இக் காரணத்தால் தான் இவ் விளக்கவுரையில் இம் மூன்று பாடல்களுக்கும் பிரார்த்தனைப் பொருளே முதல் பொருளாகவும் முக்கியமான பொருளாகவும் கொடுக்கப்பட்டுள்ளது.

## 39. ஞமலியிற் கேடா நானென் னுறுதியா ணாடிநின் னுறுவே னருணாசலா.

அ-ம்: அருணாசலா! ஞமலியில் கேடாம் நான் என் உறுதியால் நாடி நின் உறுவேன்?

பொ-ரை: அருணாசலா! நாயினும் கேடாகிய நான் எந்தத் திறத்தால் நாடி (விசாரித்து) உன்னை அடைந்துவிட முடியும்? (உன் அருளாலன்றி முடியாது என்றவாறு).

வி-ரை: தான் நாயினும் இழிந்தவன் என்று ஸ்ரீ பகவான் இங்கே குறிப்பிடுவது ஏன்? அற்பமான நாய்கூட தன் எஜமானனைத் தேடும்போது, அவனது ஆடை, அணி, உருவம், நிறம் இவற்றை லக்ஷியமாகக் கொள்ளாது அவனது வாசனையை மட்டுமே லக்ஷியமாகக் கொண்டு மோப்பத்தால் தேடி, அவன் எந்த வேடத்தில் இருந்தாலும், அவன் இருக்கும் இடத்தை அடைந்து விடுவதுண்டு. ஆனால் மனிதர்களாகிய நாம் அந்த நாயின் தகுதிகூட இல்லாதவர்களாவோம்; ஏனெனில், நம் நரபுத்தி பல பொறிகளின் ருசியிலும் சிதறுவதால், ஏகாக்கிரமற்றதாகும். நாம் இவ்வாறு நம் கவனசக்தியை ஒருமுகப்படுத்தி ஐம்புலன்களில் எந்த ஒரு புலனிலும் கூட ஏகாக்கிரமாய்ச் செலுத்த இயலாதவர்களாயிருக்கையில், அதனை ஒருமையுடன் அகமுகப்படுத்தி நுட்பத்திலும் நுட்பமாகிய ஆன்ம சொரூபமாகிய அருணாசலனை நாடி அடைய நமக்கு வேறு

என்ன சக்தியுள்ளது? சுபாவமாகவே ரஜோ-தமோ குணங்களின் வசப்பட்டதும் ஸ்தூலமானதும் சதா அலைவுறுவதுமான மனித புத்தியைக் கொண்டு ஆன்மாவை நாடி அடைய முயல்வது என்பது பட்டுத்துணியின் மிக மெல்லிய நூல் இழைகளை அதிகஸ்தூலமான கடப்பாரையின் துணையால் பிரிக்க முயல்வது போன்றதே, மிக நுண்ணிய ஒரு பொருளை காற்றில் அலையுறும் விளக்கொளியின் துணையால் காண முயல்வது போன்றதோர் செயலை ஒத்ததாகும். மாறி மாறி வரும் முக்குணங்களில் மனம் தனது சுபாவமான ரஜோ-தமோ குணங்களின் வசப்பட்டு புறமுகத்தில் அலைவுறுவதினின்றும் மீண்டு, அருள் வசப்பட்டு அகமுகமாகி நிச்சலமாக நிற்கும் அந்நிலையில், ஆன்மாவின் சுபாவமானது ஆன்மாவை நாடி அடைவதற்கு இன்றியமையாத சக்தியாக உதவுவதுமான அருளொளியே யாகிய சுத்த சத்துவ குணம் அம் மனதில் மேம்பட்டு ஒளிரும். இந்த சுத்த சத்துவ குணத்தின் மிகஅரிய, அதி உன்னத சக்தியால்தான் (உறுதியால்தான்) ஆன்ம அடைவு சாத்தியமாகிறது. எனவே இவ் வருளுதவியின்றி மனம் தன் சொந்த ஜீவமுயற்சியின் ராஜஸ பலத்தால் ஆன்மாவை ஒருபோதும் அடைய முடியாது.

இப் பாடலுக்கு வேறு இரு பொருளும் காணலாம். பொதுவாக பல மொழிபெயர்ப்பாளர்களாலும் உரையாசிரியர்களாலும் அளிக்கப்படும் இரண்டாவது பொருள் "அருணாசலனே! தன் எஜமானனை மோப்பத்தால் நாடி யடையும் விசுவாசமுள்ள ஒரு நாயை விட நான் கேடானவனா? அல்ல. ஆதலால் என் திடமான பக்தி சிரத்தையால் நான் உன்னை நாடி வந்து அடைந்து விடுவேன்" என்பதாகும். முதற்பொருளின்படி 'என் உறுதியால்' என்ற சொற்கள் 'எந்த பலத்தால்' என்று பொருள் கொள்ளப்பட, இரண்டாவது பொருளின்படி அச்சொற்கள் 'என்னுடைய பலத்தால்' என்று பொருள் கொள்ளப்படுகின்றன. இது ஒரு பொருள் பொதிந்த வித்தியாசமாகும். முதற் பொருளின்படி ஸ்ரீ பகவான் தான் நாயினும் கேடானவன் என்றும், எனவே தன் சொந்த பலத்தினால் அருணாசலனைத் தேடி அடைய முடியாதென்றும் உறுதிபட உரைப்பதாயிருக்க, இரண்டாவது பொருளை நாம் ஏற்றால் நாயைவிட தான் ஒன்றும் தாழ்ந்தவனல்ல என்றும், எனவே, தன் சொந்த பலத்தைக் கொண்டே அருணாசலனைத்

தேடி அடைய முடியும் என்றும் அவர் உறுதியாக உரைப்பதாகக் கொள்ள வேண்டும். இவ்வாறு முதல் இரண்டு பொருளும் ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையானவையாம். எனவே, இவ்விரு பொருளில் எந்தப்பொருள் அக்ஷரமணமாலையின் அடிப்படை பாவத்திற்கு பொருந்தி வரக்கூடியது என்பதை ஆராய்வோம்.

அக்ஷரமணமாலை முழுவதும் இழையோடும் பாவம் யாது? அருணாசலனின் அருளுதவியின்றி தன் சொந்த பலத்தினாலேயே ஆன்மஞானம் அடைய எந்த ஒரு ஜீவனுக்கும் இயலாது என்பதை நன்குணர்ந்து அவ்வருளுதவியையே என்றும் நாடி நிற்கும் பக்குவியான பக்தன் ஒருவனின் பிரார்த்தனை வடிவான தீன பாவமன்றோ அக்ஷரமணமாலை முழுதும் வெளியாகிறது? இந்த பாவம்தான், இப்பாடலுக்கான முதலாவது பொருளில் தெளிவாக வெளிப்படுகிறது. ஆனால் இரண்டாவது பொருளில் வெளிப்படும் பாவமோ இப்பாவத்திற்கு நேர் எதிரிடையானதாயுள்ளது. வெளிப்படையாக ஒன்றுக்கொன்று எதிரிடையான இவ்விரு பாவங்களுக்கிடையில் சமரசம் காண வழி யுண்டா? ஆம்! ஒரு விதத்தில் இவ் விரு பாவங்களுக்கும் இடையே ஓர் ஒற்றுமையைக் காண முடியும். அதாவது, முதலாவது பொருளில் அடங்கியுள்ள பாவமானது தன்னை ஓரிடத்திலிருந்து மற்றொரு பாதுகாப்பான இடத்திற்குக் கொண்டு சென்று காக்க தான் யாதொரு முயற்சியும் செய்யத் தேவையின்றி தன் தாயையே முழுதும் நம்பியிருக்கும் ஓர் பூனைக் குட்டியின் உதாரணமான மார்ச்சால நியாயத்தை ஒத்ததாகவும், இரண்டாவது பொருளில் அடங்கியுள்ள பாவமானது தன்னை பாதுகாப்பான இடத்திற்கு எடுத்துச் செல்லத் தன் தாயின் இடுப்பைக் கெட்டியாகப் பற்றிக் கொள்ளும் தனது சொந்த முயற்சியைச் சார்ந்து நிற்கும் ஒரு குரங்குக்குட்டியின் உதாரணமான மர்க்கட நியாயத்தை ஒத்ததாகவும் உள்ளது. ஆத்மசாதனையின் ஆரம்பக் கடடங்களில் பக்தனின் கர்த்துருத்துவ புத்தி பலமாயிருக்குமாதலால், அப்போது கடவுளை அடைய அவன் தன் கருவி கரணங்களால் பெரு முயற்சியில் ஈடுபடுவது இயல்பானதும் அவசியமானதுமாகும். இல்லையெனில், அவனது மனமானது பழக்க வாசனை காரணமாக உலகப்பொருள்களை நாடியே சதா ஓடிக்கொண்டிருக்கும். ஆனால் இத்தகைய முயற்சிகளால் அவனது மனம் மேன்மேலும் பக்குவமும் தூய்மையும் அடைய அடைய, அவனது பலமான

கர்த்ருத்வ புத்தி மெல்ல மெல்லத் தேய்ந்து, தனது சொந்த முயற்சிகள் மட்டும் கடவுளை அடைய போதாதென்பதைப் புரிந்து கொண்டு, அவன் திருவருளையே மேன்மேலும் சார்ந்து நிற்பான்.

இவ்வாறு ஆத்மசாதனைக் காலத்தில் அவன் முதலில் மேற்கொண்ட மர்க்கட பாவமானது மெல்ல மெல்ல மார்ச்சால பாவமாக முதிர்ச்சியுற்று திடம் பெறும். மார்ச்சால பாவம் முதிர்ச்சியுற்று பக்தனின் இயல்பாகவே மாறிய நிலையில் ஏற்படும் முழு ஆன்மசமர்ப்பணத்தின் விளைவாகத்தான் ஆன்மஞானம் கிட்டுகிறதாயினும், பக்தனுக்கு இத்தகைய மார்ச்சால பாவம் இயற்கையாக அமைவதற்கு அவன் முதலில் மர்க்கட நியாயப்படி ஆன்மசாதனையில் தீவிரமாகவும் உண்மையாகவும் முயற்சிகள் செய்துவருவது அவசியமாகும்.

"ஈசனருட் பூட்கையால் எம்முயல்வும் இன்றியே
மாசறுமார்ச் சால மரபினால் - பாசமற
இம்மையிலே ஞானசித்தி எய்தினோர் மர்க்கடம்போல்
அம்மையிலே ஆட்செய் தவர்."

-குருவாசக் கோவை-696

மர்க்கட நியாயப்படி கடவுளை அடைய பக்தன் எல்லா முயற்சிகளும் செய்தும் பல முறை அம் முயற்சிகளில் தோல்வி கண்ட பிறகேதான் அவனுக்குத் தனது முயற்சிகள் போதா என்ற விவேகம் ஏற்பட்டு, அதன் பயனாய் மார்ச்சால பாவம் உண்மையில் அவனிடம் திடமாய் வளரத் தொடங்கும்.

ஆண்டான் திருவருளால் அன்றித்தன் ஆள்வினையால்
ஈண்டாது சித்தி எனவறிவித்(து) -ஆண்டான்செய்
தண்ணருளை நாடத்தயாரிப்பே தோல்வியுண்டு
பண்ணு முயற்சிப் பயன் -குருவாசகக் கோவை-794

ஆண்டான் அருளுக்காக உண்மையாக ஏங்கி அழுது உள்ளம் உருகி கடவுளிடம் பூரணமாகச் சரணடைந்து ஏகபக்தி பூணுவதால் 'நான்' என்ற தன்முனைப்பும் அன்னியத்தை நாடாத திடவைராக்கியத்தினால் 'எனது' என்ற பற்றும் தேய்ந்து ஒழிந்த மனம் ஆகாயம் போன்ற தூய்மை அடைகிறது. மனத்தின் இத் தூய்மையே ஆன்மாவை நாடி அடைவதற்கு இன்றியமையாத தேவையான சக்தியாகிறது. ஆகாயம் போன்ற

தூய்மையின் காரணமாக கர்த்ருத்வம் சிறிதும் எழுவதற்கு இயலாத அம் மனம், இந்த ஆற்றல் அற்ப மனத்தின் ஆற்றல் அல்லவென்றும், தன்னை இழுத்துச் சென்று இதயத்திற் மூழ்கடிக்கும் அருள் வெள்ளத்தின் ஆற்றலே இது என்றும் உணரவல்லதாகிறது. கர்த்ருத்வம் அணுஅணுவாய்த் தேய்ந்து முற்றும் அழிந்து தூய்மை பெற்று ஒளிரும் அந்நிலையில்தான் தன்னைக் கவர்ந்து உள்ளே இழுத்துச் செல்ல இதயத்தினுள்ளிருந்து வெளிப்பட்டுக் கிளம்பும் அருளின் ஆற்றலுக்கு எவ்வித எதிர்ப்புமின்றி ஆட்பட்டுச்சரணடைய அம்மனத்திற்குப் பக்குவம் ஏற்படுகிறது. 'என்னுடைய ஆற்றல்' என்று உணரப்படும் போதிய பக்குவ மற்ற பக்தி - வைராக்கியத்தின் குறைபாடுடைய ஆற்றலினால் நாம் ஆன்மாவை நேரடியாக அடையமுடியாது; ஆனால் 'நான் -எனது' என்னும் போதத்தைத் தன்னில் கரைத்துத் தெளிந்த அறிவொளியால் உள்ளத்தில் எழுந்து விளங்கும் கடவுளின் மோன அருட்சக்தி என்று உணரப்படும் பூரண பக்குவமுற்ற பக்தி - வைராக்கிய மாகிய ஆற்றலைப் பக்தன் பெறுவதற்காக அத்தகைய பக்குவமற்ற ஆற்றல் தொடக்கத்தில் அவசியமாகிறது. எனவே, இன்னும் முதிர்ச்சியுறாத பக்தி -வைராக்கியம் உள்ள பக்தர்களுக்கு மர்க்கட பாவமே இயல்பானதால், அவர்களுக்கு இரண்டாவது பொருளே இப்பாடலுக்குப் பொருத்தமானதும் சரியானதுமாகும் என்று இயல்பாகவே தோன்றும். ஆதலால் இப்பொருளையே அவர்கள் கொள்வதில் தவறேதுமில்லை. ஆயினும் மர்க்கட பாவம் முற்றிலும் கரைந்து மார்ச்சால பாவமே முற்றும் நிறைந்த உயரிய பக்குவியின் உள்ளப்பாங்குடன் அக்ஷரமணமாலையை ஸ்ரீ பகவான் பாடியிருப்பதால், அவர் இப்பாடலை இரண்டாவது பொருளில் பாடினார் என்று நாம் சொல்ல முடியாது.

இவ்விரு பொருளுக்கிடையில் உள்ள வித்தியாசத்தை மேலோட்டமாக அறிந்திருக்கும் சில பக்தர்கள் முதலாவது பொருள் ஆன்ம சமர்ப்பண வழிக்கும், இரண்டாவது பொருள் ஆன்ம விசார வழிக்கும் பொருந்துவதாயுள்ளது என்று கருதுகின்றனர். ஆனால் உண்மை அவ்வாறன்று. ஆன்ம விசார மார்க்கத்தைச் சிரத்தையுடன் அனுசரிக்கும் சாதகனுக்கு இரண்டாவது பொருளில் அடங்கியுள்ள கர்த்துருத்வ புத்தியின் வலிமை மிகுந்த மர்க்கட பாவத்தைவிட முதலாவது பொருளில்

அடங்கியுள்ள தன்னடக்கம் நிறைந்த மார்ச்சால பாவமே உகந்ததும் மனதை இதயத்திலாழ்த்தி தன்னுணர்வின் தூய ஒளியில் கரைத்து அழிக்க உதவுவதானதுமாகும். உள்ளாழ்ந்து தூய தன்னுணர்வில் உறுதியாக நிற்கவேண்டுமானால் மனம் தனது தனி வியக்தித்துவப் பிடிப்பினின்றும் விடுபட்டு உருகிக்கரையத் தயாராயிருக்க வேண்டுவது அவசியமாகையால், மனம் தனது கர்த்ருத்துவ புத்தியை விடாப்பிடியுடன் பற்றி நிற்கும் வரையில் அது இவ்வாறு உருகிக் கரைந்து இதயத்தில் நிலைபெறுவது இயலாத காரியம் என்பதை நாம் அறிய வேண்டும். ஆகையால் மார்ச்சால பாவத்திற்கு அடிப்படையான ஆன்ம சமர்ப்பண மனப்பான்மை நன்கு ஊறிய மனத்திற்குத் தான் ஆன்ம விசாரத்தில் ஆழமாகச் செல்ல இயலும். எனவே இரண்டாவது பொருளினும் முதலாவது பொருளே ஆன்ம விசார சீலர்களுக்கு மிகப் பொருத்தமானதாகும்.

மேலும் ஆன்ம விசார மார்க்கத்திற்கே பொருந்தக்கூடியப் பொருளைக் காண நாம் விழைந்தால், "நான் என் உறுதியால்" என்ற சொற்களை "நான் என்ற உறுதியால்" என்று பொருள் கொள்ளலாம். இதுதான் இப்பாடலுக்கான மூன்றாவது பொருளாக அமையும். இம்மூன்றும் பொருளின்படி இப்பாடலின் மொழிப்புரையாவது "அருணாசலனே! ஓர் அற்ப நாயைவிட நான் கேடானவனேயாயினும், நான் என்று பிரகாசிக்கும் ஆன்ம விளக்கத்தின் உறுதியால் உன்னை லக்ஷியந் தவறாது வந்து அடைவேன்" என்பதாகும்.

தற்போது நம்மால் நான் என்று உணரப்படும் "நான் இன்னார்" என்னும் அகந்தையுணர்வு உண்மையில் ஞான சூரியனைப் பிரகாசிக்கும் ஆன்மசொருபமாகிய அருணாசலனின் ஒரு பிரதிபலன ஒளிக் கிரணமாகும். 'நான் யார்? நான் என்பது எது? நான் எப்படி வந்தேன்? எங்கிருந்து வந்தேன்? நான் வந்த வழி யாது?' என்றவாறு நாம் 'நான்' என்னும் இந்தப் பிரதிபலன அறிவொளிக் கிரணத்தைக் கூர்ந்து நாடும் போது, அதன் நீளம் (அதன் பிரவிருத்திகளும் தோற்ற மாத்திரமான இருப்பும்) குறைந்து கொண்டு கடைசியில் அது முற்றிலும் நசித்துவிடும். இதன் விரிவான விளக்கத்தை ஸ்ரீ ரமண வழியில் காணலாம்.

நான் எ(து) என்(று) ஆய அஃது
நலிவதற்(கு) ஏ(து) ஏ(து) என்றால்,
நான் எனும் அக விருத்தி
ஞானத்தின் கிரண மாகும்
நான் எனும் கிரணத் தோடே
நாட்டம்உள் செல்லச் செல்ல
நான் எனும் கிரண நீளம்
நசித்துநான் ஞான மாமே

-ஆன்ம விசார பதிகம் 9

இதுவே பகவான் ரமணரால் உலகுக் களிக்கப்பட்ட பேர் உளவாகும். "அஹம் விருத்தியை (நான் என்னும் அகந்தை யுணர்வை)க் கொண்டு ஆத்ம விசாரம் செய்வது, நாய் தன் எஜமானனை அவனது மோப்பங்கொண்டு தேடுவது போலாம். எஜமானன் எங்கோ ஓர் தூரமான இடத்திலிருக்கலாம். ஆனாலும் நாய் அவனைத் தடையின்றித் தேடிப் பிடிக்கும். இதற்கு எஜமானனின் மோப்பமே உண்மையில் ஆதாரம். அவன் அணிந்த உடை, கச்சை, உயரம் போன்றவைகளை அது ஆதாரமாக் கொள்வதில்லை. அது தேடும்போது அம்மோப்பத்தைத் தவிர வேறொன்றிலும் மனத்தைச் செலுத்தாமல், கடைசியில் அவனைச் சென்றடைகிறது. அதுபோலவே, ஆத்ம விசாரத்தில் உன் அனுபவத்தின் பிரதான ஆதாரமாகிய தன்மை என்னும் அஹம் விருத்தியே உனக்கு தவறாத உபாயமாகும். அதைத் தவிர மற்றெந்த உபாயமும் ஆத்மாவை அடைய நேரான சாதனமாகாது" என்று ஸ்ரீ பகவான் கூறுவதுண்டு.*

மேலும் 'நான் இன்னாராக இருக்கின்றேன்' என்ற அகந்தையாகிய கலப்புணர்வில் 'நான் இருக்கிறேன்' என்ற இன்றியமையாத சித் பகுதியே திருவருளின் விளக்கமாகும். ஆகையால் இப்பாடலில் உள்ள 'நான் என் உறுதியால்' என்ற சொற்கள் 'நான் என்று தெளிவாக விளங்கும் அருளொளியின் உறுதியால் -அருட்சக்தியால்' என்று பொருள்படும். இந்த அருளொளியின் உறுதியால்தான் நாம் ஆன்மசொருபமாகிய அருணாசலனை நாடி அடைய முடியும். 'நான் இருக்கிறேன்' என்று விளங்கும் இவ் வருளொளியை நாம் மேன்மேலும் கூர்ந்து கவனிப்பதாலேயே அது நம் இதயத்தில் மேன்மேலும்

*ஸ்ரீ மஹர்ஷி வாய்மொழி பக்கம் 84-85 ஐக் காண்க

தெளிவாக விளக்கமுறும். இவ்வருளொளியின் தெளிவையே தான் முந்தைய பாடலில் 'சௌரியம்' என்ற சொல்லால் ஸ்ரீ பகவான் குறிப்பிட்டுள்ளார். இவ் வருளொளியின் பூரண தெளிவை நாம் அனுபவிக்கும் போதுதான் நம்முடைய மனச்சழக்குகள் அழிந்தொழியும். அதாவது இவ்வருளொளி நம் உள்ளத்தில் என்றும் பெருகும் தெளிவான தன்னுணர்வாக விளக்கமுறும் போது, மனம் மேன்மேலும் தூய்மை அடையும். மனம் இவ்வாறு தூய்மை யடைய யடைய, அருளொளி மேலும் தெளிவாகப் பிரகாசிக்கும். 'நான் இருக்கிறேன்' என்ற ஆனந்தமயமான தூய தன்னறிவாகிய இவ் வருளொளியின் உறுதியால்தான் மனம் ஆன்மாபால் கவர்ந்திழுக்கப்பட்டு இதயத்தில் இணைக்கப்படுகிறது.

மனத்தை இவ்வாறு ஆன்மாபால் கவர்ந்திழுக்கும் இவ்வருளொளியின் தெளிந்த பிரகாசத்தால் விவேகம் எனப்படும் உள்ளத் தெளிவு எழுந்து, ஆன்மாவை நாடி யடையத் தேவையான பக்தி வைராக்கியம் ஏற்படுகிறது. உண்மையான விவேகம் உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு தெளிவாகப் பிரகாசிக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு பக்தி வைராக்கியம் அதிகரித்து கர்த்துருத்துவ புத்தி தேய்கிறது. விவேகத் தெளிவு ஆரம்பத்தில் போதிய பிரகாசமின்றி இருக்கும்போது, அதனால் உண்டாகும் பக்குவமற்ற பக்தி- வைராக்கியம் 'என்னுடைய உறுதி' என்று கர்த்துருத்துவ புத்தியின் காரணமாக உணரப்படும். ஆனால் விவேகத்தெளிவு மேலும் மேலும் பிராகாசமாக விளங்கும் போது, அந்தப் போலி கர்த்ருத்துவ புத்தி தேய்ந்து தேய்ந்து, அதனால் பெருகிக்கொண்டிருக்கும் பக்தி வைராக்கியம் 'என்னுடைய உறுதி' என்று உணரப்படாமல், மனத்தை அன்னிய நாட்டத்திலிருந்து மீட்டு மிகுந்த அன்போடு ஆன்மாவை நாட அகமுகமாய் வலிந்து கவர்ந்திழுக்கும் அருட்சக்தியேதான் என்று தெளிவாக உணரப்படுகின்றது. இவ் வருட்சக்தியின் உண்மையான கர்த்தா ஆன்மாவே என்றும், மனமாகிய தன்னுடைய செயலாவது இவ்வருட்செயலுக்கு ஆட்படுவது ஒன்றே யன்றி இனி வேறு யாதொன்றுமில்லை என்றும் இந்நிலையில் தெள்ளத் தெளிவாக விளங்குகிறது. சாதனையின் இறுதியில் கர்த்ருத்துவம் முற்றும் அழிந்த நிலையில் இதயத்திலிருந்து வெளிப்படும் ஆன்மாவின் அருட்சக்தியே

மனத்தைக் கவர்ந்திழுத்துச் சென்று தன்னில் இரண்டறக் கரைத்து சாதனையைப் பூரணமாக்குகிறது. ஆயினும் சாதனையின் தொடக்கக் காலத்தில் ஆன்மாபால் பக்தியுடனும் அன்னியத்தை நாடாத வைராக்கியத்துடனும் மனம் ஏகாக்கிரமாக விடாது முயன்று தன்னாட்டம் பயில்வது அவசியமாகிறது.

'ஞான வாசிஷ்டம்' போன்ற சில நூல்கள் ஆன்மஞானம் அடையத் தீவிர பக்தி சிரத்தையுடனும் திடவைராக்கியத்துடனும் சலியாது பாடுபடுவது மிக அவசியமாகும் என்று வற்புறுத்துகின்றன. அருளொளியின் விளக்கத்தினால் உள்ளத்தில் பிறக்கின்ற விவேக பலத்தால்தான் இத்தகைய முயற்சியை உண்மையில் செய்ய முடியும் என்று மேலே விளக்கப்பட்ட உண்மையை புரிந்துகொள்ளாது, கர்த்ருத்துவபுத்தி உரம் பெற்றுள்ள போதிய பக்குவமற்ற சில பக்தர்கள் வாசிஷ்டத்தில் வற்புறுத்தப்படுகிற கருத்து, அருளுதவியின்றி தன் சொந்த முயற்சியினால் ஆன்மாவை அடைய முடியாது என்று ஞானிகள் பலரும் பொதுவாக சாஸ்திரங்கள் பலவும் சாற்றிய உண்மைக்கு மாறாக இருப்பதாக நினைக்கின்றனர். அத்தகைய பக்தர்கள் இவ்வாறு சரியாகப் புரிந்துகொள்ள இயலாததால், ஞானிகள் பலரும் தெரிவித்துள்ள கருத்து இப் பாடலில் முதலாவது பொருளையும் மூன்றாவது பொருளையும் ஆதரிப்பதாயிருக்க, வாசிஷ்டத்தில் தெரிவித்துள்ள கருத்தானது இரண்டாவது பொருளைத்தான் ஆதரிப்பதாயிருக்கும் என்று அவர்கள் மேலோட்டமாக முடிவு செய்து விடுகின்றனர். வாசிஷ்டம் குறிப்பிடுகின்ற முயற்சியின் உண்மையான இயல்பைப் புரிந்துகொள்ளாத தவறால் இத்தகைய குழப்பங்கள் அப்பக்தர்களின் மனதில் எழுந்துள்ளன. இவ்வித குழப்பங்களுக்கு நாம் ஆட்படாதிருக்க ஆன்ம ஞானம் அடைவதற்கான முயற்சியின் தன்மையைப் பற்றி நாம் மேலும் ஆராய்வோம்.

ஜீவர்கள் தங்கள் தினசரி வாழ்க்கையில் செய்கின்ற பகிர்முக முயற்சிகள் யாவும் அவர்களின் விஷய வாசனை வடிவான ஆசைகள் காரணமாகச் செய்யப்படுவன வாதலால், அம் முயற்சிகள் ராஜோகுண வசப்பட்டனவாயும் கர்த்ருத்துவபுத்தியின் கலப்புடனுமே செய்யப்படுகின்றன. இதற்கு மாறாக, உள்ளடங்கி ஆன்மாவையடையத் தேவையான அகமுக முயற்சி அருளொளியின் பிரகாசத்தால் உள்ளத்தில் கிளர்ந்

தெழும் சத்வாசனை வடிவான பரபக்தி மேலோங்குவதால் மட்டுமே நிகழக்கூடுமாதலால், இத்தகைய சரியான முயற்சி சுத்த சத்வகுண மேலீட்டால் ஏற்படுவதால் அதில் கர்த்ருத்துவபுத்தியின் கலப்பு அற்பமும் இராது. அதாவது, அருள்நிலை என்பது ஸத்துவத்தினுள்ளும் சுத்த ஸத்துவமாக விளங்கும் நிலையாதலால், அவ்வருள் நிலை வசப்பட்டுள்ள ஜீவனின் உள்ளத்தில் ஆன்மாவை நாடி யடையும் முயற்சி எழும்போது, அத்தகைய முயற்சியில் தமோ ரஜோ குண கலப்பு அற்பமும் இருக்க முடியாது. எனவே அந்நிலையில் விளக்கமுறும் பிரயத்தனமானது ஆன்மாவாகிய அருள் பிரயத்தனமே யாகும். அவ்வாறின்றி, ரஜோ குணம் காரணமாக எழும்பும் கர்த்ருத்துவ புத்தியின் கலப்பு தன்னை அறியும் பிரயத்தனத்தில் கொஞ்சமும் மிஞ்சியிருக்கும் வரை, அத்தகைய ரஜோ குணப் பிரயத்தனம் நிச்சயமாகத் தோல்வி அடையும். அதனால்தான் ஞானிகள், 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' எனப் பாடியுள்ளனர்.

'நான் செய்கிறேன்', என்ற கர்த்ருத்துவபுத்தியின்றி எவ்வாறு முயற்சி செய்ய முடியும் என்று சில பக்தர்கள் இவ்விடத்தில் சந்தேகம் கொள்ளலாம். இதற்குத் தக்க விடை வாசிஷ்டத்திலேயே கொடுக்கப்பட்டுள்ள இரு உதாரணங்களினின்றும் ஒருவாறு புரிந்துகொள்ள முடியும். அவையாவன: நீருக்குள் மூழ்கி உயிருக்குப் போராடும் ஒருவன் மூச்சுவிடுவதற்குச் செய்யும் பெருமுயற்சியும், தலை முடியிற் தீ பிடித்த ஒருவன் பறந்து ஓடி தலைமுடியைத் தண்ணீரில் அமிழ்த்தும் முயற்சியுமாகும். மேற்கண்ட முயற்சிகள் உயிருக்காகப் போராடும் முயற்சிகளாதலால், அவை கர்த்ருத்துவ புத்தி கொண்ட மனிதன் முயற்சியாயிராமல் உயிரின் தவிர்க்க முடியாத தானாகவே எழும் இயல்பான முயற்சிகளாகும். அது போலவே, அருட்சக்தி உத்தம பக்குவ அதிகாரியின் உள்ளத்தில் தெளிந்த தன்னுணர்வாகிய பேரொளியாய் எழும்போது, அது அவனது மனத்தைக் கவர்ந்து வேகமாக உள்ளிழுப்பதால், அவன் இயல்பாகவே அன்னிய நாட்டத்தை விட்டொழித்து அப் பேரொளியில் மூழ்கித் தன்னை இழக்க முற்படுகிறான். இவ்வாறு அவன் செய்கின்ற முயற்சியானது இயல்பானதாகவும் தானாகவே நடைபெறுவதாகவும் இருப்பதால், அதைத் தான் முயன்று

செய்கின்ற ஒரு முயற்சியாகவே அவன் உணரான்; அதுவே உண்மையில் முயற்சியற்ற பெருமுயற்சியாகும். இந் நிலையில் 'நான் இம் முயற்சியைச் செய்கிறேன்' என்ற எண்ணம் அணுவும் எழாது, முயற்சி செய்கிறவன் எதிர்க்க இயலாத அருட்சக்தியின் ஈர்ப்பு வேகத்திற்குத் தான் உட்பட்டு உள்ளே இழுத்துச் செல்லப்படுவதாகவே உணர்கிறான்.

எனவே, வாசிஷ்டம் வற்புறுத்துகின்ற ஆன்மாவை அறிவதற்கு இன்றியமையாத தேவையான முயற்சி என்பது கர்த்ருத்வபுத்தியாகிய களங்கம் சிறிதுமற்ற உத்தம அதிகாரியின் பரிசுத்தமான உள்ளத்தில் அருணாசலனின் அருளொளியால் தானே அனுயாசமாக எழும் சுத்த சத்துவ குண முயற்சியே யன்றி, அருணாசலனை யடைவது என்பது 'நான் அவனை அடைவேன்' என்ற எண்ண வடிவில் எழும் கர்த்துருத்துவ புத்தியின் இழுப்பே என்ற விவேகமில்லாது அவனை அடையும் ஓர் ஆசையின் காரணமாக 'என்னுடைய சொந்த முயுற்சியின் உறுதியால் நான் உன்னைத் தேடி வந்து சேர்வேன்' என்று எழுகின்ற ராஜஸகுண முயற்சியல்ல என்று நாம் அறிந்துகொள்ள வேண்டும். தக்க விவேகமின்றி கடவுளை அடையக் கொள்ளும் இத்தகைய ஆசையையே ஸ்ரீ பகவான் அடுத்தப் பாடலில் "ஞானமில்லாது உன் ஆசை" என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார். இவ்வித ஆசையாற் செய்யப்படும் எந்த ஒரு முயற்சியும் தளர்வுற்று தோல்வியே அடையுமாதலால், தளர்வுக்கு யிடந்தராது ஆன்மாவை யடைவிக்க வல்ல மெய்ஞ்ஞானத்தை அளித்தருளுமாறு அப் பாடலில் ஸ்ரீ பகவான் அருணாசலனிடம் வேண்டுகின்றார்.

## 40. ஞானமில் லாதுன் னாசையாற் றளர்வற
## ஞானந் தெரித்தரு ளருணாசலா.

**அ-ம்:** அருணாசலா! ஞானம் இல்லாது உன் ஆசையால் தளர்வு அற ஞானம் தெரித்து அருள்.

**பொ-ரை:** அருணாசலா! உன்னைப் பற்றிய சரியான அறிவில்லாததால், ஆனால் உன்னிடத்தில் ஆவல் மட்டும் அளவுகடந்து மிகுந்ததால் மிகத் தளர்வுற்றிருக்கிறேன். இந்தத் தளர்வு நீங்கும்படி உன் மெய்ஞ்ஞானத்தை எனக்கு உணர்த்தி யருள்வாயாக.

வி-ரை: எல்லா பக்தர்களும் சாதனைக் காலத்தில் தளர்வினால் பாதிக்கப்படுவது இயற்கை யாதலால், இப் பாடலில் ஸ்ரீ பகவான் அத் தளர்வினை நீக்கியருளுமாறு வேண்டுகிறார். அவ்வாறு பிரார்த்திக்கும் போது இத் தளர்வு எழுவதற்கான இரண்டு காரணங்களைக் குறிப்பாக சொல்லுகின்றார். அதாவது கடவுளின் இயல்பைப் பற்றிய உண்மையான அனுபவ ஞானம் இல்லாதது ஒரு காரணம்; இரண்டாவது காரணம் இவ்வாறு அவனைப் பற்றிய உண்மையான ஞானம் இல்லாததால் அவன்மேல் ஏற்படும் ஆசையே. இங்கே குறிப்பிடப்பட்ட ஞானமில்லாத குறையாவது கடவுள் ஆன்ம சொருபமாகவே தன்னுள் எப்போதும் உள்ளான் என்ற அறிவு ஏற்படாததால் அவன் வெளியில் அன்னியமாகவும் தூரத்தில் எங்கோ இருப்பதாகக் கருதும் அஞ்ஞானமாகும். எனவே அவனது இயல்பைப் பற்றிய உண்மையான ஞானம் என்னவென்றால் 'அவன் எப்பொழுதும் உள்ளத்தில் நானாகவே-இருக்கிறான் என்ற யதார்த்த அறிவேதான். இவ் வறிவும் புதிதாக அடைய வேண்டிய அறிவல்ல. அது என்றும் இங்கேயே, இப்பொதும் உள்ளதே. ஆனால் இது தெரியாமல் அவனை நமக்கு அன்னியமாகக் கருதி அதனால் பிரிவுற்றதாகப் பிரமை கொண்டு மீண்டும் அடைய அவன் மேல் ஆசை கொண்டு அதனால் தளர்ச்சியுறுகிறோம்.

கடவுள் நமக்கு அன்னியமானவர் அல்லர் என்ற அனுபவ ஞானம் நமக்கு ஏற்படாதவரை நமக்கு அவர்மீதான பக்தி அல்லது அன்பு ஆசை வடிவில்தான்-துவிதமாக ஒன்றிலிருந்து மற்றொன்றின்மேல் செல்லும் அசைவு வடிவில்தான் இருக்க-முடியும். இவ்வாறு நமது பக்தி ஆசை-விருப்பு எனப்படும் விருத்தி வியாபார வடிவத்தில் இருக்கும் வரை உண்மையான பூர்ணதிருப்தி நமக்கு ஏற்படாது. மனத்தை வாட்டும் அமைதியற்ற இந்த அதிருப்தி நிலையே இப் பாடலில் "ஞானமில்லாது உன் ஆசையால் தளர்வு" என்ற சொற்களால் ஸ்ரீ பகவானால் குறிப்பிடப்படுகிறது. கடவுளை அடைய வேண்டும் என்ற ஆசையும் அதனால் ஏற்படுகின்ற தளர்வும் கடவுள் நமக்கு அன்னியமாக இருப்பவர் அன்று என்ற அனுபவ ஞானத்தினால் தான் அகலும். அதனால்தான் ஸ்ரீ பகவான் "தளர்வு அற ஞானம் தெரித்தருள் அருணாசலா" - "அருணாசலனே, அனாவசியத் துன்பமாகிய இத் தளர்ச்சி நீங்க, நீயே என் உள்ளத்தில் 'நான் நான்' என்று

பிரகாசிக்கும் உன் பூரண கேவலாத்துவித இயல்பாம் சகஜஞானவடிவாய் ஸ்புரித்தருள்வாயாக"-என்று பிரார்த்திக்கின்றார் அருணாசலனின் அருளால் இந்த ஞானம் இவ்வாறு உதிக்குங்கால் அவன் மீதுள்ள பக்தி அல்லது காதலானது ஆசை என்ற வடிவம் எழுச்சி அல்லது அசைவு வடிவம் பெறாமல் வெறும் இருப்பேயாகிய தனது சுபாவமான பரிசுத்த அன்பாக நிலை பெறுகிறது. இருப்பு வடிவமான இந்த பரிசுத்த அன்பே இறைவனாகிய அருணாசலனின் உண்மை இயல்பாகும், அன்பே சிவம்.

நம் மனம் ஒரு தனி வியக்தியாக இருக்கும் வரை அதனால் அன்னியப் பொருள் ஏதாகிலும் ஒன்றின் மீது ஆசை கொள்ளாமல் ஒரு கணமும் இருக்க முடியாது. எனவே உலகப் பொருள்களின் மீதான ஆசையை விட்டொழிக்க நம் உள்ளத்தில் கடவுள் மீதான ஆசையைப் பேணி வளர்த்துக் கொள்வது *அவசியமாகிறது. ஆனால் தமோ ரஜோ குண வயப்பட்டு வெளிப்படும் மனம் ஸ்தூலமாயும் சதா சலனமடைவதாயும் இயல்பாகவே இருப்பதால், அதற்குப் பல்வேறு வகையான ஸ்தூலமான புறப் பொருள்கள் மீது ஆசை கொள்வது இயல்பாகும். அத்தகைய மனத்திற்கு அதிநுட்பமான ஏக வஸ்துவாக விளங்கும் கடவுள் மீது ஆசை ஏற்படவேண்டுமானால், அதி நுட்பமான நிச்சலனமான சுத்த சத்துவகுண விளக்கமாயுள்ள அவனது அருளினால் மட்டுமே சாத்தியமாகும். ஆகையால், கடவுளை அடையும் ஆசை அவனருளாலேயே ஏற்பட்டதால், அவனுடைய உண்மை இயல்பை உள்ளவாறே அனுபவித்து அறியமுடியாது திகைப்புற்று அவனை அடையும் ஆசை நிறைவேறாதிருப்பதால் ஏற்பட்டிருக்கும் தளர்வைப் போக்கி முடிவான அனுபவ ஞானத்தை அருளி அவ் வாசையைப் பூரணமாக நிறைவேற்றி வைப்பது அவ் வருளின் பொறுப்பே யாகிறது. அதனால்தான் பின்வரும் பாடல்களிலும் ஸ்ரீ பகவான் "நேசமில் எனக்கு உன் ஆசையைக் காட்டி நீ மோசம் செய்யாதருள் அருணாசலா" என்றும், "தானே தானே தத்துவம்; இதனைத்தானே காட்டுவாய் அருணாசலா" என்றும், மேலும் இப் பாடலில் "ஞானம் தெரித்தருள் அருணாசலா" என்றும் பிரார்த்திக்கின்றார்.

---

*பக்கங்கள் 134/135ல் வரும் "கடவுள் தனக்கு அன்னியமின்றி விளங்குகிறான்"எனத் தொடங்கும் பத்தியை இங்கு மீண்டும் வாசித்துணரத்தக்கதாம்.

"ஞானமில்லாது" என்ற சொற்களுக்கு 'உன்னை அடையும் வழி பற்றிய அறிவின்றி' என்றும் இங்கே பொருள் கொள்ளலாம். இப் பொருளை மேற்கொண்டால், இப் பாடலின் பொழிப்புரையாவது "அருணாசலனே, உன்னை அடைதற்குரிய உபாயத்தைப் பற்றிய அறிவொன்று மில்லாமலேயே, ஆனால் உன்னை அடைய வேண்டுமென்ற ஆவல் மட்டும் மேலோங்கியதால் உண்டான தளர்ச்சி நீங்கி, அவ் வுபாயம் எதுவென்ற அறிவை எனக்கு போதித்து அருள்வாயாக" என்பதாம். அருணாசலனின் உண்மை சொருபம் நம் உள்ளத்தில்'நான்'என்று விளங்கும் இருப்புணர்வே யாதலால், அவனை உள்ளபடி யறிந்தடைவதற்கான ஒரே உபாயம் 'நான் யார்?' என்னும் விசாரமாகிய ஞானமார்க்கமே யாகும். இந்த ஞான மார்க்கத்தை வெளியே சொற்களால் ஒருவாறு விளக்க முடியுமானாலும், அருணாசலனின் அருளொளி நம் உள்ளத்தில் எழுந்தருளி தன்னை நேரிடையாக வெளிப்படுத்தி காட்டினால்தான் அம் மார்க்கத்தை நம்மால் பூரணமாகப் புரிந்து கொண்டு சரியாகப் பின்பற்ற முடியும். 'நான் நான்' என்று இருப்புணர்வாக அவ்வருளொளி நம் உள்ளத்தில் ஸ்புரித்து அவனை அடையும் வழியை நமக்கு நேரிடையாகக் காட்டும் போதுதான், அவனை அடைய நாம் செய்கின்ற முயற்சியானது ஆசையால் உண்டாகிற துவித பிரவிருத்தி வடிவம் பெறுமல் அத்துவித ஞான நிஷ்டையாகிய நிவிருத்தி வடிவாய் மாறி அவ்வினை துவித பிரவிருத்திகளால் விளைந்த தளர்வு முற்றும் ஓய்வுறும்.

இங்கே "தளர்வற" என்ற சொல் இப்பாடலில் முன்னும் பின்னும் வரும் சொற்களை விளக்குவதாகிய மத்திம தீபமாக விளங்குகிறது; எவ்வாறெனின், இப் பாடலில் முன்னுள்ள 'ஞானமில்லாது' என்பதும் 'ஆசை' என்பதுமாகிய சொற்களின் பொருளை மட்டுமின்றி பின்னல் வரும் 'ஞானம்' என்ற சொல்லின் பொருளையும் தெளிவுபடுத்துவதாகத் 'தளர்வற' என்ற இச் சொல் அமைந்துள்ளது. அதாவது, ஸ்ரீ பகவான் அருணாசலனிடம் பிரார்த்திக்கின்ற ஞானமானது அருணாசலனே உள்ளத்தில் ஸ்புரித்துக் காட்டும் நேரிடையான அனுபவத்தால் அடையக்கூடிய தளர்வற்ற ஞானம் - திடஞானம் - என்பதாகும்.

உண்மையான ஞானமில்லாத காரணத்தினல் பல பக்தர்களின் பக்தி கடவுளின் ஏதாவதொரு நாமரூபத்தின் மீது ஆசை வடிவம் கொள்கிறது. அவன் "எப் பெயரிட்டு எவ்வுருவில் ஏத்தினலும்

ஆர், பேர் உருவில் அப் பொருளை காண் வழி அது" என்றபடி உள்ளனகையால், இத்தகைய பக்தி வழிபாட்டினல் அப் பக்தர்கள் கடவுளைத் தாம் வழிபட்ட பெயர் உருவிலேயே தரிசிக்கக் கூடும். ஆனுல் அப் பேர் உருவைக் கண்டடைந்து அனுபவித்தாலுங் கூட, அது மாறுவதாலும் மறைவதாலும் தளர்வு நேரிடுகிறது. ஆகவே அத் தளர்வு நிரந்தரமாக அற வேண்டுமாயின், "மெய்ப்பொருளின் உண்மையில் தன் உண்மையினை ஓர்ந்து ஒடுங்கி ஒன்றுதலே உண்மையில் காணல்" என்றபடி அத்தகைய பக்தன் தன் உண்மையினை ஓர்ந்து அம் மெய்ப் பொருளின் உண்மையில் அத்துவிதமாய் ஒடுங்கி ஒன்ற இறைவன் அருள்புரியவேண்டும். அவன் இவ்வாறு தன் உண்மை யிருப்பில் அப் பக்தனை ஒன்றுபடுத்த அருள் புரிவது எங்ஙனமெனின் 'நான் நான்' என்றெளிரும் ஞானவொளியாக அவன் பக்தனின் உள்ளத்தில் ஸ்புரித்து தன்னை உணர்த்துவதால்தான்.

பக்தன் ஒருவன் தன் பக்தியால் சாலோக, சாமீப, சாருபங்களாகிய இம் மூன்று நிலைகளும் அடைந்தாலும், இவையாவும் ஆரோபமான மனோவிகாரங்களே யாதலால், அவை என்றாவதொரு நாள் அவனை விட்டு நீங்கி அவனது தளர்வுக்கு காரணமாகின்றன. ஆனுல் தன் உண்மையோ அதிஷ்டானமான ஆன்ம சத்திய மாகையால், அவனருளால் அப் பக்தன் தன் உண்மையை ஓர்ந்து அதிலே ஒடுங்கி ஒன்றுவானகில், அந்நிலை அவனை விட்டு நீங்காதாகையால் அந்நிலையில் தளர்வுக்கு இடமே யில்லை. இத் தளர்வற்ற ஞான நிலைதான் பக்தியின் முடிவான குறிக்கோளாய் அடைய வேண்டிய மெய் நிலையாகிய சாயுஜ்ய முக்தி யாகும். பந்த வீடற்ற பரசுக முற்றவாறு இந்த சகஜ ஞான நிலையில் நிற்றலே 'இறை பணி நிற்றல்' எனப்படும் பரபக்தி நிலையாகும். தன் உண்மையை ஒரும் ஞானமில்லாத பக்தி உண்மையான பூரணமான பக்தி யாகாது. 'இறைவன்' எப்போதும் நானக இருந்தொளிர்கிறார் என்று அறியும் அனுபவமாகிய ஞானத்தோடிருப்பதே உண்மையான பக்தியாகும். இவ் வுண்மையான பக்தி அன்னியப் பொருள் ஏதாவதொன்றின்மேல் பாயும், ஆசை வடிவாய் எழாது என்றும் தூய்மையான சுவாத்ம பிரியமாய் அமைதியாக நிலைத்து நிற்பதால், அது தளர்வு சிறிதேனும் இல்லாததாகும்.

## 41. ஞிமிறுபோ னீயு மலர்ந்திலை யென்றே நேர்நின் றனையென் னருணாசலா.

அ-ம்: அருணாசலா! ஞிமிறு போல் நீயும் "மலர்ந்திலை" என்றே நேர் நின்றனை! என்!

பொ-ரை: அருள்ஞான சூரியனான அருணாசலா! (முற்றும் மலரப்பெறாத ஒரு மலர் மொட்டின் முன்) தேனீ ஒன்று ("நீ இன்னும் மலரவில்லையே" என்று சொல்லிக் கொண்டு ரீங்காரம் செய்து) காத்து நின்று கொண்டிருப்பது போல "நீ இன்னும் பக்குவ முதிர்ச்சி பெறவில்லை" என்று என்னைக் குறை கூறிக் கொண்டு நீயும் என்முன் நிற்கின்றாயே! இது என்ன ஆச்சரியம்!.

வி-ரை: அருணாசலனே பக்தர்களின் இதயத் தாமரை இதழ்விரியுமாறு மலர்த்தக் கூடிய அருள்ஞான சூரியனல்லவா? ஆகையால் இங்கே 'என்றே' என்ற சொல் 'என்றவாறு' என்று மட்டுமன்றி, 'சூரியனே' என்றும் பொருள்படும் (என்று = சூரியன்). சூரியன் உதித்துப் பூவை மலர வைக்கும் வரையில் ஒரு வண்டு வேறு செயலறியாமல் அப் பூவின் முன் ரீங்காரித்துக் காத்துக் கொண்டிருக்கும். பூவை மலர்த்த அவ் வண்டுக்கு இயலாது. ஆனால் அருணாசலனோ சூரியனையும் ஒளிர்விக்கும் மூல தேஜஸானபடியாலே, தானே தன் பக்தனின் உள்ளத்தைப் பக்குவப்படுத்தி அருள வல்லவனாயிருக்க, தன் பக்தனின் பக்குவ அடைவிற்காக கேவலம் ஒரு வண்டைப் போலக் காத்திருப்பது தகாது என்றும், தானே தன் பக்தனைப் பக்குவப்படுத்தி அருள வேண்டும் என்றும் பிரார்த்தனை.

ஒரு மலர் முற்றும் மலர்ந்து விரியும் வரை ஒரு வண்டினால் அம் மலருள் புக இயலாது. ஆனால் மலர் சற்றே மடலவிழத் தொடங்கியதுமே, சூரிய வொளி அதை முற்றும் மலர்விப்பதற்காக அதனுள் புக வேண்டும். "......கிளர் உளப் பூ நன்றாய் விரி பரிதியாக விளங்கு" என்று ஸ்ரீ பகவான் 'ஸ்ரீ அருணாசல பஞ்சரத்னத்தின்' முதல் பாடலில் கூறியவாறு, அவனது உள்ளமாகிய தாமரைப் பூ உருகும் அன்பினால் கிளர்ச்சியுற்றதாயிருக்க, அவன் அருணாசலனின் அருளாகிய கதிரொளி தன் உள்ளத்தில் புகுந்து அதனை முற்றும் மலர்விக்க வேண்டி அருள் தாகம் கொண்டு அன்பு மேலிட்டு ஏங்கி

நிற்கிறான். ஆனால் மங்கைப் பருவத்தின் தலைவாயிலில் இருந்து தன் கணவனின் அணைப்பிற்காக கிளர்ச்சி யடைந்த உள்ளத்துடன் ஏங்கி நிற்கும் இளம்பெண் ஒருத்தி தன் ஏக்கத்தை அவனுக்கு வெளிப்படையாய் தெரிவிக்க முடியாமல் வெட்கம் மேலிட்டு அவனைப் பார்த்து "பூ வொன்று மலர்வதற்காக அதன்முன் காத்துநிற்கும் வண்டினைப் போல் நீயும் ஏன் இவ்வாறு காத்துநிற்கின்றாய்?" என்று மறை முகமாக வெளியிடுவது போன்று, இப் பாடலில் ஸ்ரீ பகவான் அருணாசலன்மேல் ஏற்பட்டுள்ள அன்பினால் கிளர்ந்தெழுந்துள்ள அருள் தாகத்தை மறைமுகமாக வெளிப்படுத்துகின்றார்.

சூரிய சந்நிதி மாத்திரத்தில் தாமரை எவ்வாறு தானே இயல்பாக மலருகிறதோ, அவ்வாறே சற்குரு சொருபமாகிய அருணாசலனின் சந்நிதி மாத்திரத்தில் பக்தனின் உள்ளம் தானே முயல்வின்றி அன்பினால் பக்குவமுற்று ஞானத்தால் விரிந்து மலர வேண்டும். ஆகையால் தன் சந்நிதி மாத்திரத்தாலேயே தன் பக்தனின் உள்ளத்தை மலர்த்தி ஆன்ம ஞானமாகிய கதிரொளியாய் உள்ளே புகாமல், "நீ இன்னும் பக்குவமுறவில்லையே" என்று சாக்குபோக்கு சொல்லிக் கொண்டு அருணாசலன் ஏதும் செய்ய இயலாத வண்டினைப் போல் சும்மா நின்று கொண்டிருப்பானேயாகில், அது என்ன வஞ்சம்-மாயம்!.

இப் பாடலில் 'நீயும்' என்ற சொல் 'நின்றனை' என்ற சொல்லுடன் சேர்ந்து அருணாசலனுக்கு ஆகில், உம்மை 'நீ கூட' என்ற பொருள் தரும் வியப்பும்மை யாகும். ஆனால் 'நீயும்' என்ற சொல் 'மலர்ந்திலை' என்ற சொல்லுடன் சேர்ந்து ஸ்ரீ பகவானுக்கு ஆகில், உம்மை பொருளேதும் தராத இசைநிறை என்று அறிய வேண்டும்.

"ஞிமிறு போல் நீயும் மலர்ந்திலை" என்ற சொற்களை வேறு விதமாகவும் பொருள் கொண்டால், இப் பாடலுக்கு பின்வருமாறு பொருள் பெறப்படும் "அருணாசலனே! (தேனைத் தவிர மற்றவற்றை நாடாத) வண்டைப் போல் (இறைவனைத் தவிர வேறு நாடாத) பக்குவ மலர்ச்சியை நீ இன்னும் பெறவில்லையே' என்று என்னைக் குறைகூறிக்கொண்டு என்முன் நின்றுகொண்டிருக்கின்றாயே. நான் என்ன செய்வேன்?" பக்தனின் உள்ளம் கடவுளை ஏகாக்கிரமாய்த் தேடும் பக்குவத்தை இன்னும்

அடையாது உலகத்திலுள்ள பற்பல பொருள்களின் மீதே கவர்ச்சியுற்றுத் திரியுமானால், கடவுளைத் தவிர வேறு எதையும் நாடாத ஏகாக்கிர பக்தியை ஏற்படுத்தி அருணாசலன் தன் அருளொளியினால் அவ் வுள்ளத்தைப் பக்குவப்படுத்த வேண்டியது தனது கடமையாகிறது. அருணாசலனே இவ்வாறு தனது அருளைப் பொழியாவிடில் ஆதரவற்ற தீனனான பக்தன் தானே என்ன செய்ய இயலும்?

## 42. தத்துவந் தெரியா தத்தனை யுற்றாய் தத்துவ மிதுவென் னருணாசலா.

அ-ம்: அருணாசலா! தத்துவம் தெரியா தத்தனை உற்றாய்; தத்துவம் இது என்!

பொ-ரை: தத்துவ ஞானமில்லாத அற்பனான என்னையும் நீ அருளால் சேர்ந்தாயே. உன்னுடைய இந்த அவ்வியாஜ கருணைத் தத்துவம் இருந்தவாறென்னே!

வி-ரை: மனிதப் பிறவி எடுக்கும் கோடிக்கணக்கான மக்களுள் ஒரு சிலரே முற்பிறவிகளில் செய்து பூர்த்தி பெறாது நின்று போன ஆத்ம சாதனையின் பலனாக பிறவியிலேயே அதி தீவிரபக்குவிகளாக வெகு அபூர்வமாகப் பிறக்கின்றனர். இத்தகைய அபூர்வமான ஜீவர்களிடம் உலக இன்பங்களில் விரக்தியும் தீவிர முமுக்ஷுத்வமும் இளமைப் பருவத்தில் இயல்பாகவே இருக்கக் காண்கிறோம்; இதனால் இவர்கள் தங்கள் இலட்சியத்தை நோக்கி இட்டுச் செல்லக் கூடிய தகுந்த குரு ஒருவரின் தரிசனத்திற்காக ஏங்கி நிற்கின்றனர். திருவருளினால் அவர்கள் தக்க காலத்தில் ஒரு சற்குருவை அடைந்து அவரைப் பணிந்து வழிகாட்டுமாறு இறைஞ்சும் போது குருவானவர் அவர்களின் பரிபக்குவ நிலையைக் கண்டு 'அது நீ' என்ற மகாவாக்கியத்தின் தத்துவத்தை அவர்களுக்கு உணர்த்துகிறார். இந்த உண்மையை குருவின் வாய்மொழியாகக் கேட்ட மாத்திரத்தில் (சிரவணம்) அவர்கள் இந்த மகா வாக்கியத்தில் அடங்கியுள்ள உண்மைப்பொருளை மனனம் செய்ய ஆரம்பிக்கின்றனர். இதன் பயனாய் அப்பொருளைச் சரியாகப் புத்தி பூர்வமாய் உணர்ந்த பின் அவர்கள் தம் கவனத்தை உண்முகப்படுத்தி 'எது நான்?' என்பதை அபரோக்ஷமாகக்

கண்டறிய முற்படுகின்றனர் (நிதித்யாசனம்). இவ்வாறு வெகுகாலம் செய்யும் தீவிரமான விசாரத்தால் (பயிற்சியால்) அவர்கள் இறுதியில் ஆன்மாவை சாட்சாற்கரித்து ஆன்ம நிஷ்டையில் திடமாக ஊன்றிவிடுகின்றனர். இவ் வுலகில் தோன்றிய ஞானிகள் பலரிடமும் இதே சாதனை முறையைத்தான் பொதுவாகக் காண்கிறோம். ஆனால் 'பிரம்மம்' என்னும் பெயரை அறியாமலேயே பிரம்ம ஞானம் பெற்ற புலவராகிய ஸ்ரீ ரமண பகவானின் வாழ்க்கையில் இத்தகைய சாதனை முறைத் தேவைப்படவில்லை. மற்றைய ஞானிகளைப் போலல்லாமல், ஸ்ரீ பகவான். தமது முந்தையப் பிறவிகளில் தொடங்கி பூர்த்தியாகாது விடப்பட்ட சாதனையை இப் பிறவியில் செய்து முடித்து அதன் மூலம் ஆன்ம ஞானம் பெறுவதற்காக அவர் பிறந்தவரல்லர்; அவர் உண்மையில் முக்தி வேண்டி பாடுபடும் உத்தம சீடர்களுக்கு வழிகாட்ட வேண்டி அவர்களின் தாபத்திற்கும் பிரார்த்தனைக்கும் செவி சாய்த்த திருவருளின் சித்தப்படி வந்து பிறந்தவர் ஆவர். ஆகையினால் அவர் தமது சற்குரு அருணாசலம் ஒரு மனித உரு தாங்கி தம் முன் தோன்றி வாக்கினால் உபதேசம் செய்யவோ, அல்லது வேதத்தின் முடிவான பொருளாகிய 'அது நீ' என்ற உண்மைகளடங்கிய வேதாந்தத் தத்துவங்களைப் புத்தகங்கள் மூலம் படித்தோ அல்லது பிறர் வாய்மொழியாகக் கேட்டோ தெரிந்துகொள்ள வெண்டிய அவசியமற்ற அத்தகைய அதி உன்னத பக்குவியாக ஆரம்பத்திலேயே விளங்கினர். அவரது உள்ளத்தில் ஆன்மாவாக விளங்கிக் கொண்டிருந்த அருணாசலம் ஒரு நாள் அவர் மனத்தில் திடீரென்று மரண பயத்தைத் தோற்றுவித்து அவரது முற்றும் பக்குவமடைந்திருந்த மனத்தை ஆன்மாபால் சட்டெனத் திருப்பி, "சாவுக்குரிய இவ் வுடல்தான் நானா? நான் யார்?" என்ற உண்மையைக் கண்டறிய உந்துவித்தது. திடீரென்று நிகழ்ந்த இந்த உண்முக நாட்டத்தைத் தவிர வேறு எவ்விதமான சாதனையும் அவர் வாழ்க்கையில் நடைபெறவில்லை. அருணாசலனின் அருளால் அவர் இதயத்தில் தூண்டுவிக்கப்பட்ட இந்தக் கண நேர சாதனையினால் ஸ்ரீ பகவான் அனாயாசமாக பாரமார்த்திக ஆன்ம ஞான நிலையில் திடமாக நிலைநிறுத்தி வைக்கப்பட்டார். அது முதற்கொண்டு ஸ்ரீ பகவான் உலகமகா குருவாக விளங்கி எண்ணற்ற தீன

பக்தர்களுக்கு அருள் பாலிக்கலானார். கேளாது அளித்த அருணாசலனின் பெருங் கருணைத் திறத்தையும் தாம் தேடாது அடைந்த அரிய அருட்பதத்தையும் எண்ணி எண்ணி வியந்து இப் பாடலில், "அருணாசலனே! யாதொரு தத்துவத்தையும் அறிந்திராத அற்பனான என்னையும் நீ உன் அவ்வியாஜ கருணையினால் ஆட்கொண்டாயே. இது என்ன அற்புதமான கருணைத் தத்துவம்! தகுதியற்றவர்க்கும் இவ்வாறு அருள்வது என்னே!" என்று இப் பாடலில் வியந்து பாடுகிறார்.

இங்கே தத்துவம் என்ற சொல்லை உண்மை, தன்மை, இயற்கை, வஸ்து, பிரம்மம், 'அது நீ' (தத்துவம்) என்ற பொருளைக் குறிப்பதாகவோ, அல்லது சாங்கிய யோகத்தில் குறிப்பிடப்படுகின்ற 25 மூலப்பொருளைக் குறிப்பதாகவோ அல்லது சைவ சித்தாந்தத்தில் பேசப்படுகின்ற 94 மூலப்பொருளைக் குறிப்பதாகவோ கொள்ளலாம். 'தத்தன்' என்ற சொல்லுக்கு தத்துப்பிள்ளை, சுவீகாரப் புத்திரன் என்பது நேரிடைப் பொருளாயினும் இப்பாடலில் ஸ்ரீ பகவான் இச்சொல்லை அன்னியன், அற்பன் என்ற பொருளிற் கையாண்டிருக்கிறார். மேலும் 'தத்து' என்ற சொல்லுக்கு தவறு என்றும் பொருள் கொள்ளலாமாதலால், இங்கே தத்தன் என்ற சொல்லைத் தவறு செய்தவன், தவறுள்ளவன், தவறுடையவன் என்ற பொருளில் எடுத்துக் கொள்ளலாம். மாறாக, இப்பாடலில் ஆரம்ப வரியிலுள்ள சொற்களை, 'தத்துவம் தெரியாது அத்தனை, என்றவாறு பிரித்தால் 'அத்தனை' என்ற சொல்லுக்கு அப்படிப்பட்ட என்னை என்று பொருள் கொள்வது இங்கே பொருத்தமாகும். உறுதல் என்னும் வினைச்சொல் பொருந்துதல், கலத்தல், சேர்தல், அடைதல், ஏற்றல், ஆட்கொள்ளுதல் அல்லது அன்பு கொள்ளுதல் என்பதைக் குறிக்கும். எனவே இப் பாடலில், "தத்தனை உற்றாய்" என்ற சொற்களுக்கு தவறு செய்த அற்பனாகிய என்னையும் பொருட்படுத்தி ஏற்று அருள் செய்தாயே, ஆட்கொண்டாயே, சேர்ந்தருளினாயே, கலந்தருளினாயே என்று பொருள் கொள்ளலாம்.

இப் பாடலுக்குப் பல பொருள்கள் கொள்ள இடமுண்டு; ஆயினும் அப் பொருள்கள் யாவற்றையும் ஆறு பிரிவுகளாக வகைப்படுத்தலாம். மேலே விளக்கப்பட்ட பொருள்கள் யாவும் ஒரே பிரிவைச் சேர்ந்தவையாகும். இரண்டாவது பிரிவில்

வரக்கூடிய பொருள்களில், "தத்துவம் தெரியாது அத்தனை உற்றாய்" என்ற சொற்களுக்குத் தத்துவங்களால் அறியப்படாதபடி நீ அத்தனை உயர்வுற்றாயே என்பது பொருளாகும். இப் பொருளை முந்தைய பாடலின் பொருளோடு, தொடர்பு படுத்துவோமானால், இப் பாடலுக்குப் பின் வருமாறு பொருள் விரிக்கலாம். "அருணாசலனே! தத்துவங்களால் அறியப் படாதபடி அவ்வளவு உயர்ந்த நிலையை யுடையவனாகிய நீ ஞிமிறு போல் நேரே இப்படிக் காத்து நிற்கும் தத்துவம் -உண்மை -என்ன? பின்வரும் பாடலுடன் பிறிதொரு வகையில் தொடர்புபடுத்த வேண்டுமானால் பின்வருமாறு ஒரு பொருள் கொள்ளலாம்; "அருணாசலனே நீ தத்துவங்களால் அறிய முடியாது அவ்வளவு உயர்வற உயர்ந்த மேனிலையை உடையவனாயுள்ளாய். இப்படிப்பட்ட உந்தன் தத்துவம் -மெய்யியல்பு -தான் என்ன? இக்கேள்விக்கான விடையை அடுத்த பாடலில் பின்வருமாறு காணலாம்: "தானே தானே தத்துவம்" அதாவது "நான் நானே" என்று உள்ளத்தில் எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கும் ஆன்ம சொருபமே தான் அருணாசலனின் உண்மை இயல்பாகும், அல்லது 'தத்துவம் இது என்' என்ற சொற்களை "உனது இத்தன்மை தான் எவ்வளவு ஆச்சரியமானது" என்று வியப்பினை வெளிப்படுத்தும் சொற்களாகக் கொள்ளலாம்.

சாங்கியர்களும், சைவ சித்தாந்திகளும் மற்றும் சில வர்க்கத்தினரும் பல தத்துவங்களை விவரித்தாலும், அத்தகைய ஆன்ம தத்துவங்கள் யாவற்றுள்ளும், ஞானம் அடைவதற்கு உதவுவதற்கான சாதனங்களாகப் பன்னிரண்டு தத்துவங்களை முக்கியமாகக் கொள்ளலாம். அவையாவன; சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய புறத்திலே உள்ள மூன்று தூலமான ஒளிகள்; ஐந்து ஞானேந்திரியங்கள்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கு நுட்பமான அந்தக்கரணங்கள் ஆகும். இவை யாவற்றாலும் அறியவோ அறிபடவோ முடியாத அதிசூக்ஷ்ம பாரமார்த்திக தத்துவமாக அருணாசலன் உள்ளத்தில் ஒளிர்கிறான். இப் பன்னிரண்டு தத்துவங்கள் யாவும் அருணாசலனெனும் அறிவொளியினால்தான் விளக்க முறுகின்றன; அந்த அறிவொளியினால்தான் மற்ற பொருள்களை அறியவும் அறிபடச் செய்யவும் அவற்றால் இயல்கிறது. ஆகையினால்தான் அருணாசலனே உண்மையான ஏக திருக்கு. மற்ற எல்லாப்

பொருள்களையும் பார்க்கின்ற, ஒளிர்விக்கின்ற திருக்குகள் என்று சொல்லப்படுகின்ற நான்கு அந்தக்கரணங்கள், அவற்றால் அறியப்படுகின்ற திருச்சியங்கள், திருச்சியங்களைப் பார்க்க உதவுகின்ற வெளியிலுள்ள ஒளி தரும் சூரிய, சந்திர அக்கினிகள் ஆகிய யாவற்றையும் பார்க்கின்ற உண்மையான ஏக திருக்கு என்று சொல்லப்படுகிறது. அருணாசலனுக்கு அன்னியமாகத் தனக்கென்று தனியிருப்பு தோற்றமாத்திரமாகக் கொள்ளப்படும் வரை அந்தக்கரணங்களால் அன்னியப் பொருளைத்தான் பார்க்க இயலுமே தவிர, தமது மூலமான அருணாசலனை அவற்றால் அறிய இயலாது. ஆனால் அவை அருணாசலனைக் காண முயன்று உள்ளே திரும்புமானால் அவை தமக்கென்றிருந்த தனியிருப்பை இழந்து அருணாசலனுடன் கலந்துவிடும். எனவே அருணாசலனை அறிவது அருணாசலனே, அவனை வேறு எதனாலும் அறிய இயலாது என்ற உண்மை தெளிவாகிறது. இதன் பொருட்டே ஸ்ரீ பகவான் 15வது பாடலில், "கண்ணுக்குக் கண்ணாய்க் கண்ணின்றிக் காணுனைக் காணுவது எவர்?" என்று பாடியதும் இப்பாடலில் "தத்துவம் தெரியாது அத்தனை உற்றாய்" என்று பாடுவது மாகும்.

அருணாசலத்தின் இந்தப் பாரமார்த்திகத் தத்துவத்தை மனதினால் ஒருவகையில் பரோக்ஷமாக யூகித்து உணர முடியுமே தவிர அதனால் அபரோக்ஷ அனுபவம் பெற முடியாது என்பதால், அவ் வுண்மையை "அது" என்றுதான் குறிப்பிட்டு நினைத்துப் பார்க்க முடியுமே தவிர "இது" என்பதாக அனுபவ உண்மையாகக் குறிப்பிட்டுக் காட்ட முடியாது. அப்படியானால், ஸ்ரீ பகவான் இங்கே "தத்துவம் அது என்?" என்று சொல்லாமல் "தத்துவம் இது என்?" என்று ஏன் சொல்கிறார்? இது என்னும் அண்மைச் சுட்டுப் பெயரை அவர் பயன்படுத்துவதால் அருணாசலத்தின் உயர்வற உயர்ந்த தத்துவம் -தன்மை - எப்போதும் அவரது சுய ஆத்மசொருபமாகவே அபின்னமாய் அவரது உள்ளத்தில் "நான் நான்" என்று விளங்கிவரும் அபரோக்ஷ அனுபவ உண்மையாகவே இருக்கிறது என்பது நிரூபணமாகிறதல்லவா?

இப் பாடலின் மூன்றாவது பொருள் மேலே விளக்கப்பட்ட இரண்டாவது வகைப் பொருளை ஒட்டியதாகும். "உனது தன்மை எவராலும் அறியமுடியாதபடி நீ அவ்வளவு உயர்ந்த நிலையில்

நிற்கின்றாய். உனது இத் தன்மை என்ன அற்புதம்!" என்பதாகும். "ஓங்காரப் பொருள்! ஒப்புயர்வில்லோய்! உனையார் அறிவார் அருணாசலா?" என்றபடியும் "பெயர் நினைத்திடவே பிடித்திழுத்தினை உன் பெருமை யார் அறிவார் அருணாசலா," என்றபடியும் அருணாசலன் இத்தகைய உயர்வற உயர்ந்த வஸ்துவாகையால் அவனது உண்மை சொரூபம் இத்தன்மையது என்று யாராலும் அறிய முடியாதவாறு உள்ளது. அவனது புனிதப் பெயரை நினைத்த மாத்திரத்திலேயே அவர்களை ஆட்கொண்டு அவர்களைத் தன்னடிக்கு ஈர்த்து, தன் சொருபத்தில் அவர்களை இருத்திவைக்கும் அவனது அருள் தத்துவம் எவ்வளவு அற்புதமானது!

மேற்கண்ட மூன்று வகைப் பொருள்களிலும் "உற்றாய்" என்ற சொல் அருணாசலனை நோக்கிக் கூறப் படுவதாயிருக்க, நான்காவதாக விரிக்கக் கூடிய பொருளில் அச் சொல்லை அருணாசலன் தன்னிடம், "நீ உற்றாய்" என்று உறுதி கூறி தேற்றுமாறு பிரார்த்திக்கும் வகையில் பகவான் கையாண்டிருப்பதாகக் கொள்ளலாம். அப் பொருளானது "அது நீ" என்ற மகா வாக்கியத்தைக் கேள்விப்படாமலேயே அப் பிரம்ம சொருபமான ஆன்மாவை நீ அடையப் பெற்றாய், உன்னால் அடையப்பட்ட இதுவே மகாவாக்கியங்களின் முடிவான உண்மை! என்று உறுதி கூறி என்னைத் தேற்றுவாயாக என்பதாம்.

பூரண ஆன்மானுபவ நிலையில் சந்தேகிக்கவோ உறுதி செய்துகொள்ளவோ மனம் என்பது இல்லாது போவதால், சாதனையின் இறுதிக் கட்டத்தில் பக்குவமுற்ற பக்தன் திருவருளால் ஆன்மஸ்புரண அனுபவத்தைத் தெளிவாகப் பலமுறை அடைந்தாலும் அவ் வான்ம நிலையில் உறுதியாகத் தன் சொந்த முயற்சியால் நிலைபெற்று நிற்பது சாத்தியமாகுமுன் சில சமயம் மனம் எழுந்து, தன்னுள்ளத்தில் மீண்டும் மீண்டும், அனுபவமாகும் "நான் இருக்கிறேன்" என்ற தன்னுணர்வின் ஸ்புரிப்பானது உண்மையில் தான் நாடும் பிரம்ம சொருபத்தின் சுபாவப் பிரகாசம்தானா என்று சந்தேகிக்கலாம். இத்தகைய சந்தேகம் அப் பக்தனின் தூய உள்ளத்தில் நிழலாடும் போது அவனது சற்குருவின் வாக்கின் மூலம். தான் பெறக் கூடிய உறுதிமொழியே தன்னிலையில் திடமாக ஊன்றச் செய்ய வல்லதாகையில் அவ் வுறுதிமொழி பெற வேண்டி அவன்

தன் சற்குருவை நாடுகிறான். ஒரு பக்தன் தனது முதிர்ந்த சாதனைக் காலகட்டத்தில் அடையக் கூடிய இம் மன நிலைக்கு ஓர் எடுத்துக் காட்டாக சுகர், ராமர் போன்றோர் குரு சம்மதம் பெற்றது பற்றிய கதைகள் ஞானவாசிஷ்டத்தில் விளக்கப்பட்டுள்ளன. ஆகையினால், இத்தகைய பக்குவமற்ற ஆன்ம சாதகர் என்ற நிலையை மேற்கொண்டு ஸ்ரீ பகவான் சிஷ்டாசார மரபுப்படி இப் பாடலின் மூலமாகத் தம் முள்ளத்திலுள்ள குருவுருவாய் ஒளிர்விடும் ஆன்மசொருபனை அருணாசலனை நோக்கி, "அதுவானால் அதுவாவர், அதுவே சொல்லும்" என்றபடி திருவாய் மலர்ந்து உறுதிசொல்லுமாறு வேண்டியுள்ளார் போலும்.

கடைசி இரு பொருள்களிலும் "உற்றாய்" என்ற சொல் "உற்று ஆய்" என்று பதம்பிரிக்கப்பட்டு பொருள் கொள்ளப்பட்டுள்ளது. ஐந்தாவது பொருளாவது, "அருணாசலனே! அது நீ என்ற உண்மையை உணராமல் அதனை (கடவுளை) எத்தன்மைத்தன் என்று அறிவுபூர்வமாய் ஆராய்ந்து கொண்டிருக்கும் மற்ற கோட்பாடுடையோர்களின் நிலை என்ன பரிதாபகரம்! என்று இரங்கியவாறு" என்பதோ, அல்லது, "அருணாசலனே! அது நீ என்று அம் மறைகள் ஆர்த்திடவும் தன்னை எதுவென்று தேடி அடைய முயலாமல், இறைவனை ஆய உறும் தத்துவம் என்ன பேதமை!" என்பதோவாகும். அதாவது "இருந்தொளிர் உனைவிடுத்து அடுத்திடல் தெய்வம், இருட்டினில் விளக்கு எடுத்து அடுத்திடல்" என்று ஸ்ரீ பகவான் ஸ்ரீ அருணாசல அஷ்டகம் நான்காவது பாடலில் கூறியபடி "நான் இருக்கிறேன்" என்று உள்ளத்தில் எப்பொழுதும் இருந்து விளங்கிக் கொண்டிருக்கும் ஆன்ம சொருபமாகிய தன்னை விட்டு விட்டு தனக்கு அயலாக ஒரு தெய்வத்தைத் தேடி யறிய முயல்வதானது, ஒரு விளக்கைத் தன் கையில் எடுத்துக் கொண்டு இருளைத் தேடிக் காண முயல்வதைப் போல பேதமை மிக்க வீண் முயற்சி யாகும்.

ஆறாவது பொருளானது, "அருணாசலனே! நான் வேறு யாதொரு தத்துவத்தையும் அறியாதவன், எனது தத்துவமானது (மார்க்கமானது), பரமான்மாவாகிய தன்னைக் கூர்ந்து தன் உள்ளத்தில் ஆராயும் (ஆன்மவிசாரமாகிய) இது ஒன்றே யாகும்" என்பதாம். அதாவது அருணாசலனருளால் ஸ்ரீ பகவானுற்ற தத்துவமார்க்கம் எது வென்றால், தன்னை மறைக்கும் தத்துவக் குப்பைகளை —>

ஆராய்ந்தறிய முனையாமல், அவ்வாறு முனையும் அத் தன்னை உற்று ஆராய்வதேயாகும். ஆனால் அருணாசலனின் அருளுதவியின்றி பக்தனின் சொந்த முயற்சியால் மட்டும் இது சாத்யமாகா தாகையால், அடுத்த பாடலில் ஸ்ரீ பகவான் தனக்கு இம் மார்க்கத்தைக் காட்டியருளிய அருணாசலனே தனது மெய் யியல்பையும் தனக்கு காட்டி தான் ஆரம்பித்து வைத்துள்ள அருட் செயலைப் பூர்த்தி செய்து வைக்குமாறு அருணாசலனிடம் வேண்டுகிறார்.

---

## 43. தானே தானே தத்துவ மிதனைத் தானே காட்டுவா யருணாசலா.

அ-ம்: அருணாசலா! தானே தானே தத்துவம். இதனைத் தானே காட்டுவாய்.

பொ-ரை: அருணாசலா! "தான்" என்று இதயத்துள் உணர்வாவதுதான் தத்துவப் பொருள். அந்தத் தானாகிய நீயே இதனை எனக்கு அனுபவப்படுத்தி அருள்க.

வி-ரை: "நான் நானே" (I am that I am) என்று உள்ளத்தில் எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கும் உபாதிகளற்ற பரிசுத்த இருப்புணர்வேதான் உண்மைப் பொருளாகும். 'நான் இது', 'நான் அது' 'நான் பிரம்மம்' என்றவாறு உபாதிகளுடன் உணரப்படும் கலப்புணர்வு உண்மையானதொரு பொருள் அல்ல. அதனால்தான் ஸ்ரீ பகவான் 'தானே தானே தத்துவம்' என்று அருளியுள்ளார். இங்கே 'தானே தானே' என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளாகும்.

'தான்' எனப்படும் ஆன்ம சொரூபமாகிய இவ் வுண்மையான தத்துவத்தைத் தவிர மற்றபடி தத்துவங்கள் என்று சொல்லப்படுகிற ஏனைய தத்துவங்களெல்லாம் உண்மைத் தத்துவங்களாகா; அவையெல்லாம் ஆன்மாவை (உண்மைத் தத்துவமான தன்னை) மறைக்கவே உதவும் சத்தற்ற போலித் தத்துவங்களாகும். ஆகையினால் நாம் ஆன்மாவை சாட்சாத்கரிக்க வேண்டுமானால் இப்போலித் தத்துவங்களையெல்லாம் கணக்கிடுவதையும் அவற்றின் குணங்களை ஆய்வதையும் விடுத்து அத்தகைய அனாத்ம தத்துவங்களை யெல்லாம் ஒருசேரப் புறக்கணிப்பது அவசியமாகும். இதனால்தான் ஸ்ரீபகவான், "அம்பட்டன் குப்பையைக் கூட்டித் தள்ள வேண்டிய ஒருவன் அதிலித்தனை மயிர்கள் உள்ளன வென்று கணக்கிடுவதாலும், அவற்றின் நீளம், நிறம் முதலிய குணங்களை ஆராய்வதாலும் எப்படிப் பயனில்லையோ, அப்படியே தன்னை அறிய வேண்டிய ஒருவன் தன்னை மறைத்துக்கொண்டிருக்கும் தத்துவங்களனைத்தையும் சேர்த்துத் தள்ளாமல் தத்துவங்கள் இத்தனை என்று கணக்கிடுவதாலும், அவற்றின் குணங்களையும் தொழில்களையும் விசாரிப்பதனாலும் பயனில்லை என்று கூறினார். 'நான் யார்?' என்ற நூலின் 1930ஆம்

ஆண்டுப் பதிப்பு, இருபதாம் கேள்விக்குரிய பதிலைக் காண்க.

இப் போலித் தத்துவங்கள் எவ்வாறு இருப்புள்ளவை போல் தோன்றுகின்றன என்பதை ஸ்ரீ பகவான் "உண்டொரு பொருள்" எனத் தொடங்கும் "ஸ்ரீ அருணாசல அஷ்டகத்தின்" 6வது பாடலில் விளக்குகின்றார். அதாவது, ஒரே ஒரு தத்துவப் பொருள்தான் உள்ளது; அது ஒன்றே சத்தியம். அவ் வொரே சத்தியப் பொருளாவது 'உள்ளம்' எனப்படும் அறிவொளி சொருபமான அருணாசலனே தான். அவனிடத்தில் அவனுக்கு வேறாகாத ஓர் அற்புதமான சக்தி யுள்ளது. அச் சக்தியினின்றும் நுட்பமான நிழல்போன்ற நினைவுகள் எழுகின்றன. சத்தியப் பொருளாயுள்ள அறிவொளியின் பிரதிபலனேயான அந் நினைவுகளே மனம் எனப்படுகிறது. அந் நினைவுகளோடே எழும் பிராரப்த விசையினால் நினைவுகள் நுண்ணிய உலகப் படங்களாக மனதிற்குள் விரிவடைந்து ஐம்புலன்களின் வழியே புறத்தில் ஸ்தூல உலகத் தோற்றங்களாக வெளிப்பட்டு உருக்கொள்கின்றன. இவ்வாறு உலகத் தோற்றங்களாகப் பரிணமங்கொண்டுள்ள எல்லாவகைத் தத்துவங்களும் உள்ளத்திலிருந்து எழுகின்ற நிழலையொத்த நினைவுகளின் விரிவே யன்றி வேறன்று என்று தெளிவாகிறது. சினிமாத் திரையானது அதன்மீது தோன்றுகின்ற படங்களால் எவ்வாறு பாதிக்கப்படாது உள்ளதோ அது போன்று உண்மைத் தத்துவமான அருணாசலன் போலித் தத்துவங்களாகிய எல்லாவிதப் பொய்த் தோற்றங்களும் தன்னில் எழுந்தாலும் அவற்றால் சிறிதும் பாதிப்பின்றி விளங்குகின்றான். இதனால் தான் ஸ்ரீ பகவான் அப் பாடலை, "நின்றிட சென்றிட நினைவிட இன்றே" என்று முடிக்கின்றார். எனவே தத்துவமாவது அருணாசலன் எனப்படும் தானே தான்; பிறவாகிய உலகம், கடவுளர்கள் அல்ல. ஆகையால் ஆராய்ந்தரியத்தக்கது, 'தான்' தானே யொழிய வேறு அன்னியங்கள் எதுவுமன்று. இதையே ஸ்ரீ பகவான், "தன்னை அறிதல் இன்றி பின்னை எது அறிகில் என்? தன்னை அறிந்திடில் பின் என்னை உளது அறிய?" என்று ஆன்மவித்தைக் கீர்த்தனத்தில் கூறியுள்ளார்.

இப் பாடலுக்கு வேறுவகையில் சற்று வித்தியாசமுடைய இரண்டு பொருள்கள் தரலாம். அதாவது, "அருணாசலனே! நான் நானே என்பதே உண்மைப் பொருள், இதனை நீ தானாகவே

காட்டியருள்வாயாக" என்பது ஒரு பொருள்; அல்லது தானே தானே தத்துவம் என்ற சொற்களைத் "தானே தத்; தானே துவம்" என்று பிரித்து அன்வயப்படுத்தினால், "அருணாசலனே! மகாவாக்கியத்தால் 'தத்' என்று குறிப்பிடப்பட்டது 'நானே' யாகும். அவ்வாறே 'த்வம்' என்று குறிப்பிடப்பட்டதும் 'நானே' யாகும். இவ்வுண்மையை நீ தானாகவே அருள்கூர்ந்து காட்டுவாயாக" என்பது மற்றொரு பொருள். "தத் துவம் அசி" என்று வேதங்கள் அறையும் போது அவற்றின் குறிக்கோள் தனக்கு அன்னியமாக எந்தக் கடவுளையோ மெய்ப் பொருளையோ அறிய முயல்வதைத் தடுத்து தன்னையே நோக்கி நம் கவனத்தைத் திருப்பி 'நான்' என்னும் தன்மை யுணர்வையே நாடவைப்பதேயாகும். இத் தன்மை உணர்வைத் தவிர்த்து அறிய வேண்டியது வேறு ஒன்றுமில்லை.

ஆனால் ஆன்ம சொருபமாகிய அருணாசலன் தானாகவே நம் மனதை உள்ளே இழுத்துக் கொண்டுபோய் நம் உள்ளத்தில் ஒளிரும் அவனது உண்மை சொருபத்தை வெளிப்படுத்திக் காட்டினாலன்றி எந்த ஜீவனாலும் சொந்த முயற்சியினால் அவனது உண்மை சொருபத்தை அபரோக்ஷமாக சாட்சாத்கரிக்க முடியாது. இதனால்தான் ஸ்ரீ பகவான், "இதனைத் தானே காட்டுவாய் அருணாசலா" என்று பிராத்திக்கின்றார். இங்கே தானே காட்டுவாய் என்பதற்கு, "நீ தானே காட்டியருள்வாயாக" அல்லது "நீ தானாகவே காட்டியருள்வாயாக" என்பது பொருள். அருணாசலனின் அருளொளியைத் தவிர பிற ஒளிகளெல்லாம் அவனைக் காட்டித்தர முடியாது; மேலும், "கண்ணுக்குக் கண்ணாய்க் கண்ணின்றிக் காண் உனைக் காணுவது எவர்?" என்றபடி ஜீவனாலும் தானாகவே காண முடியாதது. பின் இருப்பு மாத்திர வடிவான அருணாசலன் தன் உண்மை சொருபத்தை ஜீவனுக்கு எவ்வாறு வெளிப்படுத்திக் காட்டுகிறான்? இருத்தல், ஒளிர்தல் இரண்டும் ஒன்றேயாதலால், அவனது இருத்தலே அவனது இருப்பை விளக்கும் ஒளிர்தலுமாகும். ஜீவர்களின் உள்ளத்தில் தனது இருப்பை ஸ்புரித்துக் காட்டுவதன் மூலம், கதிரவன் எவ்வாறு தனது சுய ஒளியின் பிரதிபலனேயான சந்திரனின் ஒளியை வாங்கி விழுங்கிவிடுகிறானோ அதே போன்று அருணாசலன் தனது பிரதிபலன ஒளியேயான ஜீவனின் மனதை முழுதும் உண்டு அவனைத் தன்னில்

தன்மயமாய்க் கரைத்துவிடுகின்றான். இவ்வாறு அருணாசலனின் சுய விளக்கமாகிய அருளொளி ஸ்புரிப்பதே 'தானே காட்டுதல்' ஆகும்.

## 44. திரும்பி யகந்தனைத் தினமகக் கண்காண் டெரியுமென் றனையென் னருணாசலா.

அ-ம்: என் அருணாசலா! 'திரும்பி தினம் அகம் தனை அகக்கண் காண்; தெரியும்' என்றனை.

பொ-ரை: என் ஆன்மப் பொருளாகிய அருணாசலா! "வைராக்கியத்தால் வெளிவிஷயங்களினின்று அகமுகமாய்த் திரும்பி தினமும் (இடைவிடாமல்) தன்னை உண்ணோக்கால் கவனி; அப்போது (தானே தானே மெய்ப்பொருள் என்ற உண்மை) நன்றாக விளங்கும்" என்று எனக்கு உணர்த்தினாய்.

வி-ரை: சத்தியவஸ்துவான அருணாசலனாகிய ஆன்மப் பொருள் தன் பிரதிபிம்பமான ஜீவனின் மன அறிவுக்குத் தன்னைத் தானே தன் அருள்மிகுதியால் ஸ்புரித்துக் காட்டினாலன்றி ஜீவனால் அவனைக் காணமுடியாது என்ற உண்மையைச் சென்ற பாடலில் விளக்கிய பிறகு அருணாசலன் அவ் அருட்செயலை எவ்வாறு நிகழ்த்துகிறான் என்பது இப் பாடலில் முறைப்படுத்தப் படுகிறது.

அருணாசலனின் அருளினாலன்றி ஆன்ம ஞானம் கிட்டாது என்பது உண்மையேயாயினும், கர்த்துருத்வ ரூபமான ஜீவபோதம் உள்ளவரை அவனது சுய முயற்சி அவசியமாகும். ஏனெனில் ஆன்மாபால் அவனது சுய முயற்சியைச் செலுத்தாவிடில் சுகம் நாடும் அவனது கர்ம முயற்சி பிறவற்றின்பால் வலியச் செல்லும். 'நான் யார்?' என்பதை விசாரித்தறிய பக்தன் மேற்கொள்ளும் சீரிய முயற்சி, அருளினாலேயே ஆன்மஞானம் அடைய முடியும் என்ற அவனது நம்பிக்கைக்கு எவ்விதத்தும் முரண்பட்டதாகாது; ஏனெனில் ஆன்மாவை அறிய விருப்பமும் அதற்கான முயற்சியும் அருளை முன்னிட்டே ஏற்பட்டு நீடித்து தீவிரமடைகிறது. மேலும் அருளின் ஒளியை முழுதுமாகப் பெற்று அனுபவித்துப் பயன்பெற விடாது தடுக்கக் கூடியது மனதின் எழுச்சி ஒன்றேயாதலால், மனம் நிச்சலனமாய்த் தன் உதித்த இடத்தில் ஒடுங்கி யிருத்தலே அருணாசலனின்

அருளுக்கு ஆட்பட்டு சரணடைவதாகும். மனம் இவ்வாறு உதித்த இடத்தில் ஒடுங்குவது மனதின் கவன சக்தி வெளிப் பொருள்களை நாடி வெளியே திரும்பாமல் 'நான்' என்னும் தன்மையுணர்வையே நாடி உண்முகமாகும் போதுதான் சாத்யமாகுமாதலால், அருளே வடிவான அருணாசலன் ஆன்ம அனுபவத்தை அருளிடுவதற்கேற்ப மனம் இவ்வாறு அகமுகப்படுவது இன்றியமையாததாகிறது.

பட்டப் பகலில் வெட்ட வெளியில் கீழ் நோக்கியப் பார்வையுடன் நின்றுகொண்டிருக்கும் ஒருவன் வானத்தின் உச்சியில் சூரியன் பிரகாசித்துக் கொண்டிருந்தாலும், அதனைக் காணவேண்டுமாயின் கீழ் நோக்கிய தன் பார்வையை மீட்டு மேல் நோக்கித் திருப்பி சூரியனுக்கு அபிமுகமாகவேண்டும். அதே போன்று புறமுகப் பற்றின் மிகுதியால் தான் அல்லாத அன்னியப் பொருள்கள் மீது சதா நாட்டங் கொண்டு வாழும் ஜீவனுக்கு அவன் உள்ளத்தின் உள்ளமாய் ஆன்மப் பொருளாய் அருணாசலன் விளங்கிக் கொண்டிருந்தாலும், அதனை அவனால் காண இயலாது. எப்போது அவன் புறமுகப் பற்றை விடுத்து ஆன்மாபால் பற்று மிகுந்து அன்னியநாட்டத்தினின்றும் விடுபட்டு உண்முகமாய்த் திரும்பி ஆன்ம ஒளி ஊடுருவி வரும் தன் மனத்தின் மூலத்தைக் கவனிக்க அகமுகமாகின்றானோ, அப்போது தான் அருணாசலன் தன் இருப்பை, சொரூபத்தைத் தானே அவனது அகமாயிருப்பதால் அவனுக்கு அகத்தில் அகமாய் ஸ்புரித்துக் காட்டுகின்றான். அதனால்தான் ஸ்ரீ பகவான் இப் பாடலில், "திரும்பி அகம்தனைக் காண் தெரியும்"என்றிசைக்கின்றார்.

புறமுகத்தில் கவனத்தைச் செலுத்துவது, உண்முகமாகத் திருப்புவது என்றெல்லாம் நாம் சொல்வதின் பொருள் என்ன?. பகிர்முகம் என்று சொல்லப்படும் புறமுகத்தில் கவனத்தைச் செலுத்துதல் என்பது தனக்கு அன்னியமான விஷயங்கள் மீது நாட்டம் செலுத்துவதாம்; அந்தர்முகம் என்று சொல்லப்படும் உண்முகமாகத் திரும்புவது என்பது 'நான்' என்னும் தன்மையுணர்வை மட்டிலும் கவனிப்பதாம். காலங்காலமாக இருந்துவரும் வழக்கப்படி இத்தகைய வழக்குச் சொற்களைப் பயன்படுத்தினாலும், உண்மையில் பகிர்முகம், அந்தர்முகம் என்பது கூட சரியான வார்த்தைகளன்று. இத்தகைய வழக்கமான வார்த்தைகளுக்குப் பதிலாக பிற நாட்டம் - தன்னாட்டம்;

அன்னியநாட்டம் - அகநாட்டம் என்ற சொற்களைப் பயன்படுத்துவது மிகவும் பொருத்தமானதாகவும் பொருளைத் தெளிவாகவும், மிகச் சரியாகவும் தெரிவிப்பதாகும். அதனால் தான் ஸ்ரீ பகவான் அந்தர்முகம் என்று சொல்வதைவிட அகமுகம் என்ற சொல்லையே அடிக்கடி கையாண்டார். இத்தகு அகமுகம் அல்லது தன்னுட்டத்தையே ஸ்ரீ பகவான் இப் பாடலில் "அகந்தனை அகம் காண்" என்று தெளிவாகக் குறிப்பிடுகின்றார். அதாவது அகம் (நான்) என்று விளங்கும் தன்னை அகக் கண்ணால் காண்பதுவே தன்னுட்டம் என்பதாகும்.

"திரும்பி அகம் தனை தினம் அகம் கண் காண்" என்ற சொற்கள் மூலம் ஸ்ரீ பகவான் உணர்த்துவது ஆன்ம விசாரத்தின் அடிப்படை உண்மையாகும். நமது உண்மை நிலை ஆன்ம சொருபமே யாயினும் அந்நிலையை நம்மால் உணரமுடியாததற்கு இரு தடைகள் காரணமாகும். அதாவது ஆவரணசக்தி என்ற மறைப்பும், விக்ஷேப சக்தி என்ற அலைவுகளுமாகிய தடைகளாகும். மாயையின் இவ்விரு சக்திகளும் நம்மிடம் எவ்வாறு இருப்பு கொண்டு செயல்படுகின்றன என்று கவனித்தால், ஆவரண சக்தி 'நான்' என்ற தன்மை எழுச்சி வடிவாகவும், விக்ஷேப சக்தி 'எனது' என்ற ஆசை அலைவுகளாகிய முன்னிலைப் படர்க்கைகளின் பால் நாட்டமாகவும் செயல்படுகின்றன என்பது தெரிய வரும்.

இவ்விரு தடைகளும், மறைப்புகளும் நீக்கப்பட்டால் தான் ஆன்மதரிசனம் சாத்தியமாகும். முன்னிலை படர்க்கைப் பொருள்களின் பாலுற்ற பற்றுவடிவாகிய எண்ணங்களைத் துறப்பதே 'திரும்பி' என்ற சொல்லால் உணர்த்தப்படுகிறது. 'எனது' என்ற இப்பற்று 'நான்' எனும் அகப்பற்றை ஆதாரமாகக் கொண்டே எழுவதால், இந்த 'நான்' என்னும் தன்மை எழுச்சியையே நம் விசாரணைக்குரிய பொருளாக 'அகந்தனை' என்ற பொருளால் குறிப்பிடப்படுகின்றது. எவ்வளவுக்கெவ்வளவு நம்மால் அன்னிய நாட்ட வடிவாகிய எண்ணங்களைத் துறக்க முடிகிறதோ அவ்வளவுக்கவ்வளவு நம்மால் அகமுகமாக முடியும். எண்ணங்களை விடுத்து அகமுகமாகத் திரும்புவதால் விக்ஷேபம் தற்காலிகமாக நீங்குகிறது. அகமுகத்தில் நிற்பதால் அதாவது தன்மை யுணர்வில் கவனம் ஊன்றப்படுவதால் 'நான்' என்னும் முதல் எழுச்சிக்குக் காரணமாகிய ஆவரணம்

நீங்குகிறது. ஆனால் இவ் வாவரணம் எவ்வாறு குளத்தின் மேற்பரப்பில் படிந்துள்ள பாசி கையால் அலம்பும் போது மட்டிலும் நீங்கி அலம்புவதை நிறுத்தியதும் மீண்டும் கூடுகிறதோ அதைப் போன்று அகமுக நாட்டத்தில் ஊன்றி நிற்கும்போது மட்டிலும் ஆவரணம் நீங்கி, தற்கவனத்தினின்று நழுவியதும் மீண்டும் மூடி ஆன்மாவை மறைக்கிறது. அதனால்தான் மீண்டும் மூடும் ஆவரண சக்தியின் அடிப்படையில் தற்காலிகமாக ஓய்ந்த எண்ணங்களும் மீண்டும் உயிர்த்து எழுகின்றன. எனவேதான் ஸ்ரீ பகவான், "திரும்பி அகந்தனை தினம் " காணவேண்டும் என்கிறார். தினம் என்றால் தினசரி என்பது மட்டுமின்றி சதாகாலமும் என்பது கருத்தாகும். "சதா காலமும் மனத்தை ஆத்மாவில் வைத்திருப்பதற்குத் தான் 'ஆத்ம விசாரம்' என்று பெயர்" என்று 'நான் யார்' நூலில் ஸ்ரீ பகவான் கூறுகிறார். இவ்வாறு சதாகாலமும் திரும்பி அகந்தனைக் காண்பதால் ஆவரணம் நலிவுற்று நாளடைவில் முற்றும் நாசமாகும்; ஆவரணம் நீங்கவே விக்ஷேபமும் இருப்பின்றி மறையும், இவ்வாறு ஆவரணமும் விக்ஷேப ரூபமாகிய 'நான்' 'எனது' என்ற மறைப்புகள் நீங்கவே ஆன்மா சுயம்பிரகாசமாய் விளங்கிக் கொண்டிருப்பது அனுபவமாகும். ஆவரணமே ஆன்மாவை மறைத்து அதை நமக்கு அன்னியப் பொருளாகக் கருதவைக்கிறது. இவ் வாவரணம் நசிப்பதால் மறைப்பு நீங்கி ஆன்மா 'நான் நானே' என்று தன்மயமாய்ப் பிரகாசிக்கின்றது. இவ் வனுபவம் தான் "நீ நான் அறப்புலி நிதங்களி மயமாய் நின்றிடும் நிலையாகும்".

இவ் வான்ம தரிசனத்தைக் காணும் கண் யாது? "திரும்பி அகந்தனைக் காண வேண்டும்; தினம் காண வேண்டும்; அகக் கண்ணால் காணவேண்டும்" என்கிறார் ஸ்ரீ பகவான். அகக் கண்ணால் காண்பதாவது யாது?

"கண்ணுக்குக் கண்ணாய்க் கண்ணின்றி காணுனைக் காணுவது எவர் பார், அருணாசலா" என்ற பாடலில் விளக்கியபடி கண்ணுக்குக் கண் மனம்; அம் மனத்திற்குக் கண் 'அகம்' ஆகிய 'நான்' என்னும் சுத்தமான தன்னறிவாகும். நம் உள்ளத்தில் 'நான் இருக்கிறேன்' என்ற வடிவில் பிரகாசிக்கும் தன்னுணர்வாகிய அகக் கண்ணினால்தான் அருணாசலனின் உண்மை சொருபத்தைக் காண இயலும். எந்தக் கண்ணினால்

அவன் நம்மைப் பார்க்கிறானோ அதே கண் கொண்டுதான் நம்மால் அவனைப் பார்க்க இயலும். இக் கண்ணும் அவனேதான். 'உள்ளது' உணர உணர்வு வேறின்மையால்" என்று ஸ்ரீ பகவான் சொல்லியபடி 'உள்ளது' வேறு 'உணர்வு' வேறின்மையால் அருணாசலனைக் காணக் கூடிய கண் -அறிவு -அவனுக்கு அன்னியமாக இருக்கமுடியாது. ஆகவே, கண்டுகொள்வதற்குரிய 'அகந்தை' என்பதும் அதனைக் காண வேண்டிய 'அகக்கண்' என்பதும் ஒன்றே; இரண்டுமே 'தான்' என்னும் இருப்புணர்வேதான்.

கண்ணுக்கு இடம் என்னும் ஒரு பொருளுண்டு. இங்கே இடம் என்பது சொரூபம் ஆகும். அதாவது 'நீயே நான்' 'நானே நீ' என்ற ஐக்கிய உணர்வும் ஆன்ம ஸ்புரிப்புமாகிய தன்மய சொரூப அனுபவமாகும். இவ் வனுபவம் ஏற்பட ஹேதுவாக இருப்பது அகக்கண்ணாகும். இக் கண்ணால்தான், விசாரசீலன் அருணாசலனின் சொரூபத்தை அனன்னியமாகக் காணவும் அருணாசலன் தன் சொரூபத்தை அவன் அகத்தில் ஸ்புரித்துக் காட்டுவதன் மூலம் அவனைத் தன்மய மாக்கவும் இயல்கிறது. ஆன்மா அன்னிய உணர்வு கிஞ்சித்துமின்றி தானே தானாய் ஒளிர்வதால், விசாரசீலனும் அவ்வாறே அன்னிய உணர்வு கிஞ்சித்துமின்றி தன்னில் தானாக இருந்து அருணாசலனின் உண்மை சொரூபத்தை அனன்னியமாகக் காண விழைந்தால் தான் அவனுக்கு அருணாசலனின் உண்மை சொரூபம் தெரியும். இவ் வனன்னியத் தன்னுணர்வைத்தான், "அவன், அகம் ஆகும் அனன்னிய பாவம்" என்ற சொற்றொடர் மூலம் உபதேச உந்தியார் 8வது பாடலில் ஸ்ரீ பகவான் குறிப்பிடுகின்றார். இவ் வனன்னியத் தன்னுணர்வு நிலையைத்தான் 'உள்ளது நாற்பது' 27 வது பாடலில் "நான் உதியாது உள்ள நிலை நாம் அதுவாய் உள்ள நிலை" என்று ஸ்ரீ பகவான் குறிப்பிடுகின்றார். அதாவது தற்கவனம் என்பது ஓர் 'நான்' மற்றொரு 'நான்' ஐக் கவனிக்கும் விவகாரமன்று; 'நான் அது' என்றோ 'நான் இது' என்றோ எழாது 'நான்' என்ற வெற்றுணர்வாய் மாத்திரம் இருக்கும் உபாயமாகும் அது. இதையே ஸ்ரீ பகவான், "உள்ளது அலது உள்ளவுணர்வு உள்ளதோ? உள்ள பொருள் உள்ளலற உள்ளத்தே உள்ளதால், உள்ளம் எனும் உள்ள பொருள் உள்ளல் எவன்? உள்ளத்தே உள்ளபடி உள்ளதே உள்ளல் உணர்" என்று 'உள்ளது நாற்பது' முதல் மங்கல வெண்பாவில் விளக்கியுள்ளார்.

'நான் இது' என்றோ 'நான் அது' என்றோ நம் மனம் எழுச்சியுறும் போதுதான் அன்னியத்துவம் தோன்ற இடமுண்டு. 'நான்' என்ற தன்மையுணர்வாய் இருப்பு மாத்திரமாய் நாம் இருக்கும் போது அன்னியம் என்று எதுவும் உணர்வாவதில்லை. அன்னியமற்ற தன்மையுணர்வாய் விளங்கும் இந் நிலையில் தான், 'நான்' என்று யாதொரு ஜீவ வியக்தித்துவமும் எழாததால், 'நான் நானே' என்ற உண்மையை அனுபவிப்பவன் அருணாசலனே ஒழிய, வேறொரு தனி ஜீவனுமல்லன். இதையே ஸ்ரீ பகவான் "தான் ஒன்றால், தன்னைத் தான் காணல் எவன்? ஊணாதல் காண்" என்று உள்ளது நாற்பது 21 வது பாடலில் கூறியுள்ளார். எனவே அன்னியத்தை அறியும் 'நான்' என்னும் அகந்தை யுணர்வாய் உதியாது, அன்னியமற்று ஒடுங்கி இருப்புணர்வு மாத்திரமாய் விளங்கும் தன்னிலையில் நிற்பதே, 'அகந்தனை அகக்கண் காணல்' என்பதாம்.

"தெரியும் என்றனை" என்ற சொற்றொடர் மூலம் "என் நிஜ சொரூபம் அப்போது 'இருக்கின்றேன்' என விளங்கும் உனது தன்மையுணர்வாய் உனக்குத் தெரியவரும் என்று அருணாசலனே நீ எனக்குச் சொன்னாய்" என்று ஸ்ரீ பகவான் தெரிவிக்கின்றார். மேலும் அருணாசலன் தனக்கு அவ்வாறு தெரிவித்தது எவ்வாறெனின் "என் உள்ளத்தில் அவ்வாறு இருந்தபடி இருந்து காட்டி மௌனமாய் உணர்த்தியதாக" இங்கு குறிப்பாக வெளியிடுகின்றார்.

'என் அருணாசலா' என்ற சொற்றொடர் மூலம் 'அண்ணாமலை என் ஆன்மா' என்று ஆன்ம வித்தைக் கீர்த்தனத்தில் பாடியபடி ஸ்ரீ பகவான் அருணாசலனை "என் ஆன்ம சொருபமாகிய அருணாசலா" என்று அழைக்கிறார்.

'என்' என்ற சொல்லைப் பிறிதொரு வகையில் அதாவது 'என்ன?' என்ற பொருள் வருமாறு எடுத்துக்கொள்ளலாம். அவ்வாறு எடுத்துக் கொண்டால் "தன்னை அறிந்து தானாகவே இருக்கும் இம்முறையானது எவ்வளவு சுலபமான சுகமான வழி!" என்று வியப்பை வெளியிடுவதாக இச்சொல் அமைகிறது. மேலும் " 'அகக் கண் காண் தெரியும்' என்று நீ சொன்னாயே, அவ்விதம் இடைவிடாது வெளிவிடயங்களை விட்டு மனம் அகத்தின்கண் திரும்பி தன்னைக் காணவும் அப்போது என் உள்ளம் (நான் நீயே என்ற உண்மை) தெரிகின்றதே! என்ன

ஆச்சரியம்" என்ற ஆனந்த மேலீட்டை வெளிப்படுத்துவதாகவும் இச் சொல் அமைகிறது.

ரமணத் தத்துவம் முழுவதும் இப் பாடலில் அடக்கம். அனைத்து ஜீவர்களும் எல்லாக் காலங்களிலும் அனுபவித்து வரும் துயரம் முழுதுக்கும் காரணம் ஆன்மாவை நாடி அதனை யறியத் தவறுவதேயாதலால் நாம் பூரணமானதும், எல்லையற்றதும், அகண்டமானதும், சுவச்சமானதுமான ஆனந்தமய நிலையை அடையும் வரை 'நான்' என்னும் உணர்வை சதா நாடிய வண்ணம் இருக்க முயல்வது இன்றியமையாததாகும். இதனால்தான் ஸ்ரீ பகவான், "தினம் அகக் கண் காண்" என்கிறார். 'தினம்' என்னும் சொல் 'எப்போதும்' 'இடைவிடாமல்' என்று இங்கே பொருள்படும்.

அப்பியாசத்தின் ஆரம்ப காலத்தில் சாதகனால் இடைவிடாது முயன்று தன்னை நாட முடியாதாயினும், அவன் அடிக்கடி இடைவிட்டாவது தன்னை நாடும் முயற்சியில் தீவிரமாக இறங்க வேண்டும். ஓர் உண்மையான பக்தன் அடிக்கடி சிற்சில நிமிடங்களாவது தன்னுணர்வைக் கவனிப்பதில் ஈடுபடாமல் ஒருநாளைக் கூட விணுக்கலாகாது. நாள் முழுதும் எவ்வளவு வேலையாயிருந்தாலும் அவ்வேலைக்கு மத்தியிலும் அதாவது நடப்பது, பயணம் செய்வது, நீராடுவது, உணவருந்துவது ஆகிய உடல்ரீதியான வேலைகளிலூடும் தன்னுட்டம் பழகுவது சாத்தியமே. இதுவே 'நாம் வந்த வேலை' யாகும். இதையே ஸ்ரீ பகவான் "இப்படி மனோநிக்கிரகம் செய்வதுவே தவமாம். இதுவே தன் காரியம்... தன்வேலை... அதை விடாமலிருக்க முயற்சி செய்ய வேண்டும்" என்று அருளினார்.

எத்தனை முறை நமது தற்கவனம் நழுவி கவனம் அன்னியப் பொருள்கள் மீது சென்றாலும், நாம் மனந் தளரலாகாது. ஒவ்வொரு முறை தற்கவனம் நழுவும்போதும் மீண்டும் மீண்டும் கவனத்தைத் தன் மீது திருப்பித் திருப்பிப் பழக வேண்டும். ஒவ்வொரு முறையும் நம் கவனம் ஒருசில நொடிகளே ஆன்மாபால் திரும்பினாலும், ஓரளவு திரும்பினாலும் அது போதும்; இவ்வாறு ஒவ்வொரு நாளும் பலமுறை தற்கவனம் பழகுவதால் மனத்திற்கு ஆன்மாபால் திரும்புவதற்கான பலம் அதிகரிக்கும். இதை ஸ்ரீ ரமண பகவான் "இப்படிப் பழகப் பழக மனத்திற்குத் தன் பிறப்பிடத்தில் தங்கி நிற்கும் சக்தி

அதிகரிக்கின்றது", என்று 'நான் யார்' என்ற நூலில் கூறினார். கூடாரத்திற்குள் *ஒட்டகத்தின் மூக்கை நுழைப்பதற்கு முதலில் அனுமதிப்பதே இதில் முக்கியம். அதாவது, தன் கவன சக்தி தன் மீது திரும்பும் பயிற்சிக்குத் தினமும் சிறிது இடங் கொடுக்க வேண்டும். அப்படி ஆரம்பத்தில் சிறிது இடங் கொடுப்பதால், போகப் போக தற்கவனம் நம் நேரத்தின் பெரும்பகுதியை ஆக்கிரமித்து முடிவில் நம் வாழ்க்கை முழுவதையுமே கொள்ளை கொள்ளும். அதாவது, அகமுகப்பட நாம் மேற்கொள்ளும் விடாப்பிடியான முயற்சிகளினால் ஆன்மாபால் அதிக அளவு திரும்பும் திறன் ஒவ்வொரு முறையும் அதிகரிக்கும். வேறு விதமாகச் சொன்னால், ஆன்ம கவனத்தின் தீட்சண்யமும் தெளிவும் மேன்மேலும் சீராக ஓங்கும். முடிவில் இத்தகைய பயிற்சியின் போது ஒரே ஒரு முறை ஆன்மாவை நோக்கி மனம் 180° திரும்புவதில் வெற்றிகண்டால் - ஆன்ம உணர்வின் பூரணப் பொலிவு கிடைக்கப்பெறுமானால்- 'தானே தானே தத்துவம்' என்ற உண்மை தெரியும்.

அகமுகப்பட்டு சத்தியப் பொருளை அடைவதற்கான வைராக்கிய பலத்தை நாம் உண்மையில் பெற விரும்பினால், அதற்காக நாம் செய்யக்கூடிய பிராத்தனையாவது, 'நான் யார்?' என்னும் தன்னுட்டமாகிய உபாசனையே யாகும்.

"மெய்ப்பொருளே உள்ளத்து விண்டாலல் லா(து)உலகச்
சொப்பனமா(ம்) மாயை தொலையாது - 'சொப்பனநோக்
குள்ளதான் ஆர்?'என்(று) உசாவும் உபாசனையே
விள்ளுமாறு ஆற்றும் விதம்"

- குருவாசகக் கோவை 729

தன்னை நோக்கித் திரும்புவதே உண்மையான ஞானயோகம் மட்டுமன்றி, அதுவே உண்மையான பக்தியோகமாகவும், ராஜயோகமாகவும், கர்மயோகமாகவும் விளங்குகிறது. தன்மீதுள்ள இயல்பான பிரியத்தால் சுகநாட்டமுற்று தன்னை ஆசிரியத்து நிற்பதே உயர்வர உயர்ந்த பக்தி - ஸ்வாத்ம பக்தியாகும். குண்டலினி சக்தி என்று அழைக்கப்படுகின்ற 'நான்' என்னும்

*'கூடாரத்தில் ஒட்டகம்' என்ற உதாரணம் 'சாதனைசாரம்' என்ற நூலில் 216-217 பக்கங்களில் கொடுக்கப்பட்டிருப்பதைக் காண்க.

தன்னுணர்வு, முன்னிலைப் படக்கைப் பொருள்கள் மீது நம் கவனம் செலுத்தப்படும் போது உடல்முழுதுமுள்ள நாடிகள் மூலம் பரவவும், நாட்டம் தன்மையை நோக்கித் திரும்பும்போது, நாடிகள் வழி பாயும் 'நான்' என்னும் உணர்வாகிய நாடி ஓட்டம் மடைமாற்றம் பெற்றுத் திரும்பிப் பிரிந்த இடமாகிய ஸகஸ்ராரத்தை யடைந்து, அங்கிருந்து உதித்த இடமாகிய இதயத்தில் இறங்கி ஒடுங்குவதால் இதுவே உண்மையான ராஜயோக அப்பியாசமாகக் கருதத்தக்கதாம். ஏனைய எல்லா கருமங்களும் துக்கத்திற்கே ஏதுவன்றி சுகத்துக்கு வழியல்லவாதலாலும், தன்னுட்டமே சுகத்திற்கான தன்முயற்சி யாதலால் இதுவே செய்யத் தகுந்த நற் கருமமாகும்; மேலும் மெய்ப்பொருளை அடைவிக்கும் இக் கர்ம முயற்சியே உண்மையான கர்மயோகமாகும். அதனால் தான் ஸ்ரீ பகவான், 'உள்ளது நாற்பது -அனுபந்தம்' 14வது பாடலில் "வினையும், விபத்தி, வியோகம், அஞ்ஞானம் இவை யார்க்கு என்று ஆய்ந்திடலே வினை, பத்தி, யோகம், உணர்வு; ஆய்ந்திட 'நான்' இன்றி அவை என்றும் இல்; தானாக மனலே உண்மை ஆம்" என்றும், உபதேச உந்தியார் 10வது பாடலில், "உதித்த இடத்தில் ஒடுங்கி இருத்தல் அது கன்மம் பக்தியும் உந்தீபற, அது யோகம் ஞானமும் உந்தீபற" என்றும் கூறியுள்ளார்.

'சுகமாகிய தத்துவம் தானே', 'சித்தாகிய உண்மை யறிவும் தானே', 'சத்தாகிய நித்திய வஸ்துவும் தானே' என்ற விவேகம் இல்லாததால்தான் ஜீவர்கள் அன்னியப் பொருள்கள் மீது பற்று வைத்து அன்னியநாட்டம் மிகுந்துள்ளனர். இவ் வன்னியப் பற்று அற்று அனன்னியமான தானாகிய ஆன்ம மீது பற்று தீவிரமடைந்தால்தான் அகந்தைக் காண தன்னை நோக்கித் திரும்பவும், தினமும் - சதாகாலமும் - திரும்ப இயலும். அகநாட்டத்திற்கு இன்றியமையாததான அன்னியத்தை நாடாத வைராக்கியமும் தன்னை நாடும் பக்தியும், சாதுக்களின் சங்கத்தால் -சகவாசத்தால் -உறவால் -சாந்நித்தியத்தால் எளிதாகப் பெறலாம். நெருப்பைச் சுற்றி உஷ்ணம் பரவுவது போல் சாதுக்களின் சாமீப்யம் விஷய தோஷங்களை விலக்கி எரிக்கக்கூடிய வைராக்கிய உஷ்ணத்தையும், ஆன்ம இயல்பு சுகத்தை நடைமுறையில் காட்டும் வண்ணம் அருட் காந்த அலையையும் பரப்பிக் கொண்டேயிருக்கும். எல்லா சத்துக்களுள்ளும் சிறந்தது

அருணாசலமே. அதைச் சமீபித்து ஆசிரயித்து வருவதால் விவேக வைராக்கியமும் ஸ்வாத்ம பக்தியும் தானாகவே வளரும்.

"அறிவறு கிரியென அமர்தரும்; அம்மா!
அதிசயம் இதன்செயல் அறிவரி(து) ஆர்க்கும்!"
-ஸ்ரீ அருணாசல அஷ்டகம் - 1.

தன் வளர்ச்சியை யறியாமலேயே குழந்தைகள் வளர்வது போன்று அருணாசல பிரதக்ஷிண வலிவால் அன்பர்களின் உள்ளத்தில் விவேக வைராக்கியமும் அனன்னிய பக்தியும் பிரத்யக்ஷமான பலனாக வளர்ந்து வருகிறது.

அருணாசல வாசமும், அருணாசல தரிசனமும், அருணாசல பிரதக்ஷிணமும் ஏன், அருணாசலத்தை சேய்மையில் கருதுவதாலும், அருணாசலத்துடன் கொள்ளும் சத் சங்கத்தால் மனம் விவேக வைராக்கியமுற்று தன்னை நாடி நிற்க பெரும் பலம் பெறுவது எண்ணற்ற மகான்களின் அனுபவமாகும்.

———

# இந்நூலின்கண்

அருணாசலனையே குறிக்கோளாய்க் கொண்ட பக்தனுக்கு சகலமும் அவ்வருணாசலனே யாகிறான். தனிமையில் துணைவனாகிறான். தயவில் தாயாகிறான். சார்ந்து வாழத் தந்தையாகிறான். இரந்து கேட்க எஜமானாகிறான். சந்தேகம் நீக்கிச் சாயுஜ்ய மளிக்கும் சற்குருவாகிறான். அல்லும் பகலும் அனவரதமும் பக்தன் அருணாசலனோடு வாய்விட்டுப் பேசிவரும் இறை காதற்சொற் காந்தங்களே ஸ்தோத்திரங்களாகும். இத்தகைய ஸ்தோத்திரங்களுள் தலையாயதாய் அமைந்துள்ளது இவ்வருணாசல ஸ்துதி பஞ்சகமாகும்.

இந்நூலில் அடங்கியுள்ள பாக்கள் ஸ்ரீரமண பிரானையே பக்தனாகவும் ஸ்ரீ அருணாசலனையே பரமனாகவும் கொண்டதாய், இரண்டிலா, இணையிலா, ஒருவராகிய இவ்விருவரிடையே எழுந்த இன்ப நிறைவாம் அன்புணர்வின் அத்வைத நிறைவை அழகாகக் காட்டுவதாய் அமைந்துள்ளது. மிக உயர்ந்து ஒன்றிய அருள் நிலையில் ஸ்ரீரமண பிரான் தன் தலைவனான ஸ்ரீ அருணாசலனிடம் பேசுகிறார். மகாமந்திர சக்தி வாய்ந்ததாய் , பொருளுணர்ந்து ஓதும் அன்பர்களை ஸ்ரீரமண பகவான் எத்தகைய உயர்நிலையினின்று பாடினாரோ, அவ்வுயர் நிலைக்குக் காந்தம் போல் இழுத்துச் செல்லும் சக்தி வாய்ந்தது இந்நூல்.

அருணாசல ரமண அன்பர்கள் தினமும் ஓதி வாழ்க்கைப் பயனாகிய - புருஷார்த்தத்தை எளிதில் அடைவார்களாக.

ஸ்ரீராம் பிரிண்டர்ஸ் (பஸ்நிலையம் அருகில்) தி.மலை. போன் : 22957, 26957